திருச்சிற்றம்பலம்

# உத்தமவாதம்.

இது
திருத்துருத்தி இந்திரபீடம்
கரபாத்திரசுவாமிகள் ஆதீனம்
பிறைசை. அருணாசலசுவாமிகள்
மாணாக்கர்
கூர். சச்சிதாநந்தசுவாமிகளால்
இயற்றப்பட்டு,

இவரது
தருமபரிபாலன சபையாருத்திரவின்படி
காரியதரிசி
ப. முத்துகிருஷ்ணரெட்டியாரவர்களால்
சை-இரத்தினசெட்டியாரவர்களது
மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1897.
ஏவிளம்பி௵.
இரண்டாவது பதிப்பு.



/

திருமூலர்மரபில்வந்த

சுப்பிரமண்ணியசுவாமிகள் மாணாக்கர்

சதாசிவப்ரம்ம யோகீசுவரர் மாணாக்கராகிய

## தே. சுப்பராயமுதலியார் அவர்கள்.

இயற்றிய

# சாத்துக்கவி.

உலகுயிர்பரமென் றோதியமூன்றும்
இலையெனக்காட்ட வியம்பியவபாலம்
நான்குநடாத்தி நனவாதிமூன்றால்
ஆன்மநிலையை யகங்கையினெல்லிக்
கனியெனக்காட்டக் கடைவிழிநடாத்தி
யினிப்பிறவாநெறி யெவர்க்குமளிக்கச்
சார்ந்தவெம்பகவான் சங்கராசாரியன்
ஓர்ந்துநாட்டிய வொழியாநான்கு
பீடத்திந்திர பீடத்தமர்ந்த
நாடருங்குரவனல் லருணாசலன்
திருவடிமலரைச் சிந்தையிற்கொண்டு
உரைத்தனனிந்த வுத்தமநூலைச்
சச்சிதானந்தத்தனிப்பெயர்
உச்சிதமாகவுவந்துகொண்டவனே.

# அத்தியாய அகராதி.



ஆக அத்தியாயம் ௨௧-க்கு - கவி ௲௨௱௨௯.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | பாட்டு. | அடி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௧ | ௭௭ | ௧ | வுணமை | வுண்மை |
| ௨௫ | ௮௮ | ௧ | மதமுகூர்த்தம் | மதமூர்த்த |
| ௩௰ | ௧௨௭ | ௩ | யிருப்பம் | விருப்பம் |
| ௩௯ | ௧௭௬ | ௨ | கோணுரு | கோணுரு |
| ௪௪ | ௧௫ | ௬ | நினைவளவாம் | னினைவளவாம் |
| ௪௭ | ௩௧ | ௬ | லெவ்வுயிரும் | ல்யாரும் |
| ௫௧ | ௫௧ | ௩ | ஞென்றுத | ஞென்றுத் |
| ௮௬ | ௩௨ | ௧ | ஞட்டத் | நாட்டத் |
| ௯௩ | ௧௰ | ௩ | யிதினும | யிதினுண்மை |
| ௯௪ | ௨௰ | ௩ | பெரரு | பொரு |
| ௯௫ | ௨௪ | ௨ | வீதொ | வீதோ |
| ௯௬ | ௨௮ | ௨ | யீங்குறைத்தார் | யீங்குரைத்தார் |
| ௧௰௨ | ௧௫ | ௩ | கிட்டிப்-பெரிய | கிட்டிப்பெரிய |
| ௧௰௬ | ௧௫ | ௨ | தன் | தான் |
| ௧௫௧ | ௩௭ | ௪ | எதுக்குதன் | எதுக்குத்தன் |
| ௨௰௧ | ௩௰ | ௩ | யறிவாய | யறிவாய் |
| ௨௰௯ | ௬.௧ | ௧ | நானெலு | நானெனலு |
| ௨௨௰ | ௬ | ௨ | வல்லார் | வல்லார்கள் |
| ௨௨௮ | ௫ | ௩ | லென் | லேன் |
| ௨௨௮ | ௧ | ௩ | போதத்தில் | போதத்தில் |
| ௨௩௮ | ௩௨ | ௧ | மெனனல் | மென்னல் |
| ௨௩௯ | ௩௩ | ௧ | பேதித்து | போதித்து |
| ௨௩௯ | ௩௩ | ௨ | சித்தியார் | சிந்தியார் |

# புத்தகவிளம்பரம்.

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| பிரபுலிங்கலீலை உரையுடன் ... ... ... | 2 | 8 |
| கைவல்லிய நவநீத விருத்தியுரை ... ... ... | 1 | 4 |
| வேதாந்த சூளாமணி விருத்தியுரை (2வது பதிப்பு) ... | 1 | 4 |
| ஷை திக்காகிதம் ... ஷை ... | 1 | 8 |
| தத்திவநிஜானுபோகசாரம் ... ... ... | 1 | 0 |
| சர்வமதசித்தாந்த வினாக்கவினாவிடை ... ... | 0 | 12 |
| திருக்குதிருசிய விவேகம் உரையுடன் ... ... | 0 | 12 |
| வாசுதேவமனனம் ... ... ... ... | 0 | 14 |
| பிரத்தியட்சானுபூதிவிளக்கம் ... ... ... | 0 | 8 |
| ஷை காலிகோ பயிண்டு ... ... ... | 0 | 10 |
| வேதாந்த இலக்கணம் ... ... ... ... | 0 | 8 |
| சிவஞானபோதம் உரையுடன் ... ... ... | 0 | 8 |
| தசகாரியமகாவாக்கியம் உரையுடன் (2-வது பதிப்பு) ... | 0 | 8 |
| ஜீவகாருண்ய விளக்கம், சுவானுபூதிவிளக்கம் ... ... | 0 | 6 |
| சொரூபசாரம் உரையுடன் ... ... ... | 0 | 6 |
| சத்தப்பிரகரணம் ... ... ... ... | 0 | 6 |
| உபநிடத விருத்தியுரை ... ... ... ... | 0 | 5 |
| எதார்த்தவாதம் ... ... ... ... | 0 | 4 |
| உத்தமவாதம் ... ... ... ... | 0 | 10 |
| ஷை காலிகோ பயிண்டு ... ... ... | 0 | 12 |
| ஞானவாசிட்டத்திரட்டு ... ... ... ... | 0 | 3 |
| சுகர் கைவல்லியம் ... ... ... ... | 0 | 2 |

விற்கிறவர்:
ப. முத்துகிருஷ்ணரெட்டியார்,
55, வினைதீர்த்தமுதலி தெருவு,
புரசைவாக்கம், சென்னை.

வெளிநாட்டார் V. P. Post மூலமாயிவரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

ஈசூர்-சச்சிதாநந்தசுவாமிகள்
தருமபரிபாலன சபையார் உத்திரவின்படி
ப. முத்துகிருஷ்ணரெட்டியார்,
காரியதரிசி.

சென்னை,
நவம்பர்மீ
1897ஞு

உ

திருச்சிற்றம்பலம்.

# உத்தமவாதநூல்.

---

## சிறப்புப்பாயிரம்.

---

### விநாயகர் வணக்கம்.

சத்திசத்த னிவ்விரண்டிற் சார்ந்துஞ்சா ராதெழுந்த
அத்திமுக னென்றொவ்வா வானந்தம் - முத்திமுதல்
சிந்தனையாய் நின்றதது சிந்தனையிற் றோன்றிந்நூல்
எந்ததுணை வேண்டு மிதற்கு. ௧

### சொரூப வணக்கம்.

அறிவின் ஸ்புரிப்பே யளவில் மதங்கள்
அறிவே நமதுமத மாயின் - வெறியுண்டோ
அங்கே யதைவணங்கி யங்கே யதுவாவோம்
எங்குந் துணைவே றிலை. ௨

### உபாசனாமூர்த்தி வணக்கம்.

அன்பர்க்கதுவதுவா யாங்காங் கெழுந்ததெது
என்சிந் தனைக்குகனென் றேத்துபரம் - என்செய்வேன்
நானென் றிடமில்லே னான்கும் பிடலெங்கே
தானேதா னாகுநிலை தான். ௩

### குரு வணக்கம்.

ஒன்றே யனைத்தென்று மொன்றாதென் றுங்காட்டி
ஒன்றேநீ நானென் றுணர்த்தினான் - குன்றாப்
பிறைசையரு ணாசலப்பே ரெம்மான் குரவன்
நிறைகுறைவ தில்லதா நின்று.

### இதுவுமது.

ஒருபொருளைத் தானே யொருவர்நீ யென்பர்
ஒருவரதை நானென்ப ருண்மை - இருவகையும்
அல்லவா மென்றா னருணா சலக்குரவன்
இல்லதா மெம்மயக்கு மிங்கு. ௫

### மகான்கள் வணக்கம்.

கற்றில ரேனுங் கலங்கா நிலைகற்கில்
மற்றவர்தா ளெற்கு மகுடமே - கற்றுமறி [ளா
யாரிறந்தென் வாழ்ந்தென் னகற்றேங்கொள் ளேம்பொரு
ஆரிதனை யேற்கா ரகம். ௬

### அவையடக்கம்.

ஒன்றே சமஸ்தமுமென் றொன்றாக வேகாட்ட
நன்றாத் தெளிந்தார்முன் னானுரைத்தல் - குன்றா
நகைத்ததே யாயினுமென் னாட்டமதோ கையாத்
தகைத்ததனா லென்னோ தடை. ௭

### ஞானகுருவா லடைந்த மகிமை.

என்றகப்பன் ஞானகுரு வெல்லையிலா வாஸ்திவைத்தான்
என்சொல் மனமெடுத்திங் கீவதற்கோ - என்செய்வேன்

சத்தியிலே யவ்வாஸ்தி தானுங் குறையவிலே
மெத்தமெத்த வீந்தானு மேல். ௮

## நூற்பெயர்.

உத்தமத்தி னுத்தமத்தை யோதுவதிந் நூலதனால்
உத்தமவா தப்பெயர்தா னென்றுமே - மத்திமத்தால்
இம்மையிலே காண்ப மினிமே லுறுபயனை
எம்மையினு மில்லையொப்ப தென்று. ௯

## வரலாறு.

நவநவமா யற்புதமாய் ஞானரசந் தோன்றும்
சுவானுபவ நாட்டமதிற் சொன்னான் - பவமகற்றும்
ஆசா னுரையிதனி லையமறக் காண்கின்றேன்
ஏசாருக் கிஞ்ஞாய மேன். ௰

## மேற்கோள்

தன்னேட்டி னுள்ளவற்றைச் சந்ததங்கண் டிங்கறைவன்
அன்னியவேட் டைக்கண்டிங் கல்லவே - தன்னேட்டைக்
கண்டிருப்பா ரீதேற்பர் காணதா ரேனேற்பர்
கண்டுரைத்த விவ்விரண்டாற் காண். ௧௧

## பிரதிவாதம்.

வஸ்துசித் தாந்த வகைதெரியா துண்மையெனத்
தத்தமதக் கொள்கைதனைச் சாதிக்கும் - உத்தமர்க்கும்
எந்நிலையு மல்லவா மென்னும்வே தாந்திக்கும்
துன்னுசம வாதஞ் சொலும். ௧௨

## விஷயம்.

சாரம்தாக் காண்பவெலாஞ் சாரமல்ல வென்றகற்றிச்
சாரமிஃ தென்றுணர்த்துஞ் சாதித்துச் - சாரமதோர்
எல்லாஞ் சிதாநந்த மெல்லாஞ் சிவோகமெனல்
நல்லோரே யேற்க நயந்து. கூ

## பயன்.

பசுபதி பாசப் பகுப்பாக வல்ல
நிசவனுபூ தித்தலையா நிற்க - வசப்படுத்தும்
பக்குவத்தா லிந்நூற் படித்துணர்ந்து நிற்போரை
எக்கவலை தானுமின்றி யிங்கு. கச

## வேதாந்தத்தைப் பிரதிவாதிக்கு முறைமை.

எல்லாம்பொய் யென்னுதிங் கெல்லா மறிவென்னேம்
எல்லா மறிவென்னு தீதுநான் - எல்லாமென்
றோதோமே யிந்நூலி லோதறியார் நூல்போல
ஓதுதும்யா மிம்முறையே யோர்ந்து. கரு

## வேதாந்தத்திற்கும் மதங்கட்குமுள்ள தாரதம்மியம்.

ஞாயமய ஞேயமய நாடுங்கா லோரிரண்டாம்
ஞாயமயம் வேதாந்த நற்றெளிவே - ஞேயமயம்
மூடமத முன்பின் முரணேனுங் காக்குமதம்
நாடுவரா ரீங்கிந் நலம். கசா

### நிலையொன்றெனல்.

பண்டுவியா சப்பெருமான் பாராது பார்த்தசுகத்
தண்டார்து கூவி யனைவர்க்கும் - விண்டநிலை
ஆரியத்திற் கல்லா தறைந்தேன்பொற் பாத்திரப்பால்
ஆரிகழ்வார் மட்கலயத் தங்கு. கஎ

### தேவதூடணை யன்றெனல்.

தேவநிந்தை யென்பர் தெரியாதா ரிந்நூலைத்
தேவநிலை யர்மங் தெரிவித்து - யாவருந்தான்
கற்பிதத்தை விட்டுக் கலங்கா நிலைநிற்கத்
தற்பதத்தைக் காட்டுமே தான். கஅ

### முறைவழுவு.

அன்னியத்திற் றேட மறையாக்காற் றன்மதத்துக்
கென்ன மகிமையென்பீ ரீதுமதென் - றுன்றுதென்
ஏற்றுமெட்டீர் வத்துநிலை சண்டைசெய நும்போல்வார்
சற்றுமில ராக்குவீர் தான். கக

### அதிகாரியாகா ரினையரெனவும்

### ஆவாரினைய ரெனவு முணர்த்தல்.

தப்புருவாட் குத்தமியுந் தன்னுருவாக் காண்டலெனத்
தப்பகலார்க் கிந்நூலுந் தப்பாகுந் - தப்பகன்றார்க்
காடிமுன் னாடியொக்கு மாவரதி காரியிதற்
கூடுருவிக் காண்பர்தனை யுற்று. உ0

சுவானுபூதியிற் றெளிந்த மகான்களுக்
குணர்வுறுத்த லன்றெனல்.

அரைத்தரைப் பானே னறிந்தார்க்கீ தன்று
ஒருப்படல் சாந்த மொளிர்தல் - அருத்தமெலாந்
தானுத வில்லார்க்கே சாற்றினதாற் றப்பில்லேன்
தானேதா னுதற்குத் தான். உக

ஆ கவி - உக.

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று,

உ

திருச்சிற்றம்பலம்.

# உத்தமவாதநூல்.

---

எம்மதப்

## புலமைத் தலைமை விளக்கம்.

நிலை.

உலகில் மதநிறுத்து முத்தமரே கேண்மின்
உலகமும் யாமு மொருங்கே - நிலையின்றி
எங்கே வெளிப்படுத லெங்கே மறைதனிதம்
அங்கிருந்துங் காணுதென் ணுய்ந்து. க

தன்னைத்தான் காணிற் றலைவன் றுலவல்ல
தன்னுருவ மல்லவெலாந் தானன்று - தன்னை
யறியாத் தகையதனு லாய்துமுன் வல்லீர்
எறியன்மி னென்சொல்லை யிங்கு. உ

உலகிதனைக் கண்டே யுறுந்தீர்ப்பு ளீதும்
புலவர்முன் னன்றிப் புகலில் - இலகுமோ
ஆதலினுற் சொன்னே மனைவருமீ தாய்ந்துய்தும்
யாதும் விகற்பமின்றி யிங்கு. ங

எம்மதமு மேத்துபொரு ளெப்பொருளோ வப்பொருளெஞ்
சம்மதமே கற்பிதத்திற் சம்மதியோம் - எம்மதமுங்

கற்பிதத்தாற் பேதித்தல் கண்டீர் வழக்குளதாய்க்
கற்பிதமன் றென்பதெங்ஙன் காண். ச

எவர்மத மேனு மெமக்கென்ன வுண்மை
எவர்மதத் துண்டோ வெடுப்பம் - அவமாகச்
சொல்லிப் பகட்டோந் தொழுவறியாக் கள்வரென
நல்லவர்போற் காட்டி நடித்து. ரு

அன்னியரா லெவ்விதத்து மாட்சேப மில்லாத
தென்னமத முண்டுலகி லேனுன்னீர் - என்னக்கண்டு
தம்மதமே மேலென்னல் சாற்றினரார் போய்வந்து
இம்மருளை யேனகற்றீ ரிங்கு. சா

எதனை யெதுவெதுவா யெங்குணர்தல் பந்தம்
எதுமுத்தி யொன்று யிருக்க - இதுவெல்லாம்
சொல்லுமின் மாறின்றிச் சொல்லநீர் வல்லரேல்
வெல்லுவா ரின்றி விழித்து. எ

எதிலே யெதுபிறந்திங் கெத்தையுண் டெத்தால்
எதிலே யெதுவா யிறக்கும் - அதுகாணீர்
தேர்ந்தீர் தடிபாவஞ் செப்பி லிஃதேலா
தோர்ந்துய்த லார்கடமை யோ. அ

கற்றவர்க ளாதலினாற் கண்டு மயலறுப்பீர்
மற்றையர்போ லாகாது வல்லீர்காள் - சொற்றதெலாம்
உம்மைவிட வேறில்லை யுத்தமர்க ளென்றுரைத்தேன்.
எம்மையிக லாதுணர்மி னிங்கு. கூ

விடயந் தெரிந்தவர்போல் மெல்லசில கற்று
விடைகொடெனக் கேட்டிடுவீர் மெய்யா-விடைகொடுத்தும்
நேரவழி யிரவரைத் திட்டுவதென் மாப்புலவீர்
நீரறியீர் நுஞ்சிறுமை நின்று. ௧௦

மதங்க ளகற்றோம் வழிபடு மார்க்கம்
மதபேத கற்பிதத்தை வல்லீர் - அதுவாவ
தல்லவற்றைத் தெய்வமென லாதலினால் மாறுவீர்
நில்லுமி துண்மைதனி னோர். ௧௧

பதிசோ தனையிற் பறக்குமே யெந்த
மதங்களுங் கண்டிலிரோ வல்லீர் - பதிதான்
இருக்கலா மென்னுமிடத் தெட்டிநின்று பார்க்கும்
இருப்பமா வோடுமா வென்று. ௧௨

மதமெங்கே ஸ்தாபிக்கும் வல்லநீ ரெங்கே
பதியெங்கே பாசமெங்கே பாரீர் - மதிதான்
உதித்தொடுங்கும் ஸ்தானத்தை யுற்றுநீர் காணில்
எதுக்குத்தான் வீண்வாத மிங்கு. ௧௩

சோதனையி னிற்குமோ சொல்லா லுறுந்தீர்ப்பு
சோதனையா லுற்றதெனிற் சோர்வுறுமோ - சோதனையை
விட்டு விடைகொடென்னல் மேலோர் மொழியாமோ
மட்டின்றிக் கற்றீர் வலிந்து. ௧௪

பேத மபேதமெனப் பேசிரண்டு வாதமதைச்
சோதனையென் றூர்மெய்த் துணிவுடையோர் - வாதம்

இரண்டி லபேதமதே யிந்நூலின் வாதம்
மருண்டுநீர் கொள்ளன்மின் வந்து. ௧௫

எந்தநான் சொந்தநா னெந்தவுடல் சொந்தவுடல்
எந்தசுகஞ் சொந்தசுக மீங்கயலுக் - கந்தவிடை
சச்சிதா னந்தமதாச் சாற்றவலா ரெங்குமிலை
நச்சுமறை யாதியொத்து நன்கு. ௧௬

தம்மைப் புலவரெனத் தாமகங்கொண் டேநிற்கில்
தம்முண்மை காண்பதென்றோ தாநமூவில் - தம்மை
அயலாகக் காணவலீ ராபாசர் போலப்
பயனிலதா மென்னோ படித்து. ௧௭

அறிவோ டறிவனவு மன்றிவே றில்லை
அறிவனவே ஜீவேச ராகுங் - குறிபாவங்
கண்ட மகண்டமெனல் கற்றுணர்ந்தீ ராயாதென்
கண்டவர்சொல் லேலாமை காண். ௧௮

ஞெப்திப் பிரியநிலை நீக்கியொன் றுங் காட்டறியீர்
ஞெப்திப் பிரியநிலை நீரறியீர் - சப்தமாய்
எல்லா மளப்பீ ரினிவல்லீர் கேட்டுய்ம்மின்
வல்லாரைக் கண்டொருங்கு வந்து. ௧௯

சத்தார்த்த வாச்சியார்த்த சார்லட்சி யார்த்தமிவை
யொத்துத் தெளியாதென் னோதுமினே - சத்தார்த்தஞ்
சித்து சடவழக்கைச் சிக்கறுக்கா தெங்ங னுய்வீர்
மெத்தமயல் கொண்டதனை விட்டு. ௨0

காலமொடு தேசங் கழறுஞ் சரித்திரமும்
போலி யுருவுக்கே பொய்யன்றோ - மேலுணர்விங்
கில்லாது கற்றீ ரெதைப்புடித்தீ ரேன்வாதங்
கல்லாதென் னுண்மைதனைக் கண்டு. உக

அசத்துசட துக்க மனித்தமொடு கண்டம்
வசப்படுங் கல்விதனில் வல்லீர் - நிசப்படிப்போ
நாமா ருலகேது நன்காய்ந்தோன் றுய்விளங்கல்
ஆமோ விதற்குறிக் ராய். உஉ

தத்தமையே நல்லரெனத் தாங்கொள்வார் போற்சமயம்
இத்தையறி யாக்குருக்க ளென்கற்றீர் - தத்துவந்தான்
அல்லா வுயிரிலையா லாய்ந்துணர்தல் மாறில்லை
கல்லாதென் னிந்நிலையைக் கண்டு. உங

தொண்டரெனக் காட்டிமதித் தொண்டகலா நிற்றற்கோ
பண்டிதந்தா னல்லகதி பாழ்நரகே - கண்டறியீர்
அப்படியு மிப்படியு மாய்நின்ற தேயறிவே
எப்படிதா னுய்வு மினி. உச

வெற்ற வெளியதனை மெய்யுலகாக் காண்பதெவன்
வெற்றவெளி தள்ளியெங்கே மெய்யுலகங் - கற்றுணர்ந்தீர்
சுத்த மசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ளதில
தத்தனையுஞ் சத்தாத லால். உரு

சிந்தைசெக மொன்றல்ல சிந்தை செகமானீர்
சிந்தைவடி வாக்கரைக்கத் தேர்கிலீர் - சிந்தை

சுயஞ்சோதி லேசமன்றோ தோலாப் புலவீர்
வயப்படுமி னல்லார்பால் வந்து. உச

பசுபதி பாசப் பகுப்பெந்த பாடை
வசப்படுவ தந்தோ மலைவீர் - நிசப்படிப்பொன்
றில்லாது கற்றென் னெவன்செய்யு நங்கர்வம்
நல்லார்பாற் றேராக்கா னன்கு. உஎ

நினைப்புமறப் பின்றி நிலையின்மை காட்டிர்
அனைத்துலக மென்னென் றறியீர் - கனப்புலவீர்
அன்னியமாக் கொண்டளக்கி லானமட்டும் வல்லமையால்
தன்னையெங்ஙன் காண்பதென்றோ தான். உஅ

தன்னைச்சோ திக்கிற் சகநிலைமை தான்விளங்கும்
தன்னிலைமை கோசமைந்துந் தாமன்று - இந்நிலைமை
யாயா தெதைப்படித்தீ ரையையோ மாப்புலவீர்
சாயாது கேட்டுய்ம்மின் சார்ந்து. உகூ

அறிவன்றி யானெனதென் றன்னியமாக் காட்டோம்
அறிவன்றி யிவ்வுலகை யாமோ - பிறிதென்று
கண்டிடவே நன்றாகக் கற்றபுல வீர்மயக்கம்
விண்டெங் ஙனமிருப்பீர் மேல். ௩0

இம்மண் டலத்தளவே யெம்மதத்தோர் கொள்கைகளும்
எம்மண் டலத்தினுமீ தில்லையே - சும்மா
இதுமுத்தி யோபுலவீ ரீதுண்மை கேண்மின்
அதுவிதுவென் றேசுழல்வ தாம். ௩க

மேல்கீழொப் பில்லாமை மெய்யுணர்வே வத்துநிலை
சால்படையக் கற்றுணர்ந்தீர் சாற்றறியீர் - தோல்வியிலா
தெந்நிலைய தேனு மெமையுணர்த்தா தென்னுதவி
இந்நிலையைக் கேட்டெய்ம்மி னிங்கு. ௩௨

கலைமயக்கந் தீராது கற்றுணர்ந்தீர் கேண்மின்
அலைவே தொழிலெமக்கெங் காகும் - நிலைநின்றிங்
கெல்லா மறிவறிவை யீங்குற்றுப் பார்த்திருக்கிற்
பொல்லாமயலெத்தும் போம். ௩௩

உலகிருப்புந் தன்னிருப்பு மோராத் துறவி
யுலகிற் சிவமென் றுணர்வீர் - புலமிக்கீர்
இவ்விருப்பை நீர்கற்கி லெவ்வா றிதுசெய்வீர்
எவ்வநும தன்றியுண்டோ வில். ௩௪

உலக மறிமுகம்போ லுண்மைதனிற் காணும்
உலகமோ முத்தி யுதவும் - பலகற்றீர்
தன்னிழலிற் சாயாது தன்னிலையைத் தானுணர்ந்து
தன்னையக லாததுவே தான். ௩௫

உள்ளஞ் சகத்துருவா யோயா திருப்பதனை
எள்ளளவு நீக்கற் கிடங்காணீர் - உள்ளபடி
என்றிருப்பீர் நும்மநத்தை யீதென்னோ மர்ப்புலவீர்
ஒன்றுபடற் குண்டோ வுவந்து. ௩௬

அறிவளக்கக் கல்லீ ரயலளக்கக் கற்றீர்
அறிவுநா னென்றிங் கறீயீர் - வெறிகொண்டாற்

போலுநுந் தீர்ந்தநிலை போக்கி யடைந்துய்ம்மின்
நாலுவே தத்தி னடு. ௩௭

அகம்பிரம மென்பதனை யாணவத்தால் வைகீர்
அகமென்ப தெந்தவக மாயீர் - மிகப்படித்தீர்
எந்தவத்தை நானுண்மை யீதெல்லா மாறுவதால்
அந்தமெய் நானே யகம். ௩௮

அகமல் லவற்றை யகமென்று கொண்டிங்
ககங்கொண்டு வைவதெவ னந்தோ - அகமீதென்
றுயாதாற் றுக்கசுக மாஞ்சுழலிற் பட்டுழல்வம்
ஓயாப் பிறவிதொறு முற்று. ௩௯

வத்துபரி சோதனையால் மாயா மயலகற்றிற்
சத்தசத்தி னுண்மையன்று தான்விளங்கும் - முத்திக்குத்
தந்திரம்வே றில்லையெனிற் சான்றோரை வைவதெவன்
அந்தமில்கற் றீரிங் கடைந்து. ௪0

தன்மையு முன்னிலையுஞ் சாரும் படர்க்கையிதில்
தன்மையிஃ தென்றகத்தாற் சாற்றுவீர் - அன்மைதனைக்
கண்ணு லறியுமவை கண்ணுமோ மாப்புலவீர்
எண்ணுதென் னுண்மைநிலை யிங்கு. ௪௧

பொருளல் லவற்றைப் பொருளென்று கொண்டு
மருளாற் பெயரிட்டு மாளில் - தெருளென்றே
மாப்புலவீர் நும்மதமு மாளா மதிமய்க்கே
ஆப்புசட கோபர்மொழி யாம். ௪௨

எங்கே சகத்தோற்ற மெங்கே யொடுக்கநிதம்
எங்கே யிறையிருப்பிங் கீதென்று - சங்கையிலாக்
காட்டுவோ நம்மிடத்தே காட்டுமோ நும்மதந்தான்
மாட்டியதாற் பொய்யின் மனம். சங

தெரிந்து மறிதுமெனத் தேளின் கொடுக்கிற்
கரந்தொடுதல் போலுமே கற்றீர் - பரந்துலகம்
தீதென்று கண்டுஞ் சிறிதுளம்வைத் தேயழுங்கல்
பாதகமென் சொல்வேன் பரிந்து. சச

தன்வளவுந் தன்னிமிர்வுந் தாந்தேரா மாப்புலவீர்
அன்னியத்தை யோகிமிர்ப்பீ ரா ஆ - என்னமதி
உள்ளும் புறம்பு மொழியாத் திரிசியத்தைத்
தள்ளியொன்றிற் றுக்கறுதல் சால்பு. சரு

இருப்பதனைக் கண்டிங் கிருந்தபடி நில்லீர்
இருப்பதல தைக்கண் டிருப்பீர் - உருப்பலமாய்
அப்போது ஞெப்தியன்றி யாங்கதனைக் காணறியீர்
எப்போது மோபுலவீ ரில். சசா

எல்லாம் படித்துணர்ந்தா ரிங்குமிலை யெங்குமிலை
எல்லாம் படித்தோமென் றேமாப்பேன் - வல்லீர்
படித்தளவு கொண்டறிவைப் பாங்காகக் காண்மின்
எடுத்தவுடல் வீழ்முன் னியைந்து. சஎ

வாரா துடலினியேல் வந்ததற்கிங் கேதென்னை
ஓரே னென்றினியே லோர்ந்ததெவன் - தீரா

மயல்கடக்கக் கல்லாத மாப்புலவீர் பேச்சேன்
அயல்வியக்கக் கற்றீ ரடைந்து. சஅ

இதுநானென் றென்றைக் கிருப்பம் புலவீர்
உதியா மரியா வுணர்வாய் - அதுகாணும்
வந்த வுடலளவோ மாளாநா னென்றிருத்தல்
எந்தவகை யுய்வோ மினி. சகூ

அன்னியந்தா னென்றிருந்திங் காராயிற் றானலவாம்
தன்னிலக்கா லாராயிற் றான்விளங்கும் - இன்னி
திலாவிடத்திற் சூனியமா மீதுநிலை யென்பீர்
எலாமுணர்ந்தீ ரிம்மயக்க மேன் ருo

இலையெங்குங் கெட்டி யிருப்பதெலாம் போலே
கலைவல்லீர் மெய்யுலகாக் கண்டிங் - குலைவதெவன்
உண்மையெனி னுச முறுவானே னெவ்வுருவங்
கண்ணிலையோ வீதென்ன காண். ருக

வீசுவலை போற்சித்து மேவியத னுட்சடமாம்
பாசமெங்ங னுண்டிதனைப் பார்த்திருக்கிந் - கோசமெங்கு
மில்லையிது செய்துய்ம்மி னேதுக்கோ வீண்வாதம்
ஒல்லையிதி னுண்மைதனை யோர்ந்து. ருஉ

குன்றுத் திருத்தி கொடுப்பதிதென் றோர்ந்தறியீர்
ஒன்றுதே யூகத்துக் கோதணைத்தும் - நன்றாகக்
காட்டவலார் தேடறியீர் காட்டுமோ நம்மாண்மை
ஓட்டுமி னல்லோர்பா லுற்று. ருா

உடனமக்கிங் கன்னியமென் ரோர்ந்திதனி லொட்டா
திடைவிடா நிற்குநிலை யிதென் - றடைந்தொளிரக்
கல்லாது கற்றுக் கழறுவதென் வாயாலே
எல்லா முணர்ந்தவர்போ லிங்கு. ௫௪

எட்டிற் றனையுணர்ந்தீ ரில்லை தனதிடத்தே
யோட்டுமோ யானென்னதென் றுள்ளபடி - யோட்டுமெனி
ஞானென் றிருந்துசுக நன்றாச் சுகிப்பதெவன்
ஆனதிதிங் குண்மைநிலை யன்று. ௫௫

நானு யிருப்பதெது நானன்றாய்ப் போவதெது
ஆனு பதிநுட்பத் தாயாதென் - நானாக
வந்தவுடல் போதுமென்பீர் மாளிலிதிங் கென்செய்வீர்
அந்தோ புலவீர்கா ளன்று. ௫௬

உருவெளித் தோற்ற முலகமெனல் பொய்யோ
தெரிவாலுற் றாயினின்றே தீர்வாம் - உருவெளியே
யென்றிருக்கிற் காமாதி யேதுலைவிங் கேதுணர்ந்தீர்
என்றுவரு மோவுன்ன விங்கு. ௫௭

நும்முடலு மிங்கில்லையா நோக்குமழுத் தத்தாலே
யிம்முறைதான் மேன்மேலே யேற்றுநெறி - எம்மதத்து
மில்லையிஃ தொப்பதென்றிங் கீதுணர்ந்தார் புறச்சென்று
ஒல்லையினிற் கேட்டுய்ம்மி னுற்று. ௫௮

எல்லாரு மென்றிருப்பீ ரெல்லாரு மெல்லாரோ
எல்லா முடலன்றி யில்லையே - எல்லாரும்

நாமென்று ரில்லையதா னுமென்ப தொன்றேயாம்
ஆனு வமுதே யது. ருகூ

பட்டும் பயனில்லை பாவியுடற் கென்றுரைப்பீர்
நட்டிங் குபசரிப்பீர் ஞாயமோ - விட்டிதனை
நன்குணர்ந்து தேகிதனை நாடி யுபசரிக்கில்
அன்றே யதுவீட தாம். சூ0

இலக்கணமுந் தர்க்கமுங்கற் றென்னுதவி யாந்தன்
னிலக்கணங்கல் லார்க்கெம்மட் டெங்கே - கலக்கமுறச்
செய்யுந் துணையல்லாற் றீர்க்குமோ முக்குற்றம்
ஐயோ புலவீர்கா ளங்கு. சூக

தன்னை யடக்கற்கோ தர்க்கநூ றோர்ந்துணர்தல்
அன்னியர்வாய்ச் சொல்லை யடக்கற்கோ - தன்னிலைமை
ஐயமய மாதலினு லாங்கறுத்தற் கேததுவே
உய்யும்வகை கண்டெய்ம்மி னுற்று. சூஉ

ஆரா வியற்கை யவாநீக்கற் கொன்றுகேள்
தீராச் சகமுழுதுஞ் சித்தாக்கிற் - சாராதே
சித்து சடத்துவிதந் தீருவதான் மாப்புலவீர்
இத்தையொத்த முத்திநிலை யில். சூங

உத்தேச லட்சணத்தோ டோதுபரி சோதனையால்
வத்துநிலை காட்டறியீர் வல்லீர்காள் - உத்தேசத்
தன்றி மதநிறுத்தீ ரயுங்கா லென்சிறப்பு
என்றுபெரி யோரடைவீ ரிங்கு. சூச

எம்மதமு முண்மையே யீங்கெவர்க்குஞ் சம்மதமேல்
எம்மதமு மில்லையே யிவ்வண்ணம் - சம்மதமோ
எல்லாமா யல்லவுமா யிவ்வண்ண நின்றதெது
சொல்லாது மோனமாஞ் சொல். ௬௫

மேவுமலை நீர்போலு மெய்யறிவிற் காண்பவெலாம்
மேவுமே காண்பவெலா மெய்யறிவா - நீவிரதை
உற்றகலாக் கண்டிருக்கி லொன்று விளங்குவீர்
கற்றறிந்தீர் நின்மினிதைக் கண்டு. ௬௬

மண்ணாதி பூத மனிதாதி ரூபமிவை
எண்ணு திருக்கற் கிடங்காணீர் - மண்ணாதி
காணது போவதன்முன் காணது நாமிருக்கிற்
கோணு நெறியுண்டு கொல். ௬௭

சிறைப்பட்டான் போலச் சிறையுடலிற் பட்டோம்
சிறையுடலோ தூலாதி தீர்வின் - றிறையேனும்
மூன்றவத்தை தன்னினுமே மூன்றுடலிற் பட்டுழல்வம்
சான்றுநமை யன்றியுண்டோ தான். ௬௮

அழியினுந் தூல மளவிலதாச் சூக்கம்
அழியா ததுகோடி யாங்கே - யழியினுந்தன்
மூல மவித்தை முடிவிலதை நீர்கெடுக்கிற்
சாலச் சிறைதவிர்ப்பே தான். ௬௯

சிறையுடலிற் பட்டநாந் தீர்க்கும்வகை யெண்ணில்
நிறைஞானத் தாலவித்தை நீங்கும் - குறையிரண்டும்

தீரினும் யாதொன்றாற் றீர்ந்தபுல மைத்திறத்தீர்
தீரும்வகை கண்டுய்ம்மின் றேர்ந்து. எ௦

முகமோ டகமலர்ச்சி மூதுணர்ந்தோர்க் கென்றும்
மிகவு மொருபடித்து மேவும் - அகவிளக்க
மாஞ்செல்வத் தாலவ் வனுபவமில் லாநுமக்கே
தாஞ்செருக்கா லொப்பதெங்ங னும். எக

கற்பனைக ளுமல்ல கற்பனைகட் கப்பாலும்
கற்பனைநா மென்றற்கோ கற்றுணர்ந்தம் - கற்பனைதான்
நானல் லவற்றையெலா நானெனலே மாப்புலவீர்
ஏனுமக்குத் துக்கமிலை யிங்கு. எஉ

உடலுமாக் காண்பீ ருறக்கத்தி லுண்டோ
உடலறிவாக் கண்டொளிர்வ துண்டோ - திடமிலையே
கற்றே மெனுஞ்செருக்காற் காணு மொருபயனும்
பற்றையன்றி யெங்கே பரம். எ௩

தேகினா னுக்கண்டு தேகிபா வந்தானுய்த்
தேகிதா னுமுயற்சி செய்யாது - தேகமதாய்
என்னதவஞ் செய்தாலு மேகமாய் நிற்பதுண்டோ
என்னவா றுய்வ மினி. எச

நினைவுலகா நிற்பதனை நீக்க வறியம்
நினைவுபர மாக்கவெங்ங னோர்வம் - இனையநாம்
வேடத்தாற் சொல்லால் வியக்க மயக்குவதென்
பாடத்தான் கற்றேம் பரிந்து. எரு

சுருதியுத்தி யோடு சுவானுபவ மூன்றும்
முரணாது காட்டுநிலை முக்யம் - இரண்டுபடின்
அன்றாகு மாப்புலவீ ரையோவொன் றாய்விளங்கல்
நன்றாகக் கண்டெய்ம்மி னட்டு. எசு

அறிவதுவோ வுண்மைநிலை யன்னியமோ தேரில்
அறிவதுவே யுண்மைநிலை யாகும் - பிறிதன்று
தன்னையறி யாத்தகையாற் றக்கபுல மைத்திறமின்
றென்னகொலோ வைவதிதை யிங்கு. எஎ

அறிவென்று லெண்ணுவதென் னற்பமதா விங்கு
அறிவினிலை நீரறியீ ரந்தோ - அறிவிதுதான்
உள்ளதல வில்லதல வொன்றல்ல பல்லவல
தள்ளலல கொள்ளலல தான். எஅ

அல்லவில்லை யென்னு தனையும் பொருளுன்னு
தல்லவில்லை யென்பவற்றை யாமுண்டென் - றல்லலையே
யின்பென் றுழல்பிறவி யென்றுணர்தற் கேனருமை
நன்குணர்ந்தீர் செரன்மினிதை நன்கு. எகூ

நடைபிணமென் றெவ்வுடலு நாடீ ரிவையே
கிடைபிணமா வன்று கிடக்கில் - கடையுறுப்பும்
போகா திருக்கப் புலம்புவதென் மாப்புலவீர்
ஏகாதோ நம்புலமை யிங்கு. அ0

உடலன்றி யென்று முயிர்கண் டறியீர்
உடலுயிர தாமோ வுணரீர் - உடலுறவாக்

கொள்வதெவன் மாப்புலவீர் கொண்டிழந்தா ரைக்கண்டும்
கொள்வாரார் மேனுங் குறி. அக

அசைவே மனேயாகி யாமென்னிற் கேண்மின்
அசைவுமுத லாமோ வறியீர் - அசைவுதான்
ஆண்பெண் ணலியன் றகன்றபுல மைத்திறத்தீர்
மாண்பிதுவோ வோராமை வந்து. அஉ

அசைவிரண்டா மூட மறிதலோ டென்பீர்
அசைவுமுத லாயுங்கா லன்றே - திசைகாணு
தல்லவல்ல வென்றகலு மப்பாலென் சொல்லறியீர்
வல்லவர்பாற் கேளாதென் வந்து. அ௩

அல்லவற்றை நானெனலி லற்பரினு மென்சிறந்தீர்
அல்லவற்றைக் கோனெனலு மங்ஙனமே - சொல்லளவா
வாதிக்கக் கற்றுணர்ந்தீர் வாயடங்கிக் கேட்டெய்ம்மின்
போதிக்கத் தக்கவர்பாற் புக்கு. அச

ஆண்டா னடிமை யகற்றலல வெம்மதந்தான்
ஆண்டா னடிமையிலை யாழத்தை - வேண்டியே
யாய்ந்துணர்ந்து பூசிக்கி லாயாதென் வைவதெமை
மாய்ந்துநீர் போமளவும் வந்து. அரு

மதவபிமா னந்தான் வகையறியா திந்த
மதவதீ தப்பொருளை மாற்ற - மிதமிலதாய்க்
காகம்பல் கோடியொரு கல்லின்முன் னிற்குமோ
ஏகந்தான் சாதிக்க விங்கு. அசா

என்னை மொன்றுவ லிதுவோ வழகுமக்கு
நன்குணர்ந்து சாரமதை நாடாதென் - இன்சுவையொன்
றில்லாது மெல்லுவர்போ லெல்லா மளந்துரைப்பீர்
வல்லோர்பாற் கேட்டுய்ம்மின் வந்து. ௮௭

எல்லா மதமுகூர்த்த மெம்மிறையென் றேற்பதெவன்
எல்லா மலவெனலை யேலாதென் - வல்லீர்
இறையிருப்பீ தல்லவெனற் கேதுமறியீர்
மறைதெரிந்த தேர்ச்சியிதோ மற்று. ௮௮

எம்மதத்தோர் பாவனைக ளெவ்வா றிருக்கினுமெஞ்
சம்மதமே சிற்சொருபந் தானதனாற் - சம்மதியீர்
இங்கிலையோ ராததினு லேதுபடித் தென்புலவீர்
சொன்னதுவுங் கேளீர் துடித்து. ௮௯

உடலளவோ வான்மா வுணர்வளவோ வான்மா
உடல்போ லுணர்வளவா வுற்றுத் - திடமதுறச்
சொல்லுவதைச் சொன்மின் றுவிதமதா மாப்புலவீர்
வெல்லுவதைப் பார்ப்போம் விழைந்து. ௯௦

நாமுடலென் றேகாணி னண்ணும் மரணவதை
நாமுணர்வென் றேகாணி னண்ணுமோ - நாமுணர்வன்
றென்னத்தான் வாயுண்டோ வேன்கெடுவீர் மாப்புலவீர்
உன்னுமி னெம்மொழியை யுற்று. ௯௧

அவனன்றி யேது மசையாதென் போமெய்
அவனன்றி யேனவா வந்தோ - அவலமாச்

சொல்லிக் கெடுவந் துறந்தார்போல் மாப்புலவீர்
வெல்லுமோ நஞ்சொல் விழைவு. கூஉ

உடலோ டுணர்விரண்டி லுண்மை யுணர்வே
உடலசத்தென் றோர்ந்து முணர்வை - யுடலதுபோல்
நானென் றனுபவிக்க நாடறியாக் கற்றுணர்ந்தம்
ஏனழிவம் வீணகத்தா லிங்கு. கூஙூ

யாம்பூசை செய்கிலமென் றெம்மையறி யாவைவீர்
யாம்பூசை செய்த விரண்டற்றே - வேம்பாகும்
மாப்புலவீ ரீதுமக்கு வத்துநிலை யாய்கிலதாற்
காப்பெவன்கொல் சான்றோர்சொல் கண்டு. கூச

குருவேடங் கொள்வீர் குலைக்கீர் மயலைப்
பெருவாய் திறக்கிற் பிணமாம் - வெருவுமோ
மாயா மயக்க மதிவிட்டு மாப்புலவீர்
ஆயாதென் றக்கோ ரடைந்து. கூரு

அறிவிருக்கக் கண்டுமதை யாயாது போக்கி
அறிபொருளைத் தேர்ந்ததனு லந்தோ - வெறிவிடயந்
தீருமோ மாப்புலவீர் தீர்ந்தார்போற் போதிப்பீர்
தீரும்வகை யீதோ தெளிந்து. கூசா

நாரா யணனுதி நாமம் பலசொல்லி
யாராயா தின்னதென வப்பொருளை - யோராதே
தேகமெலா நாமமிடிற் றீருமோ சிந்தைமயல்
ஏகமோ வல்லவோ வென்று. கூஎ

எம்மதப் போதகர்கா ளிவ்வாறே தத்தமதச்
சம்மதக்கோ ளின்படியே தாநடக்கில் - எம்மயலுங்
கட்டறுமோ தன்னுண்மை காணு விடத்தையோ
விட்டெய்ம்மின் கேட்டுறுதி மிக்கு. கூஅ

எவ்வளவோ கோடிமடங் கிம்மா ணிடமதிகம்
எவ்வுயிரைக் காட்டினுமென் றீதுணர்ந்துஞ் - செவ்விதாப்
பங்கிட்டு நும்மதத்துட் பாழ்படுத்த னீதியோ
இங்கவரை யையமதா வின்று. கூகூ

அறிவு மயக்கை யகற்றறியீர் மேலும்
அறிவை யழுத்த வறிவீர் - நெறியதுபோற்
றன்னை விளக்கத் தகாதிறையு நும்மறையென்
றுன்னறியீ ராசிரிய ரோ. க00

தன்னைத்தான் காணீர் தமைக்குருவாக் கொள்வதெவன்
அன்னியர் சித்தத்தை யழித்தற்கோ - முன்னவனைக்
கண்டவர்போற் சொல்வதெவன் கண்டறியாப் போதகர்காள்
உண்டுகொலோ மோட்ச முமக்கு. க0க

அறிவயலென் றோரிரண்டி லன்னியத்தை யோர்தற்
கறிவே பிறிதன் றறிவை - யறிதற்குத்
தன்னையன்றி யின்றதனுற் றன்னைத்தான் காணுதென்
இன்னதற்கோ வாசிரிய ரீங். க0உ

அறிவை யறிவறிய வல்லவற்றைப் போதித்
தறிவை மழுக்கவலீ ரந்தோ - செறிநரகே

வேறில்லை மாப்புலவீர் விட்டடிமை யாகுமினே
மாறில்லாக் கண்ணவர்பால் வந்து. கoங

நானாக விவ்வுடலை நம்மறிவிற் பற்றன்மின்
நானா வருவுடலை நாம்பற்றேம் - நானாகப்
பற்றினதான் முன்னுடலைப் பற்றினே மிவ்வுடலைப்
பற்றும் பழக்கமதைப் பார். கoச

பற்றறிவை நானாகப் பற்றப் பழகுதுமேல்
பற்றுபோல் வேறுமோ பற்றிதுதான் - பற்றறியீர்
சென்மந் தொலைக்குமுறை தேடுங்கால் வேறில்லை
நன்குணர்ந்தீர் கேட்டுய்ம்மி னன்கு. கoரு

பரத்தைநா னென்றதுவாம் பற்று மகலும்
உரத்தையுர நானென் றுறுதி - திரப்படுமேல்
அன்னியமா தற்குண்டோ வாயாதென் போதிப்பீர்
என்னுறுதி கேட்டுய்ம்மி னிங்கு. கoசா

அன்னியநா னென்ன லகற்றறியாப் போதகர்காள்
என்னநீர் போதித்து மென்னபயன் - உன்னைத்தார்
கேட்டு மகிழ்வதலாற் கேட்பரோ தற்கண்டார்
நாட்டி யுமைப்பொருளா நன்கு. கoஎ

எல்லீரு மோர்முகமா யெவ்வா றெழுந்தாலும்
வெல்லீரித் தீர்ந்தநிலை வேற்றுண்மையால் - வல்லீர்
இதுவென்று சுட்டற் றிறந்ததனைக் கேண்மின்
எதுசெய்யு நம்புலமை யிங்கு. கoஅ

அறிவன்றி நீவிரா ரர்ச்சிப்ப தாரை
பிறிதென்று ஞாயத்தாற் பேசிர் - திறமிக்கீர்
ஐம்மெலா நீங்கி யறிவின்பு மாகுவீர்
மெய்யுணர்வ தாகி விடின். கOகூ

எங்கு மசியீ ரிதுவே கடைமுடிவில்
எங்குந் திரிந்தாலு மென்னபயன் - எங்கும்
விளைந்தாலு நெல்மசிதல் வேறின் றுரலில்
களைந்துய்ம்மி ஞேராமை கண்டு. ககO

ஆரைப் பகட்டவிங்கே யாசிரிய ராகிற்பீர்
ஊரைப் பகட்டவென லுண்மையே - ஆரை
உருவென்பீர் தெய்வ முருவருவ மென்பீர்
அருவென்பீ ரென்னுறுதி யாம். கககு

பருவத் துடலளவாப் பார்ப்போ நமைநாம்
பருவம்போல் மாறிலம்யாம் பார்த்தும் - உருவளவென்
றுன்ன லொழிமி னுணர்வளவா நின்றுய்ம்மின்,
இன்னதெனத் தேர்ந்திங் கியைந்து. ககஉ

மாயா மயமிதென வஸ்துநிலை யின்னதென
ஆயாதிங் குண்டுறங்கற் காய்குவீர் - ஓயாது
கற்றுணர்ந்தீ ரெப்போது கண்ணுகக் காணுவீர்
முற்றுலகு மொக்க முடிந்து. ககங

எல்லா மசத்தாக வென்றுவரு மோவுமக்குப்
பொல்லா மயனீங்கிப் போதகர்காள் - நில்லீர்

நினைப்புமறப் பற்று நிற்கி லொளிர்வீர்
அனைத்துலகுந் தானு யவண். ககச

ஐயந் திரிபின் றறிவிக்கி னுங்கொள்கை
ஐயமின்றி யேற்ப மகற்றுது - வையத்
தெவரு மயக்குவீ ரின்சொலால் வல்லீர்
கவருவதென் றேவுண்மை காண். ககரு

முற்றுந் தெரிந்தவரோ முன்னேனைக்கண்டவரோ
கற்றவரோ சித்தியென்று கண்டபடி - வெற்றவெறுஞ்
சொல்லாலென்வைவதெனைத்துண்டரைப்போல்மாப்புலவீர்
சொல்லுவதைக் கேண்மின் றுணிந்து. ககசா

அல்லவற்றைச் சீவேச ராமென்று நாட்டுவீர்
அல்லவெனப் போவதெவ ஞயுங்கால் - அல்லவற்றை
அல்லவென யாமறுக்க மங்ஙனங்கொள் ளாதிருக்கில்
நல்லவருக் கீதோ நலம். ககஎ

அற்புதத்தா ஞட்டி லளவில் சமயங்கள்
கற்பிதமென் றும்முளே காட்டுவதென் - சொற்பிதற்றல்
இன்னின்ன வாறே யிருக்குமெனத் தெய்வநிலை
சொன்னதெவன் சொன்மின் றுணிந்து. ககஅ

நிந்தாஸ்துதி.

பற்பலவாங் காட்சிகளைப் பார்த்துச் சுகிக்கின்றீர்
அற்பமும்பொய் யென்றே யழிகின்றேம் - சிற்சொருபம்
அன்றிநும் பாக்கியத்தை யாரறிவார் மாப்புலவீர்
இன்றுதெரிந் தேனருமை யிங்கு. ககக

அணுவினு ணுட்ப வணுவே பரமென்
றணுவைக் குழியா வறிவம் - அணுகாது
பூரணமாப் பாவிப்பீர் புண்ணியத்தை யென்சொல்வன்
ஆரணத்துக் கொக்க வறிந்து. கஉ0

எவ்வா றிருக்கினு மெய்பொருளுங் கண்டுவப்பீர்
அவ்வா றுவக்காம லாய்ந்திழப்பம் - இவ்வாறிங்
கில்லாத நுஞ்சுகத்தை யென்சொல்வன் மாப்புலவீர்
எல்லாமு மில்லை யெமக்கு. கஉக

எளிதிற் சுகிக்கவல்லீ ரிவ்வுலக போகம்
எளிதிற்பா ழாக்கியப்பா லின்பந்-தெளிவதனுற்
போகிக்க வல்லமிதோ புண்ணியந்தான் மாப்புலவீர்
ஊகிக்க லாகு முமக்கு. கஉஉ

பொறியாற் சுகிக்கவலீர் போகத்தை யெங்கும்
அறிவானு மெட்டவலோ மந்தோ-அறிகிலிரோ
ஈதானு மெம்பாவ மென்செய்வ மாப்புலவீர்
ஓதாம லோதி யுணர்ந்து. கஉ௩

தனுவாக நின்றோர் தனுவைச் சுகிப்பீர்
தனுவறியா மூடம்யாஞ் சற்றுந்-தனுவயலைப்
போகிப்ப தெங்ஙனமெம் புன்மை தவப்பயனோ
ஊகித்தும் வைவீ ருவந்து. கஉ௪

உணர்வன்றி யாவு முரியீர் துணையா
உணர்வொன்று மேயுரிய மோரி-துணையிலம்யாம்

என்செயினு நுங்கடமை யென்செய்வ மாப்புலவீர்
நன்குணர்ந்தார்க் கின்றோ நலம். ௧௨௫

மாயா மயமன்றி வத்துவுக்கெங் கேதுண்டு
மாயா பலமுடையீர் வல்லமோ-ஓயாது
வாதிக்க மாப்புலவீர் வாயாடி யார்வெல்வார்
நீதிக்கு மாறாக நின்று. ௧௨௬

உள்ளதனை யில்லென்பீ ருண்டென்பீ ரில்லதனைக்
கள்ளமா யாவலபங் கண்டிலிரோ-தெள்ளறிவீர்
ஏதேதெவ் வாறோ யிருப்ப மதுவதுவாய்
வாதாட வல்லமலம் வந்து. ௧௨௭

மனமுமறி யாப்பூசை வந்திப்ப மேழை
கனபூசை நும்மதே காண-இனமுதலோர்
எவ்விதத்தா லொப்பாவ மீங்குமக்குப் போதகர்காள்
எவ்விதத்தி னுங்கடைய ரே. ௧௨௮

வந்திப்பா னேற்பான் வழிபடுத லிம்மூன்றாய்
வந்திப்பீர் யாமோ வகைதெரிந்தும்-புந்தியின்றிப்
போவதினாற் பூசிப்பம் போதகர்கா ளேகமதாய்
ஆவமோ வொப்புமக்கிங் காய். ௧௨௯

எண்ணி யொருபொருளா யீங்கெம்மை வைவதெவன்
எண்ண மிறையுருவா யீங்கிருப்பீர்-எண்ணம்
இறையேனு மில்லம்யா மீதுமக்கோ மேன்மை
குறையிரந்துங் கேளாதென் கொண்டு. ௧௩௦

நெற்றிகுறி யிட்டாலென் நீக்கிலென் முத்தியிலை
புத்தி விகற்பமதைப் போக்காதிங்-கெத்திறத்தும்
என்பேன் பிழைபொறுமி னென்கருத்தை யோராநீர்
ஏன்செய்வே னீரொறுக்கி னிங்கு. ௧௩௧

சேறுநீ ரும்போலுஞ் சித்துசட மிவ்விரண்டுந்
தேறிநீர் கைத்தெறிந்த சித்ததனை-வேறிலையென்
றெச்சில் பொறுக்கிகள்போ லிங்கே யனுபவிப்பம்
உச்சிதமா மென்றே யுணர்ந்து. ௧௩௨

மணற்சோற்றிற் கல்லாய்தல் மாண்பே மிகவும்
பிணக்கறுத்த லெம்மதத்தும் பேணிக்-கணக்கில்லாப்
போதகர்கா ளேற்பதெவன் புண்ணியநும் பாலதே
யேதுகற்று மென்னே வெமக்கு. ௧௩௩

அறிவையணு வென்பீ ரகண்டமா மென்பம்
மறுத்த லெமது மடமை-பொறுத்திடுதல்
சான்றோர்க ளும்பெருமை சற்று மதியிலம்யாம்
ஊன்றியா யாதிங் குனில். ௧௩௪

ஐயந் திரிபிங் ககற்றறியீர் போதிப்பீர்
தெய்வநிலை யின்னதெனத் தீரமாய் - உய்வதெவன்
எம்போலிகள் மிக்கீ ரெம்முள்ளங் கூசுவதென்
எம்பாக் கியமிதுவோ வின்று. ௧௩௫

மெய்யுணர்வு.

அறிவன்றி யுண்டே லனைத்துலகு மீசன்
அறிவன்றி யுண்டென்ன லாகும் - பிறிதென்று

ஞாயத்தாற் சோதனையா னாட்டி விருமுகத்தும்
ஞாயத்தா லேற்குதும்யா நன்கு. க௩௬

அயலறிவ தெல்லா மறிவாகக் கொண்டிங்
கயலர்கச் சாதிக்கி லாமோ - மயலகற்றீர்
அன்னியம்போற் றேர்ந்தறிவு மப்பானீர் சாதிக்கில்
என்னபிழை யுண்டா மிருந்து. க௩௭

அறிவே தனையுலகா வாக்கித் தனையே
பிறிதாகத் தான்காண் பெருமை - அறிகுதிரேல்
அக்கணத்தி லொன்று யசையாது நின்றொளிர்வீர்
மிக்க துவிதமதை விட்டு. க௩௮

அறிபொருளை லக்காக வாய்ந்துணர்ந்தாற் போல
அறிவுதனை லக்காக வாயின் - அறிவாக
மேல்கீழொப் பின்றி விளங்குவீர் மாப்புலவீர்
சால்பிதுவே வேறின்று தான். க௩௯

உருவிடங் காட்சி யுணவுமலம் போகம்
விரிவொடுக்க முண்மை வினோதம் - பெருவுறவு
மண்ணோ நமக்காயின் மாற்றியறி வாவதெங்ஙன்
எண்ணுமை நும்புலமை யே. க௪0

யாருந்தோல் மூடியே யெவ்வாறு பார்க்கினும்யாம்
நீருஞ்சற் றோராது நீக்கறியீர் - யாரும்
இதுவலவே யின்னுறொன் றெப்போ தறிந்தீர்
அதுவிதுவென் றப்போ தறும். க௪க

ஐயறிவு மோரறிவை யன்றி யிருக்குமெனில்
ஐயறிவுந் தாமே யறியாதென் - ஊையுணர்வுந்
தள்ளியவ் வோரறிவைச் சாயாது காணிலின்ப
வெள்ளமதா நின்றிடுவீர் மிக்கு. ௧௪௨

அறிவைச் சுகிக்கறியீ ராகுமோ வென்பீர்
குறிப்பாவு மெய்யென்பீர் கோதே - திறமிக்கீர்
என்சொலினு மெய்யாமோ வென்றுமறி வேயுண்மை
நன்குணர்ழி னெஞ்சொ னலம். ௧௪௩

உண்டே னுறங்கினே னோடினேன் பாடினேன்
கண்டேன் விழுந்தேன் கலங்கினேன் - கொண்டேன்
எனும்விவகா ரத்திலெலா மெவ்வா றிருப்பம்
அனுதினமு நாமறிவ தால். ௧௪௪

எம்மையஞ் ஞானியென்பீ ரேதும்றி யீர்ஞானம்
தம்மை யயலாகத் தாமறிவீர் - எம்மயலும்
இல்லையென்பீர் நீக்கறியீ ரெல்லா விகற்பமுந்தான்
சொல்விலே வல்லீர் துணிந்து. ௧௪௫

வெளியன்றிச் சோதனையில் மெய்யுலக முண்டேல்
தெளிவன்றி யுண்டாந் திரிபிங் - கெளிதறியத்
தக்கதிதன் றெத்திறத்துஞ் சாத்திரிகாள் நும்மதத்தை
எத்திறத்தாற் சாதிப்பீ ரிங்கு. ௧௪௬

உருவருவ முள்ளதில தொன்றுபல வின்னும்
தெரிவுசட மாதியன்று தெய்வம் - தெரியவிதைச்

கற்றமுறை யிங்ஙனமோ கட்டறுத்திங் குய்யும்வகை
உற்றுணரா தென்னோ வுவந்து. ௧௫௮

வம்பா லெமைவெல்வீர் வாய்மையால் வெல்லறியீர்
வம்புமத மென்றிடுதல் வாஸ்தவமே - வம்பெல்லாம்
தன்னை விளக்கத் தகாததினால் மாப்புலவீர்
என்னதடை போக்கிடுதற் கிங்கு. ௧௫௯

நினைப்பே பதியதனை நீங்கி னினையீர்
நினைப்புதித்த போது நினைப்பீர் - நினைப்பையே
பூசிப்ப தாகுமன்றோ புத்தியிலீர் யூகிக்கப்
பூசிக்கத் தேராதென் புக்கு. ௧௬௦

நினைப்புதித்த போது நிகழு மெதுவும்
நினைப்பிழந்த போது நிகழா - நினைப்பன்றிக்
காட்டீ ரெதுவும்போற் கண்டறியீர் தெய்வநிலை
நாட்டுவதென் வேறாக நன்கு. ௧௬௧

நினைப்பே சகத்தா நினைப்பே யுயிராம்
நினைப்பே பதியா நினைக்கில் - நினைப்பன்றிக்
காட்டி னுலகதனைக் காட்டவலீ ரேனையவை
நாட்டுவீர் நும்மடமை நன்கு. ௧௬௨

ஞானம் விடயமென நண்ணும் பிரத்தியட்சம்
ஆனவிரண் டுங்கண்முன் னாகுமே - ஏனையவை
நம்பிக்கை யையமே நன்குணர்ந்தீர் கேட்டுய்ம்மின்
இம்ப ரனுபவத்தை யிங்கு. ௧௬௩

விடயகாட்சி தன்னால் விருப்புவெறுப்போடே
மடமையின்பதுன்பமலினங் - திடமின்மை
அல்லல் கலக்க மழியாத் திகிலையம்
எல்லையின்றி வந்திடுமே யிங்கு. ௧௬௪

ஞானகாட்சி தன்னா னணுகாமேற் சொன்னவைதாம்
ஆன வுவப்பதனை யாரறிவார் - ஈனமுறச்
சின்னாபின்னமதாஞ் சித்தத் திரிபகற்றும்
இன்னநிலை போலெங்கு மில். ௧௬௫

இம்மையிலே ஞானசுக மீங்கடைந்து ஞானத்தால்
நம்மையறி யாமயலு நாமகல்வம் - நம்மை
மறவாத நாட்டமதை மாறா தடைவம்
குறைவெல்லா நீங்குங் கொடை. ௧௬௬

ஞானகதக் காட்சியினு நல்லகதி வேறில்லை
ஞானமே மேலென்று நாட்டினார் - ஈனமிலார்
கண்டிலிரோ மாப்புலவீர் கண்டவர்பாற் கேட்டுய்ம்மின்
விண்டிட வெல்லாமயக்கு மேல். ௧௬௭

ஆரையா ராராக வாயா தனுதினமும்
நீரையோ பார்த்துவப்பீர் நீரறியீர் - நீரா
பசுபதி பாசப் பகுப்பின் வழக்கை
வசையின்றி நீக்குவீர் வந்து. ௧௬௮

எல்லாங் கறிவா லெடுத்தெதவையு மஞ்சாது
வெல்லங்கு வார்க்கன்றோ வீடந்தோ - இல்லதென்

ரோராதிங் கல்லவற்றை யுண்மையெனக் கொண்டகற்றி
தீராதே யெம்மயலுஞ் சென்று. ௧௬௯

ஆர்க்குப் பிறப்பிறப்பிங் காரென்று தேடறியீர்
பேர்க்கோ படித்திட்டீர் பேறறியீர் - ஆர்க்குக்
கடமையிதென் றெண்ணீர் களையா மயக்கே
நடந்தும்மின் மேலோர் நடை. ௧௭௦

ஸ்மரணை யன்றி யெங்குந் தனித்தொன்றுங் காட்டோம்
ஸ்மரணை யென்றுங் காட்டறியோஞ் சற்றும் - ஸ்மரணநிலை
ஆய்ந்தொளிர்தலெப்போதிங் கன்னியத்தா லென்கண்டோம்
மாய்ந்திடுமுன் வாரு மகிழ்ந்து. ௧௭௧

அறியாமை மானதமு மப்பாற் றனுவும்
புறமனைவி யாதியெலாம் பொல்லாச் - செறிதுயர்செய்
சத்துருவே யானுற் றனித்திடுத லெங்ஙனம் யாம்
இத்திறத்தை யோர்தும்யா மிங்கு. ௧௭௨

குளறிவழி வாயென்று கூறுவீ ரெம்மைக்
குளறி வழிதனுங் கூற்றே - குளறுதருங்
வத்துபரி சோதனையில் வந்தாலப் போதெரியும்
இத்திறத்தா லென்கண்டீ ரிங்கு. ௧௭௩

பவ்வீ யுடலுறுப்பிற் பட்டக்கா லாஞ்சேமென்
றெவ்வா றருவருப்ப மிங்ஙனநாம் - பவ்வீயா
நின்று சகிப்பதெவ னின்மலமா நிற்கறியோம்
இன்றுநமக் கேன்வா யிவண். ௧௭௪

மறைப்பென்ன செய்யு மலவிசர்ச்ச னத்தில்
மறைப்பெவர்க்கு மட்டிகட்கே வல்லீர் - மறைப்பேது
தத்துவசோ திப்பிற் சகிப்புதெவன் சற்றுமுளம்
எத்திறத்தாற் சாதிப்பீ ரிங்கு. ௧௭௫

அவ்வவக் கோணற் ககம்புண்ணு நிற்பீர்
அவயவ் கோணரு மாகி - நவையிலராக்
கண்டு களிப்பதெவன் கல்லீர்தங் கோணலற
உண்டுகொலோ நாண முமக்கு. ௧௭௬

உபாதித் திரிய முருளினு மாகோம்
உபாதிநா மன்றென்ப துண்மை - உபாதி
விகாரமே யென்சகிப்பீர் விட்டுநிற்கக் கல்லீர்
விகாரம தா னும்புத்தி மெய். ௧௭௭

வெய்யோன் மறைபடுமேல் மேகத்தால் வேதாந்தம்
மெய்யா மறைபடும் வேறென்றால் - பொய்யாதே
எத்திறத்த தானு மெவரானு மாப்புலவீர்
சித்தம்வைத் துய்ம்மின் றெரிந்து. ௧௭௮

குடம்பை தனிக்கப்புட் கூடகன் றற்றே
உடம்புநமக் குள்ள வுரிமை - மடந்தவிரக்
கற்றுணர்ந்தீ ருன்னுவிரேற் கண்கலக்க மில்லாதென்
மற்றென்றிங் காவிரோ வந்து. ௧௭௯

துருத்திபோல் மூச்சதனைச் சொந்தமென்று நப்பித்
தெரிக்கொணுத் தத்துவத்திற் சிந்தை - யொருப்பட்டு
நிற்பதற்குக் கல்லாதென் னீக்குமோ சிந்தைமயல்
பற்பலவாக் கற்ற படிப்பு. கஅ௦

ஆண்பெண் ணலியிவற்று ளெல்லமொன்றுந் தேகமலம்
மாண்புடையீ ரிம்மயக்கை மாற்றுதென் - காண்பவர்க்கு
வல்லீ ரெனக் கற்றீர் வல்லமையா லென்னபயன்
கல்லாக்காற் றன்னுண்மை கண்டு. கஅக

இருப்பளவு மென்னி லிறந்தபின் யாதுக்
கிருப்பானைக் காணலரி தென்னில் - தெரிப்பானைத்
தேடாதென் மாப்புலமை தின்று கொழுக்கற்கோ
நாடாரார் தீவரத்தி னன்கு. கஅஉ

இன்னபிறப் பேயென்றிங் கெவ்வுயிரு மில்லையே
இன்னபிறப் பேயென்றிங் கேன்காண்பீர் - இன்னமயல்
விட்டுயிர்நாட் டங்கொள்ளில் மேவுமோ கர்மாதி
கட்டமென்ன வென்சொல்லாற் காண். கஅங

உடல்சார் புயிர்ச்சார்பென் றேரிரண்டா தாகும்
உடல்சார்பு சுற்ற முயிர்ச்சார் - பிடைவிடாப்
போகமே யின்னதனைப் போக்க வகையுறியோம்
ஏகமாவ தெங்ங னினி. கஅச

தன்னைத்தான் போகிக்கச் சாராவே நாற்கதிகள்
தன்னைத்தான் போகிக்கத் தாமறியீர் - என்னகதிக்
குள்ளாவ மென்றலறீ ருள்ளா னதுபோலக்
கள்ளமனப் போதகர்காள் கண்டு. கஅரு

தன்னைத்தான் போகித்த ருனுண்டோ வென்றிகழ்வீர்
அன்னியமெல் லாநிலையோ வார்சொல்வார் - அன்னியமே
நானெனலும் போகமுந்தா னட்டமுறு தேதுண்டு
நானெனலை முன்னுய்து நன்கு. கஅசா

அல்லவல்ல வென்றேகு மாயுங்கா ஞனெனலை
அல்லவெனு நீதுண்மை யாமென்று - நல்லவர்பாற்
றேர்ந்தக்காற் போகநிலை தேருமே தானுகச்
சார்ந்துய்ம்மின் றந்நிலையிற் றும். கஅஎ

இவ்வாறு பற்பலவா யேறிமலை யுச்சிநின்று
ஒவ்வா வனுபூதி யுண்மையெலாஞ் - செவ்விதாக்
காருண்ணியத் தால்வியாசர் கட்டடங்கா தேகூவிப்
பாருளார்க் கோதப் பகிர்ந்து. கஅஅ

கேட்டவதி நீவரெலாங் கிட்டித் தனைத்தெளிந்தார்
கேட்ட மதத்தரெலாங் கிட்டியே - வாட்டமுடன்
வாதித்துப் பின்னிட்டார் வாயாடி சிற்சிலர்தாம்
வாதித்தல் பின்னே வரும். கஅகூ

---

புலமைத்தலைமைவிளக்கம் முற்றிற்று.

சிறப்புப்பாயிர முட்படச் செய்யுள் உகO.

உ

திருச்சிற்றம்பலம்.

ஆஸ்திகக் கற்பிதக் கழற்றி.

# உபயமத சித்தாந்த வாதம்.

---

உபயமத சித்தாந்தி யோகோகோ வையா
வுபயோக மில்லாமை யோதேல் - அபசாரம்
வாய்க்குமென நின்று மறுத்துமுன்பின் சென்மந்தான்
வாய்ப்பதெவ னென்றான் வலிந்து. க

இல்லையுல கென்பதுமெய் யீங்காய்ந்து நில்லாதார்
இல்லரோ சென்ம மினியென்றார் - வல்லார்
பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானு மாணுப் பிறப்பு. உ

அல்லவெலாந் தெய்வமெனற் கங்ஙனஞ்சொன் னரென்னில்
அல்லவெலா நானெனற்கிங் காகாதோ - அல்லவெனில்
எங்கே முதன்மயக்கம் யாரா லுடல்வருகை
அங்கவரீ வானே னது. ந

அவரிட்ட மென்னி னதற்குவிதி நீக்கேன்
எவர்க்குமனு கூலத்துக் கென்னில் - எவர்க்கெதுவோ
கட்டடங்கி லின்பமதேற் கட்டெதனு லிந்தவின்பம்
இட்டமவ ராலென்னி லிங்கு. ச

இட்டபடி செய்தற்கிங் கெம்முயற்சி யென்செய்ய
இட்டமதற் கென்னீதி யென்னுதே - துட்டமொழி
யென்னில் விதிப்பானே னீதுமறை நாமன்றேல்
அன்னதுவு ஞாயமல்ல தாம். ரு

ஈசனுரை யென்னி லியற்றுவனே மூடனுந்தான்
ஈசனுரை யன்றே யிருக்கட்டும் - வாசகமேன்
பாவத்தா லின்பதுன்பம் பாலிக்கு மென்றுரைக்கில்
பாவமெங்ஙன் பாலகர்க்குப் பார். சா

தன்முயல்வா லல்லவிது சந்ததியால் வந்ததெனில்
தன்முயல்வால் தீர்வதெங்ஙன் றன்றோரார் - என்மதிதான்
என்ன படித்து மிஃதுணர வல்லாதார்
என்னிருந்தும் போயதனு லென். எ

தன்முயல்வா லேனுந் தவிரா தருளன்றித்
தன்முயல்வா லன்றியரு டான்வருமோ - தன்முயல்வ
தேதென்னிற் கட்டளைதா னீங்கிவனே யென்றெழுகல்
மீதுளதோ முத்திவித்து வேறு. அ

தன்செயலால் வாராமை தன்செயலாற் றீர்வதெங்ஙன்
தன்சந் ததியார்க்குத் தான்வேறோ - என்செய்வேன்
தந்தைகொலை செய்யின் றனயனையுங் கொல்வதுண்டோ
அந்தோ விதென்னமதி யாம். கூ

உடலாலொன் றன்றோ வுணர்வாலொன் றுமோ
உடலுக்கு வேறோ வுணர்வு - உடலாமோ

செய்யுமோ செய்கைபல தீண்டா துடலதனைச்
செய்யுமுத லாமோ செடம். க0

உணர்வுமுத லோவென்றிங் கோதிலன்று மாறல்
உணர்வாலன் றேமூதோ துண்மை - புணர்வதனு
லன்றித் தனித்தன்றே லாசையா லன்றுகெட்டார்
அன்றே வஃதுணர்வ தாம். கக

ஆசை கொளலு மறுத்தலு மிவ்வறிவே
ஆசையற லேமுத்தி யாமன்றே - ஆசை
தவிராமை யேநரகஞ் சார்த லுணர்வே
தவிருநுஞ் சித்தாந்தந் தான். கஉ

தன்னைவே றுக்காணுந் தன்மயக்கம் போக்கியக்கண்
தன்னிறையி னுண்மைநிலை தான்விளங்கும் - இன்னதே
வள்ளுவனார் தங்கருத்தும் மாறில்லை மாப்புலவீர்
தள்ளியிதைத் தேர்ந்துய்ம்மின் சார்ந்து. கங

நினைவெழுச்சி யெங்கே நினைவொடுக்க மெங்கே
அனையவிடங் காண வறியீர் - இனையநீர்
சொல்லுங் கடவுணிலை தோற்ற நினைவளவே
வல்லீர் நிலையெதுவோ வஸ்து. கச

பாவப் படுபொருளேல் பாவனையைத் தள்ளியெங்கே
பாவத்துக் கப்பாலேல் பாவிப்பேன் - பாவிப்பை
அன்றிப் புலப்படா தாமே நினைவளவாம்
என்றும் பொருளன் றிது. கரு

இருப்பதனைப் பாவிப்ப தென்னி லதுமெய்
இருப்பதனைக் காணவிஃ தேன் - இருப்பதுதான்
காணப் படாதென்னிற் காணுமோ பாவனையால்
காணப் படுமேல் கதை. ௧௬

பாவனையால்முத்திபெற்றார்பாவனைபொய்யன்றென்னில்
பாவனைதானென்றவொன்றுப்பாவித்தல் - கேவலத்தும்
இல்லையதாற் பொய்யாகு மின்றேனும் வஸ்துபொய்யோ
சொல்லினுமக் கங்குளதோ சொல். ௧௭

நமக்கங் கிலையே நண்ணுவதங் கின்றே
நமக்கங் கிலாதெதினா லூடீர் - நமக்கங்கே
யில்லை நினைவதனா லென்னி னினைவளவு
இல்லையுண் டெங்கே யிறை. ௧௮

நினைவாகி யன்றாகி நிற்பதிறை யென்னில்
கனவுலகும் பாழுமோ கர்த்தா - அனையவல
தென்னிலது வாங்கணிக்கற் கேலாதேற் பேச்சுமக்கேன்
தன்னையறிந் தார்க்கே தகும். ௧௯

அகண்டபரி பூரணமா யாவதிறை யென்று
புகன்றவவர் தாமோ புகல்வர் - அகன்றுலகில்
யாவருமே யென்னிலிறை யீதென்று கண்டறியார்
ஆவதனு மானமுண்மை யா. ௨௦

அனுமான மன்றியுண்மை யாரறிய வல்லார்
அனுமான மென்பதெதிங் காகும் - தனுவாதி

யென்னிலத னுண்மையுரு வீதென்று காட்டுதியேல்
அன்னதனு னுண்மையிறை யாம். உக

கற்றுமெதிர் நின்றகருங் காக்கைவெளி றென்பதொக்கும்
வெற்றவெளி தள்ளியெங்கே வேற்றுருவம் - அற்றேல்
இருப்பதாக் காண்பதெவ னில்லதாப் போக்கேன்
இருப்பதுரு மாறிற்றோ வில். உஉ

தெளிந்தார்க்குங் கான றெரிவதுபோற் காண்டல்
உளந்தணிவுக் கேதென் னுயிர்க்கிங் - களந்தறியாக்
காமாதி யாலென்னிற் கண்டுதெளி யாவுயிர்க்கே
யாமே பசிக்கேனு மாய். உங

வெற்றவெளி யின்றிரிபோ மேவுமுல கின்றிரிபோ
வெற்றவெளி யாத்திரிதல் மேவுலகேல் - வெற்றவெளி
யாமோ வுலக மயலாகி லென்னமதி
யாமோ வலைதுரும்ப தாய். உச

பசிதாக மற்ற பரமான்மா வுக்கேன்
நிசமேனை யர்க்கெங்ங னீக்கம் - பசையிலதாப்
போவதெவன் ஞானிக்குப் புத்திமயக் கற்றதெனில்
ஆவதுல கெங்கே யவர்க்கு. உரு

அவர்க்கிலதாப் போகி லனைத்துலகு மின்றோ
அவர்க்குளது முன்னரெதி னாலே - தவிர்த்தலிலா
வஞ்ஞானத் தாலே லதுவன்றி யெங்குலகம்
அஞ்ஞான மென்பதெதிங் காம். உசா

அறிவாற்பூதத்தா லயலேது வாலே
வெறுமையதா யெப்பொருளு மேவும் - அறிவாலே
ஆக்கி னிலேபிறழா தப்பாலப் பாலதா
யாக்குமது முத்திநிலை யாம். ௨௭

மற்றவற்று லஞ்ஞான மாயாது முத்தியெங்ஙன்
இற்றதே தீர்வையென வீங்கெல்லாம் - அற்றவிடஞ்
சூனியம தாமென்னிற் சூனியமென் றேயுணர்தல்
சூனியமோ வல்ல துணிந்து. ௨அ

அன்னியத்தை நானெனலே யாகு முதற்கோணல்
என்னவென்று சொல்வனவோ யேனையவை - அன்ன
தறியாமை சீவனு ணுமென்னிற் சொல்லே
குறிதேக மன்றியுண்டு கொல். ௨௯

நெஞ்சிற் குறியிலேயே னீயுடலாக் காண்பதெவன்
நெஞ்சு கனவதனி னீதியே - நெஞ்சுதனில்
ஆவியங்ஙன் காண்பதெனி லாவியுடற் பாவமறில்
ஆவியங்ஙன் காண்பதெவ னுங்கு. ௩0

ஆவியெனற் கர்த்த மறிவுருவ தாயிற்றே
ஆவியிலக் காயி னயலாமா - மேவும்
கனவி லவயவியாக் காண்பதினு லெவ்வுயிரும்
நனவி லுடலிலக்கே நாடு. ௩௧

ஆவிதனை யாவி யறியா தருவமதால்
ஆவியுரு வெங்கே யறியுமோ - ஆவிக்

கியற்கையதேற் சித்துசட மீதென்று காட்டில்
இயற்கையதிங் காகு மியைந்து. ௩௨

வியாபகமே சித்து வியாப்பியம தேனே
வியாபகத்தை யன்றி யெதுமேவும் - வியாபகத்தில்
இல்லா விடமில்லை யில்லாப் பொருளில்லை
எல்லா மதுவன்றி யில். ௩௩

இயற்கை யவத்தைதொறு மேன்காணு மூன்றாய்
இயற்கையன் றென்பதிதிங் கீதால் - செயற்கையே
தானலதைத் தானென்று தான்கண் டிருப்பதனால்
ஏனுமக்கு வீண்வாத மிங்கு. ௩௪

சர்வம் பிரமமெனச் சாற்ற லசத்தியமே
சர்வமுநீ ஞெப்தியன்றிச் சாற்றுதியேல் - சர்வமுந்தான்
ஞெப்திவடி வாமென்னில் ஞெப்தி வடிவிதுவோ
ஞெப்தியென நீகண்டு நில். ௩௫

வாய்மூடிச் சென்னிதனை வாங்குதல்போ னின்மொழிதான்
காய்சினத்தா லென்று கழறுதியேல் - பேய்மதத்தோய்
சோதனையில் ஞெப்தியன்றித் தோன்றவொன் றுங்காணவில்லை
யாதலினு லுண்மைமொழி யாம். ௩௬

நம்மிலுல கோவுலகி னுமோ விதையாய்தி
நம்மிலுல கேனுடலா நாமிருப்பேன் - நம்ம
திருப்புலகி லென்னி யிலாதுலகேன் றாக்கத்
திருப்பிரண்டுங் காண்பதரி திங்கு. ௩௭

தூக்கப் படுவோன் றுயரம்போ ருனிருந்து
மீக்கொ ளுயர்விழிவு வேண்டாது - தாக்கற்று
நின்று விழி துயிலாய் நீங்கா திருக்குநிலை
யன்றே யதுமுத்தி யாம். ௩அ

உண்டுறங்கற் கேயன்றி யோயாப் படித்தவெலாங்
கண்டறியா யாதொன்றுங் கற்றுணர்ந்தும்-உண்டுகொலோ
அண்டர்பிரான் பாவனையு மாயி னினைவன்றிப்
பண்டிதத்தா னுய்யாய் பதைத்து. ௩கூ

மூன்றவத்தாக் காட்சிகளு மூன்றவத்தை யன்றியெங்கே
மூன்றவத்தை தானுமெங்கே மூடமன்றி - ஊன்றியதூஉம்
எங்கே யறிவன்றி யீதுநமை யன்றியெங்கே
எங்கும் நமதுருவ மே. சம்

தூலமொடு சாயையும்பின் சூனியமே காட்சியெனல்
சாலுமே காட்டெமக்குத் தான்மூன்றும் - ஏலும்
அவத்தையென்ப தென்னை யதுநிலைமை யென்பர்
அவத்தையெது மூன்றென்ப தாம். சக

நனவு கனவோடு நண்ணுஞ் சுழுத்தி
இனையதேல் மூடமெதிங் கென்னில் - அனையதூஉம்
தன்னை மறத்தலது சைதன்னிய மேயறிவு
இன்னவிரண் டன்மைநா மிங்கு. சஉ

ஈதெல்லா நம்மயக்கே யீசன் செயலன்று
ஓதுவதுங் கேட்டுணரீ ருஞ்செருக்கால் - ஈதெல்லாம்

ஈசனதென் றேதிநடித் திங்குண் டுறங்குவீர்
பாசமெங்ங னீங்கும் பறந்து. சங

நாந்தானே மூடனென்றும் நாமே விவேகியென்றும்
ஆந்தகைமை மெய்யெனினு மாகோமே - நாந்தாம்
இருபோது மாறு திருப்பதினால் வல்லோய்
தெரிந்துய்தி நாமிதெனச் சேர்ந்து சச

ஆஸ்திகரே கேண்மி னறிவலாத் தெய்வமிலை
சாஸ்திரந்தா னென்சொலுமோ சாற்றுமினே - ஜாஸ்தி
வசனமே யல்லால் வழிபடீ ரென்றும்
நிசவசன மீதென்று நின்று சரு

பொருளிடங் காலமிவை பொய்யன்று மெய்யே
தெரிவாம் ஸ்மரணையன்றிச் செப்பில் - ஒருபோதுங்
கூடா தெனிலதனாற் கூடாப் பசுபதியும்
நாடாதென் னிந்நிலையை நன்கு. சசா

அறிவன்று தெய்வமெனி லாகுமது மூடம்
பிறிதே லசத்தாதி பேதம் - உறுமதனால்
எம்மதமுஞ் சம்மதமன் றீங்கதனாற் கண்டுய்ம்மின்
எம்மொழியே யுண்மையென விங்கு. சஎ

யார்வந்தார் யார்போனா ரெல்லா மதிமயக்கே
ஊருளதோ பேருளதோ வுற்றுணரில் - பேருலகோ
எங்கெங்குந் தோண்டீ விருத்தல் வெளிமயமே
எங்கும் வெளியன்றி யில். சஅ

வெளிநாட்டுஞ் சிந்தனையு மீக்கொள்ளக் கொள்ள
வெளியுருவாஞ் சிந்தனையு மீளா - தொளிமயமாய்
நின்றுசிதா நந்தமதாய் நீங்காச் சுபாவமதாம்
என்றுஞ் சிவோக மிது. சகூ

ஐயறிவை யன்றி யனைத்துலகங் கில்லாதென்
ஐயறிவின் றேனு மவையிலவோ - மெய்யதே
ஆயுங்கால் வெற்றவெளி யாவானேன் றோற்றமதே
ஆயதனு மின்மைநிலை யாம். ரு௦

தோன்றி மறைவானேன் றோற்றம் பொதுச் சிறப்பேன்
ஊன்றில் விருப்புவெறுப் பொன்றுவதென் - ஆன்றவிதிங்
கொன்றாகக் காணுதென் றேன்றாத பாசமெவன்
நன்றாகி யல்லாதென் றடு. ருக

தோன்றுங்காற் காமாதி தோன்றுவதென் னிற்பதெவன்
தோன்றி யுடலொழிவாய்த் தோற்றமெவன் - ஆன்றறிவீர்
காட்சி விநோதங் கணக்கிலதாத் தோற்றுவதென்
நீட்சிகுறை வேன்வாழ்வு நின்று. ருஉ

இன்னு மனந்தமுள வீங்கிவற்றால் வல்லோர்கள்
சொன்னதீர் மானமவை சொல்லுதும்யாம்-அன்னவைதாம்
எல்லாஞ் செயற்கை யென்று மீங்கியற்கை யென்றுமிவை
யெல்லாம்பொய் யென்று மினி. ருங

இன்னதின்ன தென்றுமவர்க் கேற்ற மதிக்களவாய்ச்
சொன்னநிலை யாயாது தூற்றுவதென் - தன்னிலைமெய்

யென்றிதுவோ கற்றநெறி யீதுணரீர் மாப்புலவீர்
பொன்றுமுனர்க் கண்டுய்ம்மின் புக்கு. ருச

தன்னையறி யும்மறிவு தானுன் ஸியமல்ல
அன்னியமு மல்லவிதிங் காயுங்கால் - எந்நிலையுந்
தானுகித் தானலதாய்த் தங்குமிதைக் கண்டுய்ம்மின்
ஆனு மதிப்புலவீ ரங்கு. ருரு

எதையான்மா வென்பீ ரெதைப்பரம தென்பீர்
எதையுலகென் பீருன்னீ ரென்றும் - கதைபோலக்
கற்றதனு லுண்மைநிலை காணக் கிடைப்பதெங்ஙன்
கற்றறிந்தீர் துக்கமிலை காண். ருசா

அறிவே யனைத்துமா மல்லவுமா மென்றல்
அறிமினுறக் கத்துவிழிப் பாங்கே - அறிவதுவே
கண்கண்ட தெய்வங் கடையரே யல்லவென்பார்
கண்கண்டால் வேறுமுண்டோ காட்சி. ருஎ

அறிவதுவே தெய்வமெனற் காருமல நானே
பிறிதெனிலோ மூடமெது பேசீர் - அறிமினிதை
எந்தமுதற் கோசுகுண மிந்தமுதற் கென்றறியீர்
இந்தவகைக் கேள்வாயோ விங்கு. ருஅ

குணஞ்சொல்லப் போந்தீர் குணியெதற்கென் றோரீர்
குணிக்கே குணமென்று கொள்வீர் - குணியெதுவென்
றோராமை நுங்குற்ற மோரிலிதை ஈணமுண்டாம்
தீராதென் னுங்கெர்வஞ் சென்று ருகூ

வத்துசித் தாந்த வகைதெரியார்க் கேன்வாதம்
அத்துவிதங் கண்டிக்க வாகுமோ - பித்தரன்றே
ஆமல்ல வாங்குணத்தை யாயாது சொல்லுவீர்
சாமினிதிற் கண்டதனைச் சார்ந்து. சுo

எந்நேரத்து மிருந்தறிவ தில்லாமை
எந்நேரந்தானு மில்லையே - அந்தவறி
வெந்நிலைய தென்றறியீ ரீதுக்கோ தூடணைதான்
பன்னிலையாக் கூறுவதோ பண்பு. சுக

உபாதிகுணந் தன்னை யுயர்பரம தென்பீர்
உபாதிகுண நாமாகி லுண்மை - யுபாதிகுணம்
ஆகோநா மென்றிடிலோ வாகா ததுவுமே
போகாமுன் கண்டுய்ம்மின் புக்கு. சுஉ

அறிவுநா மென்றதற்கிங் காட்சேப மில்லை
அறியுமோ மூன்றவத்தை யாங்கே - அறிவன்றி
நாமன்றே கண்டிருப்பம் நன்றா யவத்தைதொறும்
நாமறிவென் றற்பிழையென் னடு. சுரு

நமக்கவத்தை காண்பதுவோ நாமதற்கோ காண்பம்
நமக்கே லறிவுதா னாமும் - எமக்கேலா
தென்னி லதுநமையோ வீங்கதையோ வோர்தலது
தன்னைநா மென்னிலது தான். சுச

அறிவுநாட் டத்தி லறிவே விளங்கும்
பிறிதுநாட் டத்திற் பிறிதே - அறிமினிதை

வெற்றவெளி நாட்டத்தில் வெற்றவெளி யேகாணும்
அற்றவிடத் தன்னியம்போ லாம். சுரு

நாட்டபே தத்தாலே நண்ணுந் துவிதமதாய்
நாட்டபே தந்தவிரி னண்ணுமோ - எட்டறிவீர்
எத்தனைதான் சொன்னாலு மென்னவுண்டிங் கோராதார்க்
கித்தைப்போ லாகுநமக் கிங்கு. சுசு

மாயா மயமெதுவோ வத்துவென னுங்கொள்கை
மாயாவா தப்பெயரை மன்னுமே - யாயாதிங்
கன்னியர்மேல் வைத்த லவிசாரி சொல்லொக்கும்
என்ன மதிப்புலவீ ரிங்கு. சுஎ

தன்னைத் தடியாகத் தான்கண் டுபசரிப்பீர்
என்னவென்று கண்டிறையை யேத்துவீர் - நுங்கடிப்பு
மூக்கறையன் போல முழுதும் புரளியதே
போக்குவதென் றேபுலவீர் புக்கு. சுஅ

தன்னிலையின் மிக்கநிலை தானடைதற் கேற்றநெறி
தன்னி லிருப்பரன்றித் தாமிகழார் - இன்ன
தறிவுளோர் செய்கை யதுகாணீர் நும்பால்
வெறிதவிர்வ தென்றே விரைந்து. சுகூ

அறிவுநாம் யாதுக் கயலுலகை வேண்டல்
உறவுகொள்ளல் காண்டலொடிங் குன்னல் - பிறிவுறு
நிற்ற லதுவாத னீக்கஞ் சகியாமை
பற்றதுவா நிற்றலினும் பார். எ0

தடைமயம தேனுஞ் சலியாது நிற்றல்
இடைவாழ்வ தேனு மிசைதல் - கடைவரையும்
ஓரீ ரணுவேனு முங்கருத்தை மாப்புலவீர்
தீரீர் சுகதுக்கந் தின்று. ௭௧

மாறாத் திருத்தி மருவவிதைச் சட்டைசெயல்
மாறாத் திருத்திதர வத்துவோ - வேறேதும்
அன்னியம தாற்போலி யாகுஞ் சரியன்று
எங்கிலையோ கண்டுய்ம்மி னிங்கு. ௭௨

இரண்டாகத் தோற்றுநிலை யெந்நாளு மல்ல
இரண்டொன்றாத் தோற்றிடினு மீதன் - றிரண்டாதல்
ஒன்றே யெனக்காட்டி யொன்றாக்கி நிற்குநிலை
யன்றே யதுதிருத்தி யாம். ௭௩

ஒன்றே யிரண்டென்றீ ரொன்றுவ தேதறிவிங்
கொன்றே யுலகமதா லொன்றிரண்டாம் - நன்றே
அறிவே யுலகெங்கு ணுமென்னில் வேறு
அறிவன்றி யெங்குனுள தாம். ௭௪

அறிவுபரி சோதனையா லன்னியசோ திப்பால்
அறிவே யுலகெனலிங் காகும் - பிறிதன்று
கானலே நீரன்றிக் காணுமோ வேறாக
ஆனதுண்மை திட்டாந்த மாம். ௭௫

ஐயறிவு சோதனைசெய் தையமறுத் தொன்றாக்கி
மெய்யுணர்வு தன்னில் விழிதுயின்று - துய்ய

சுயஞ்சோதி யாயொளிரிற் றேன்றுலக மெங்கே
பயகம்ப ஞதியொடு பட்டு. எ௬

அறிவுருவா நின்ருளிர வங்கங்குங் கண்டு
பொறிகரண பேதமிவை போக்கி - நிறைவாக
நிற்கச் சிவோகமதாம் நீநானென் றெங்குலகம்
அற்புதமீ தொப்பதில தாம். எஎ

சொரூப சமாதிக்கண் டோன்றுமிதில் மேலிட்
டொருவா சகசத்தி லொன்றித் - திரிபின்றி
யிங்கிலைய தாநின் றிடைவிடா நாட்டம்வரில்
இன்னவுல கெங்கே யிலை. எஅ

இல்லதாப் போயதூஉ மில்லை யயலாக
எல்லாந் தனதுருவா யீங்கொளிர - வல்லீர்காள்
இவ்வாறு நிற்பவர்க்கிங் கேனுலக மேன்போகம்
எவ்வாறு கண்டுய்வீ ரிங்கு. எக

சொல்லியதெல் லாமெய்யே தோன்றுமுல கெங்ஙகம்பொய்
யில்லதாப் போயிற்றே வேறபதெவன் - சொல்லுமெனின்
மண்ணின் சுயவுருவ வஸ்துநிலை காட்டுதியேல்
எண்ணிலெலா மெய்யதா மிங்கு. அ௦

ஒன்றிலொன் றில்லாதென் னுண்மையெனச் சாதிக்கில்
ஒன்றிலொன் றின்றன்றிங் கோரிலம்யாம் - என்றிடிலோ
காணில்ன்றே வோருதும்யாங் காணுது சென்றதெங்கே
காணிலதிங் கோரோமோ கண்டு. அக

இப்போகா ணுதிஃதே லிப்போ தஃதெங்கே
இப்போ தஃதுன்னி லீங்குளதேல் - எப்போதும்
உன்னலள வேயிரண்டு முண்டென்ப துன்சொல்லால்
உன்னல்முதற் காரணமா முற்று. அஉ

உன்னுவா னன்றியிலே யுன்னலஃ தன்றியிலே
அன்னியமெல் லாவுலகு மாயுங்கால் - இன்னதனுல்
சித்தே யனைத்தென்ன தீர்ப்புண்மை யாயிற்றே
எத்திறத்தி னுலேயு மிங்கு. அங

உன்னுமவ னைக்காணி லொன்றே யனைத்துமாம்
என்னு மனுபவந்தா னீங்குறுமே - பன்னுகலே
வல்லீ ரனுபவந்தான் வாராதேற் சொல்லளவாம்
இல்லாமோ வெம்மயக்கு மிங்கு. அச

ஆதலா லன்னியத்தை யாயாது வீழன்மின்
போத தெரிசனமே போக்கிவிடும் - காதலெலாம்
பொய்யன்று மெய்யிதுவே புத்தியது தான்விளங்கும்
செய்யத் தகுவ செயின். அரு

உருவருவ மோடிங் குபயமறி வன்மை
இருளொளியுஞ் சத்தசத்து மேனே - பெருநிலைகள்
அல்லவா மென்பதற்கிங் காகு நமதுருவேல்
வல்லீர்காள் யாதிறையோ வஸ்து. அசு

உள்ளதல வில்லதல வுண்டில்லை யென்பதல
தள்ளலல கொள்ளலல சந்ததமும் - உள்ளுமுரு

ஒன்று சுகமயமே யொன்று துயர்மயமே
யின்றிவற்றுள் யாமெதுவோ விங்கு. ௬அ

உலகமயம் யாமெனற்கிங் கொன்றுமிலை யையம்
விலகவுயர் நாட்டமதை மேவோம் - அலமுயல்வால்
தீருமோ மாப்புலவீர் தின்று கொழுக்கற்கே
பாருலகி னிற்பம் பரிந்து. ௬௯

எட்டுமுழு ஞானத்தா லிம்மயக்கந் தீராது
நாட்டமுழு ஞானமன்றி நாடுங்கால் - கேட்டுணர்நீர்
எல்லாம் படித்தாலு மெங்ஙனநாட் டந்தெரியும்
வல்லார்பாற் கீழ்ப்படிமின் வந்து. ௧00

நாட்டமிழி வாற்பந்தம் நாட்டமுயர் வான்முத்தி
நாட்டபே தத்தளவே நண்ணுகதி - காட்டுதும்யாம்
எந்தவிதத் தேனு மிறையளவும் வேறிலையென்
றந்தமில்கற் றீருணர்மி னங்கு. ௧0௧

இப்போதிச் சென்மத்த னின்னநா னிப்பெயரன்
இப்பால னென்றிருக்கைக் கேதென்னை - எப்போதும்
இன்னதுபோற் சென்மநமக் கில்லையெனற் கேதுண்டாம்
என்னதினுற் சென்மபய மில். ௧0௨

அன்னியமாய் முன்னேநா மாகா திருக்கிலிப்போ
தன்னியநா மாயிருத்தற் காதரவென் - அன்னியமாய்ப்
பின்னுநா மாகோமோ பேசுமினே ஞாயமுண்டேல்
இன்னதற்கு மாறுக விங்கு. ௧0௩

உணர்வுடலென் றிவ்விரண்டி லோர்வ துணர்வே
யுணர்வுநா மென்பதன்றி யொன்று - புணருடறான்
நாற்றப் பொருளதனை நாமென்னல் முன்பழக்கம்
நாற்றமதைத் தின்பவர்போ னன்கு. கOச

ஓருருவர் சுகமா யொருருவர்மா றாகி
இருவகைய தாதற்கிங் கேதென் - னொருவகையால்
இட்டமிறை யாலென்னி லிட்டமுன்பின் னில்லையோ
விட்டிடுமோ சென்மமுன்பின் விண்டு. கOரு

அவரிட்ட நம்மா லறியப் படாதேல்
அவரிட்ட மென்றே னறைவை - எவர்செயலும்
அல்லதனா லென்னி னவர்க்கேது பாரபட்சம்
இல்லையென்றான் சொல்லவிடை யிங்கு. கOசு

நீதிபரா னுக்குலகி னோர்வதெவன் பாரபட்சம்
ஆதிபரா னுக்கிதுபோ லாகாதே - ஏதெதனா
லென்னிற் பலன்விதிப்ப னெவ்வெவர்செய் கைக்களவாய்
அன்னதுபோற் செய்வா னவன். கOஎ

எப்படியா னேற்பனிதை யென்னின் மறுமைபலன்
எப்படியா னேற்பனின்சொல் லீதழகோ - அப்பர
மறுமைவினை யால்விதிப்பை மாறாக விம்மை
இறுப்பன்யா னும்வினையா லிங்கு. கOஅ

நாமாரோ முன்பிறப்பி னாமாரா வோம்பின்னர்
ஆமோ வுரைக்கவெனி லாமோதான் - நாமா

உரைக்கவேது சொன்னு முண்மையல வென்றிங்
குரைப்பதெவன் ஞாயமோ வுற்று. க0கூ

ஞாயமோ நும்மொழிதா னண்ணுங் கடைமுடிவில்
தூயபக வான்மீது தோன்றியே - மாயமாய்
மாண்டா ரனைவரையும் வந்தெழுப்பு வாரென்னல்
ஈண்டியா மேற்க விசை. கக0

வேதமெனி னெம்வேதம் வேறு மொழிவதெவன்
நாதன்மொழி யன்றென்னி னுட்டோமோ - நாதன்மொழி
யன்றென்ன நும்மறையை யாகுமே யிவ்வாறே
இன்றுநீ சொல்வதெலா மிங்கு. ககக

சுத்தமொன்று மில்லையே சூழுங்கா லெம்மறையும்
யுத்தியொத்த தின்றதனு லுண்மையன்று - எத்தடையும்
இன்றியா மாய்துமிங்ங னெம்மறைதா னுண்மையென
அன்றவனு மேற்று னதை. ககஉ

ஒருங்குதிக்கில் யாரு மொருங்குதிப்ப மென்பம்
ஒருங்குதிப்பம் ஞாயமிலா தோதில் - திரும்பியுந்தான்
முன்னுடலா யென்பதெவன் முன்னுடற்பே ரற்றபினர்
இன்னதனை யாரேற்ப ரிங்கு. ககங

அவரிட்ட மென்னி னதுமுன் றடுத்தோம்
அவரிட்ட மன்றென்ன வாங்கே - அவாவென்னின்
ஆதியெங்ஙன் வந்ததன்மை யாதி யியற்கை யெனின்
ஈதெங்ஙன் போமென்பை யிங்கு. ககச

அவாவிரண்டு தாமென்ப ரன்னியத்தைத் தன்னை
அவாவுதலாற் போகித்தற் காகும் - அவாவுதரூன்
ஆன்மாவை யாகி லதுவே யியற்கையெனல்
என்சொல்வ மற்றையதை யிங்கு. ககரு

அதுமறத்தல் பந்த மதுகாண்டல் முத்தி
இதுவிரண்டுந் தோற்றமதே யில்லை - எதுவுந்தான்
வந்ததில்லை போனதில்லை வஸ்துவொன்றே யுண்மையெனும்
இந்துவே தம்போது மில். ககசு

பந்தம் விலகற்குப் பாடுபடுஞ் சாதனமேன்
பந்தமெலாந் தன்னுருவாப் பார்த்தற்கு - இந்த
முடிவெங்கு மில்லை முழுதுஞா யந்தான்
திடமுண்டே லிங்கிதுபோற் செப்பு. ககஎ

இவ்வண்ண மெம்மறையு மெல்லா மறையுமெனின்
இவ்வண்ணங் காட்டுதியே லீங்கேற்பன் - செவ்விதா
என்ன வவன்முனிவுற் றீதெல்லா ஞாயமென்றான்
உன்னுதற்கு மாறு யுற. ககஅ

ஞாயமதே லென்றடுப்ப னுடாதென் னுங்குற்றம்
ஞாயமுறை யையாநீர் நாட்டுமெனின் - பேயர்மதத்
தப்புவழி நீமறந்து சாயாது நீகேட்கில்
செப்புவன்யா னுண்மைதனைத் தேர்ந்து. ககக

அறிவதுவுந் தோற்றுவது மாங்கண்ட காட்சி
பிறிதெதுவுங் கண்டிலம்யாம் பேசல் - வறிதேயாழ்

எங்கே யறிகின்றோ மெல்லா வவத்தையுந்தா
னெங்கேதான் றோற்றுதோ விங்கு. கஉ0

அங்கேநீ யெங்கு மசையா திருந்தறைதி
எங்கு நினைவொழித்திங் கென்னவே - தங்க
இடமறியே னென்றுரைத்தா னென்வேலை யல்ல
திடமாக வுன்வேலை செய். கஉக

இருந்திருந்து பார்த்து மெதுவு நிலைக்கா
திருக்குதே யென்செய்வே னென்றான் - திரக்குறியைக்
காலமது பார்த்திருந்து காட்டாமற் காட்டினான்
காலங் கடந்தகுரு காண். கஉஉ

எங்குஞ் சுயஞ்சோதி யேகவுரு வாக்காண
அங்கிங்கு பேத மழித்தொளியாய்த் - தங்கி
யிருந்துநெடு நேர மெழுந்திறைதாள் வீழ்ந்து
பெருங்குர லிட்டழுது பின். கஉ௩

வலமிடமா வந்து வணங்கி வணங்கிப்
பலகால்கூத் தாடிப் பழிச்சி - நிலநனையக்
கண்ணீர் பெருகிக் கசிந்துருகிப் பேரின்பம்
விண்ணுநொய் தாக்காண மிக்கு. கஉ௪

சிரசதனிற் கைகுவித்துத் தெய்வமே யப்பா
அருமணியே நாயகமே யண்ணா - ஒருவருக்கும்
எட்டானே மானிடனா யிங்கே யெனக்குவிழிப்
பட்டானே யென்றான் பணிந்து. கஉ௫

சொல்வதெல்லாஞ் சொல்லிவிழி தூக்கத் தமர்த்திகுரு
செல்லுமிடத் தேகியபின் சீடனுந்தான் - அல்லுபகா
வின்றிச் சமாதி யிருந்துதனைத் தானடைந்தான்
இன்றிதுபோல் முத்திநிலை யிங்கு. ௧௨௬

---

உபயமத சித்தாந்தவாதம் முற்றிற்று.

படலம்-௩-க்கு ஆ கவி ௩௩௬.



உ

திருச்சிற்றம்பலம்.

# சைவமதசித்தாந்தவாதம்.

அப்பா லொருசைவ னங்கவர்பால் வந்துமிகத்
தப்பாக ஐயாநீர் சாதிப்பீர் - எப்போதும்
ஏனில்லை யாகு மிருக்கும் பதியாதி
யானிதனை யேற்க விசை. க

சைவமதந் தன்னைத் தலைநிறுத்த வல்லீர்காள்
சைவமத முண்மையெனல் சத்தியமே - சைவம்
சரியைகிரி யாயோக சத்தியஞா னத்தால்
தருவதுபோல் முத்தியிலை தான். உ

பசுபதி பாசப் பகுப்புண்மை யென்பீர்
நிசவடிவீ தென்றறிவை நீக்கி - வசமாகக்
காட்டுதிரே லோரணுவுங் கண்டிவற்றை யுண்மையென்பம்
நாட்டுவன்யா னின்னுமொன்று நன்கு. ங

ஊனிறைநீ யென்னி லொழிப்ப னொருவன்
ஊனாகக் காட்டு முலகேல் - ஊனாகிற்
காணா னெவன்பன் கருதற்கு மெட்டானேற்
காணாய்க்கேன் பேச்சென்பன் காண். ச

கண்டிலன்யா னேனுமுனங் கண்டவரின் றேவென்னில்
உண்டிவனு மப்போது முண்மையெவன் - உண்டீ
தனுதியெனி லென்ப னவனு மனுதி
அனுதியென லேதுண்மை யாம். ௫

தப்புதுவென் றலவனுந் தப்பிதுவென் பானலவோ
ஒப்பரெவருமெனி லோதானே - இப்படியே
அன்புவரற் கேதென்னை யன்பாலென் கண்டதெவர்
இன்பமிகை யென்னி னிது. ௬

கருதுவதின் றர்மமென்பன் கண்டுவந்த தல்ல
கருதுவதா லெங்ஙனிது காணும் - வருவதன்றேல்
கண்டுவந்த தென்பதெலாங் கட்டுரையே காட்டென்பன்
கண்டிடுமென் பர்க்கென்னில் காண். ௭

தற்பாவ மன்றியொன்றுந் தானே வராதென்பன்
தற்பாவ மோசகளந் தந்திடுமோ - அற்புதமேல்
இவ்வாறிங் குண்டாத லெல்லாஞ் சுபாவமென்பன்
எவ்வாறிங் கேற்பனெனி லின்று. ௮

காகதாலி யம்போலுங் காணுமிவை யொத்ததென்பன்
ஆகவிங்ங னேதென்ன வாமென்னில் - ஏகுமென்றோ
தன்கொள்கை வாதித்தல் சற்றுமல வேறென்ன
என்கண்டோ வேற்பனென்ப னிங்கு. ௯

காட்சியனு மானத்தாற் கட்டடங்கா தேனுமுளன்
சாட்சியாய் நின்றபரன் றனென்னில் - மாட்சியே

சின்னமவிச் சின்னமதிற் சேரா துணர்த்துதியேல்
இன்னதென வேற்றிடுவ னிங்கு. ௧0

எல்லாமா யல்லவுமா யேகமாய் நிற்பதெனில்
எல்லா மசத்துசட மேற்பதெவன் - அல்லதெனில்
சூனியமாம் வஸ்துநிலை சொல்லறியாய்க் கேள்வாதம்
ஏனெதிரி னின்றிடுவ யிங்கு. ௧௧

ஏகமெனி லொன்றே யிருக்கச் சுசாதிமுதல்
ஏகமெனிற் சிற்சடங்க ளேனாகும் - ஏகமல
என்று லதுதள்ளி யேதுமய லாக்காட்டாய்
ஒன்றுமல பல்லவல வோது. ௧௨

எதுவழியும் போகா திருக்கிலென் செய்வன்
மதியாலென் செய்வன் மறுக்க - விதிகாணேன்
என்றுனை நோக்கி யிதுநிற்க மற்றொன்று
நன்றாகக் கேட்டி நயந்து. ௧௩

உலகமதா லுண்டிறையென் றோதிடுவை மற்றோர்
கலைவலா னின்றென்பன் காண்டி - உலகுஞ்
செயற்கையென்பை யன்றென்பன் செய்யுமோ தன்னை
இயற்கையென லேனேற்ப னிங்கு. ௧௪

அணுசையோ கத்தா லகண்டமாக் கண்டிங்
கணுவாக மீண்டுமே யாகும் - அணுவுந்தான்
ஆயுங்கா லுட்பநுட்பமாகியெட்டா தாகுமெனில்
மாயுஞ் செயற்கையெனல் வந்து. ௧௫

தனக்கென் றுருவுளதாச் சற்றுமிலை யுண்டா
யெனக்குநீ காட்டிலன்றிங் கேற்பன் - அனைத்துமே
ஆக்கப் படுபொருளென் றேற்பர் நின்கொள்கை
வாக்கடங்கிக் கேட்டுய்தி வந்து. ௧௬

இல்லை யெதார்த்தமென்று மெங்கெங்கு மாயினுந் தான்
எல்லாம் விகாரவுரு விவ்வுருவால் - வல்ல
படைப்பா னுளனென்றல் பாமரரின் மிக்கதெவன்
அடைக்குங்கல் லிவ்வுத்தி யாம். ௧௭

எல்லாஞ் சிவமயமே யென்சொலினு மென்றுரைத்தாய்
எல்லாம் பிரமமய மென்றுலென் - சொல்லாதே
பாவமெனி னோராய் பரியாய சொல்லெனவும்
ஆவதென்ன வுன்னோ டகல். ௧௮

உருவருவ முள்ளதில தொன்றுபல வன்றே [யேல்
முருகனெனச் சொன்னதெவன் முன்னோர் - தெரிந்தனை
என்முன் வழக்கிடலே னெங்கேநீ சைவனெனல்
என்கண்டோ வீண்புரளி யேகு. ௧௯

உபாதிகுணஞ் செய்கை யுயர்பரம தென்பீர்
அபாவமிவை யுண்மையுரு வாமோ - உபாதிமுதல்
போக்கறியார்க் கென்னசுகம் புண்ணியர்போற் செய்திடினும்
நீக்குவதென் றேகவலை நின்று. ௨௦

கண்ணபிரா னர்ச்சுனற்குக் காட்டுண்மை யொன்றேமுக்
கண்ணனன்று நால்வர்க்குக் காட்டுண்மை - எண்ணுங்கால்

எங்கே மதபேத மேனிழிந்து பேதிப்பீர்
இங்குணர்ந்தே னுஞ்சிறுமை யின்று. உக

வழக்கறுத்திங் கின்னதென்ன வஸ்துநிலை தேரும்
உழைப்பிதுவோ நிட்டையன்றி யோராய் - கழப்பகற்றி
எட்டரிதிங் கேனு மினியொன்று கூறக்கேள்
நட்டெங்கு நாடாம னன்கு. உஉ

இந்தநீ யாரென்ன வென்றுரைத்தான் பண்டிதன்யான்
இந்தநிலை கல்வியென வீங்கெவரும் - வந்திக்கும்
ஆசான்யா னென்று னதுவோ குருத்துவங்காண்
ஏசா வமிசன்யா னிங்கு. உரு

வமிசமல னீயென்ன மாவருணத் தேன்யான்
உமதுமொழி யேயன்றி யுண்டோ - உமதுடலில்
யான்சந்நி யாசியென்று னெங்கேவே டத்தன்றி
யான்சொல்வ னுண்மையினி யிங்கு. உச

முருகையர், பிள்ளையென்றான் முற்றுணர்ந் தோய்கேளிங்
கொருவனே தந்தைமக னுற்றாட் - கிருங்கணவன்
மூதாதை பேரனொடு முன்பின்னு னென்றிருப்ப
னீதாகா துன்னுண்மை யிங்கு. உரு

ஆறுமுகன் யானென்று னறுவத னங்காட்டில்
ஆறுமுக னுகுமென வையாகேள் - தேறீர்
இடுகுறியா மென்றுனிஃதனர்த்த மாமே
யிடுகுறிக்கு வத்துவின்றே லிங்கு. உசா

இவ்வுருவர் மென்னி லெதுகுட்டை நெட்டையதோ
இவ்வகையெல் லாங்குணமா மீதலவே - செவ்விதாக்
கண்டுரைநீ யென்னக் கடுங்கோபத் தாலிதென்றான்
உண்டுபெயர் மார்பிதற்கென் றோர். உஎ

இப்படியே யெவ்வுறுப்பு மிப்பெயர்போ லேற்பதனால்
இப்பொருளென் றீங்குரைத்தி யென்னவே - செப்பினான்
ஐந்தறிவு நானென் றமையுமே சொந்தபெயர்
எந்தவுரு நீயா மினி. உஅ

வாய்வுநா னென்னின் மறந்துறங்கு நித்திரையில்
வாய்விருந்து மோர்தலிலை மாறுதிங் - காய்கிலைகொல்
மூர்ச்சையினு மோராமை மூடமதா னீயன்று
தேர்ச்சியிலார் போன்மொழியேல் தின்று. உகூ

உடல்காவ லன்றி யுணர்வுக்கே யல்ல
விடுமொழியீ தென்ன விழைந்திங் - கடுமனமே
யானென்னி லென்னபொரு ளீதுசட சித்தென்னில்
ஊனுருவி லெங்கே யுறும். ௩௦

நெஞ்சதனி லென்னி னினைவு கனவுகளில்
நெஞ்சிடத்திற் காண்பவைக ணின்றலவே - கிஞ்சித்தும்
ஓராதென் னிற்கவதிங் குள்ளதுவோ வில்லதுவோ
பேராது நிற்பதனாற் பேசு. ௩க

உள்ளதெனிற் கற்பிதமோ வுண்மையோ போதனையோ
உள்ளதனிற் கண்டுகொலோ வூரார்கள் - விள்ளும்

மொழிப்பழக்க மோவெழுத்தோ மூடர்போற் சொல்லேல்
விழித்துணர்ந்தீ தென்று விளம்பு. ௩உ

இல்லதெனிற் போக்குவரத் தேதிச்சை யாதிவரற்
கில்லையே திங்குலைவ தேதின்னும் - எல்லையின்றி
யோர்கணத்திற் பல்லுலகி லோடித் திரும்புவீதே
தோர்ந்துமொழி யையமற வுற்று. ௩௩

இருவழியுஞ் சொல்லா திருக்க மொழிந்தீர்
ஒருவகையாற் சத்தசத்தென் றோர்வன் - றிரிபின்றி
யென்னிற் குணமாகு மெந்தமுதற் கோவென்ன
அன்னதறி யேனென்று ணங்கு. ௩௪

என்போது முன்பா விருக்குநிலை யீதன்றோ
உன்செயலே கண்டிதென் றிங் கோர்ந்துசொலல்-என்செய
என்னவெகு நேரமலை வின்றித் தனித்தங்கே [லேன்
யுன்னியறி யேனென்று ணுற்று. ௩௫

சரியைகிரி யாயோகந் தப்பென்று ஞானஞ்
சரியென்று சைவத் தலைவர் - தெரிவாகச்
சொன்னதெவ னம்பமத்தர் சொன்னதெவ னூற்குறைதான்
அன்னவரி னென்கண்டீ ராய்ந்து. ௩௬

சரியைகிரி யாயோகந் தந்திரமே யன்றிச்
சரியல்ல ஞானம்போற் சற்றுந் - தெரிந்தவர்போல்
ஞானமல்ல வற்றையெலா ஞானமென்பீ ரென்மடமை
ஞானியெனப் பேரிட்டு நன்கு. ௩எ

எட்டிலரன் மாலருக னேசல்லா வாதியெனக்
காட்டுவதி லென்னுயர்வு காணேமே - நாட்டுவதென்
னெம்மதமே யுண்மையென வெங்குந் திரிசயமேல்
ஈம்மதமுங் கற்பிதமே யிங்கு. நஅ

துவிதம் விசிட்டாத் துவிதமத் வைதம்
அவசரமே யுண்மையிவை யன்று - இவைமுறையே
ஒன்றினென் றென்றதிக முண்மையுரு வாதற்கிங்
இன்றபிமா னங்கொள்ளீ ரிங்கு. நகூ

பூசைசெய் பேர்க்கேனும் பூசிக்கப் பூசிக்க
ஆசை யணுவணுவா வாங்கோங்கும் - பூசை
மகிமையன்று கண்டிடுவை மாறாது செய்தி
மகிமைமுன் கண்டார்போல் வந்து. ச0

சிவசிவவென் றென்றுஞ் செபித்தாலு மென்ன
சிவமெனுஞ்சொற் காழமதைத் தேரா - தவமாகக்
கோரணையே நுங்கோலங் கும்பிடைக் கேட்டறியீர்
ஒருமி னெம்மொழியை யுற்று. சக

அரகரா சம்போவென் றன்புளர்போற் காட்டி
இருகணீர் சோர வியம்பித் - திருநீற்றை
அங்கமெலாம் பூசி லகலுமோ சற்றேனும்
அங்கலிங்க பேத மகம். ச௨

திருமேனி தன்னைச் சிவபழம்போற் காட்டி
ஒருவா மயக்க மொழியீர் - பெருவாயால்

முற்றுணர்ந்தார் போற்பேசி முன்னேன் வழக்கிறுக்கீர்
கற்றுணர்ந்து மென்னபயன் காண் சந

சத்தா யசத்தாய்ச் சதசத்தாய் நின்றதிது
சத்தாதி யிம்மூன்றுந் தானுமல - பித்தாகேள்
எல்லா நினைப்புமறப் பிம்மனதின் சேட்டையதே
எல்லாத் தொழிலன் றிது. சச

விழிப்பிற் சகத்தாய் விழிப்பொழிவி லன்றாய்
இழித்தகைய தாயன்று யெங்குஞ் - செழித்திருத்தல்
இம்மனமே யற்பமதா யெண்ணு திதைக்காணில்
எம்மயலு மாங்கே யிறும். சரு

நினைப்பு மறப்பொழித்து நில்லென்ன வாங்கே
அனைத்தாக நிற்பதெங்ங னையா - இனைத்தொழித்தால்
என்செயலே தென்னி னினையதின்றி நிற்றலுந்தான்
உன்செயலே கண்டுசொல் லுற்று. சசா

நிலைக்கவிலை யென்னி னெடுவனத்தி னல்லோர்
நிலைக்கவல வோசெய்த நிட்டை - நிலைக்குமட்டும்
நீங்காது நிட்டையினி னின்றறைதி யென்றுரைக்க
நீங்காது நின்று னிலை. சஎ

நின்றுநெடு நாள்வருந்தி நேடியிவர் பாற்சென்று
நின்றநிலை யின்குறிப்பை நேயமோடங் - கன்றறைய
அப்பாலென் னென்ன வளவிலாச் சோதியென்றான்
அப்பாலென் கண்டறைதி யங்கு. சஅ

நித்தரங்கம் போல நிறைஞான பூரணமே
எத்தடையு மின்றி யிலகுவதே - அத்தனே
ஐயா வருமணியே யண்ணலே யென்றேத்தி
மெய்யாருந் தோயநிலம் வீழ்ந்து. சுகூ

எழுந்து வலமிட்டவந் தேத்தியெனை யிங்கே
யுழுந்துருளும் போழ்தி லுணர்த்த - எழுந்தருளி
வந்தகுரு வேயொன்றும் மாறாகக் கண்டிலன்யான்
அந்தமுடி வற்றவொளி யாம். ருo

பதிபசு பாசப் பகுப்பெங்குங் காணேன்
நிசவனுபூ தித்தெளிவே நீங்கா - தசைவின்றி
நின்ற ததுவாக நிற்கின்றே னென்னகுறை
யென்றடியில் வீழ்ந்தெழுந்தா னிங்கு. ருக

ஆதார நானே யனைத்தினுக்கு மல்லநான்
ஆதார வாதேய மாமிரண்டுஞ் - சேதார
மாந்தகைய தாலிங் கறையவிட மின்றியுப
சாந்தமதா நின்றேன் றனித்து ருஉ

நினைக்கிற் செகத்தாம் நினைப்பொழிக்கிற் பாழாம்
நினைப்புமறப் பிவ்விரண்டு நீக்கித் - தனித்திருந்து
கண்டேன் மனநிலையைக் காணுமறி வின்ஸ்புரிப்பாக்
கண்டறியார் வேறென்பர் கற்று. ருங

அறிவே செகமா மறிவே பதியாம்
அறிவே பசுவாகு மாயின் - அறிவாக

ஆவதினாற் பின்னு மணுவளவு மையமிலை
யாவர்தான் வெல்வா ரெனை. ௫௪

யானே படமாகு மெவ்வுலகப் பாவைகட்கும்
யானேநீ ருப்புலக மென்றுணர்ந்தேன் - யானே
அறிவுருவ மேயன்றி யன்னியமே யல்ல
இறையாணை மெய்யா மிது. ௫௫

பாச மயலென்பர் பாரா ரறிவினிலை
ஈசனிலை சொலவதவ ரென்னென்பன் - ஈசனுக்கிங்
கன்பரே யாயினுமென் னாந்தன் னிலைகற்றுத்
தன்சொரூபங் காணார்க டாம். ௫௬

வேதாந்த மென்றிருந்தேன் வேறுஞ்சித் தாந்தத்தை
வேதாந்த மல்லவே மெய்யாக - நாதாந்தங்
கண்ட தெரிசனத்துங் கட்டுரைப்பார் மூன்றெனவே
கண்டவுண்மை யெங்காகுங் காண். ௫௭

மண்ணாற் கடபடம்போல் வத்துவன்றி யாதுமிலை
திண்ணமதா யான்சொல்வன் றேர்ந்ததனால் - கண்ணிலர்போல்
மூன்று மனாதியெனல் முற்றுமுணர்ந் தாரன்று
சான்றுநமை யன்றியுண்டோ தான். ௫௮

சித்தசுத்திக் கேற்றதுவே சித்தாந்தத் துண்மைநிலை
முத்தியதற் கேற்றநிலை மூதுணர்வைச் - சத்தியமாக்
கண்டவே தாந்தநிலை காட்சியெலாந் தானாகுங்
கண்டவரே யேற்பரிதைக் கண்டு. ௫௯

எல்லாஞ்சின் மாத்திரமா வீங்கறியப் பாவனையேன்
எல்லாஞ்சின் மாத்திரமா வீங்கிருக்க - எல்லாஞ்
சலமாகப் பாவிப்பேன் றூக்குமலே யாதி
சலமயம தாயிருக்கத் தான். ௬௦

எப்பொருளுங் காட்டுவென்யா னீங்கே யறிவுருவா
யெப்படி தான் றேற்றிடினு மீதுண்மை - தப்பின்றி
யீதெல்லா நின்னருளே யென்றடியில் வீழ்ந்திறைஞ்சி
யேதுங் குறைவுமிலை யிங்கு. ௬௧

என்ன விறைவாழ்த்தி யேகத் தனதிடத்தில்
அன்னவனு நிர்விகற்ப மாகியே - சொன்னநிலை
யாகித்தா னனபின்ன ரப்பாலே வைணவத்தை
யூகத்துக் கொத்தறைது முற்று. ௬௨

சைவமதம் வாழி தனைநிறுத்தி னார்வாழி
சைவம்தந் தன்னிலுண்மை தங்கியதால் - சைவராய்
நின்றுமறி யார்வாழ்ந்தென் ஞேயமதைக் கண்டுணர்ந்தேன்
என்றுமிது வாழ்ந்திடுக வே. ௬௩

---

சைவமதசித்தாந்தவாதம் முற்றிற்று.

படலம் ௪-க்கு ஆ கவி-௩௯௯.

ஸ்ரீ

ஸ்ரீராமாநுஜாயநம:

# வைணவமதசித்தாந்தவாதம்.

வைணவசித் தாந்தத்தில் வல்லான்வந் தையரீர்
வைணவத்தை யும்பொய்யா வாதிப்பீர் - வைணவமே
முக்கியமீ தெம்மதத்து முன்னோர்க ளேற்றிருக்க
எக்கருத்தா லேலீ ரிதை. க

எவ்வுயிருக் கெப்பிறப்பிங் கீதுண்மை யென்றுரைக்கில்
அவ்வுயிருக் கிம்மதமென் றுங்கறைதும் - அவ்வகைய
தில்லென்னி லீதுமில்லை யிப்போதிங் கேதுண்மை
சொல்லென்று கேட்கத் துணிந்து. உ

எம்மதமே யுண்மையெனி னிவ்வா றெவரெவரும்
தம்மதமே யுண்மையெனச் சாதிப்பர் - அம்மா
விதுவாமோ வென்னி னிதுவாமோ வென்பர்
இதுவே யனுதி யெனின். ௩

இதுவே யனுதியதா மென்றெவருஞ் சொல்வர்
இதுவீசன் சொல்லென்னி லீதும் - அதுபோலாம்
என்பர் கெடுவரெனி னிவ்வாறே யெவ்வெவரும்
என்பரவ ரற்பரெனி னிங்கு. ச

அவருமிது போற்சொல்வ ராதலினு லொன்றும்
அவமாயி னீயுரையே லப்பா - தவறுவரும்

என்ன வவனுந்தா னெம்பெருமான் பள்ளிகொளல்
என்னகண்ட காட்சி யிது. ரு

இதுபேரல்லை குந்தத்தி லென்னவென்று சொல்வன்
முதுமறையு நாகூசு முன்னே - யிதுகாண
இந்திரனுங் கண்ணு யிரம்பெற்று னற்பமதா
யெந்தவகை சொல்வீ ரினி. சு

எம்மதத்த ருஞ்சொல்வ ரிவ்வாறே தத்தமிறை
அம்மா விதென்னவென வையாகேள் - எம்மாள்வார்
கோவிற் பிரசாதங் கொள்ளேகொள்ளே யாக்கிடைக்கும்
பாவருக்கு மின்னதுபோ லில். எ

திண்டிக்கே கும்பிடாத் தீர்ப்பாயிற் றேறும்மால்
திண்டிக்குப் பின்னன்றோ சேர்பதவி - கண்டிலைகொல்
சோற்றுமூட்டையென் றுடலைச் சோதிக்கி லென்றுரைக்கில்
ஆற்றுபசிக் கேகோயி லாம். அ

இம்மைபோ லெம்மானு மீயு மறுமைபலன்
இம்மையே சாட்சியதா மீங்கடைந்தார்க் - கெம்மையினு
மென்னி லிலேயோ வெவர்மதத்துஞ் செல்வமயம்
இன்னதுபோ லாகா தெனின். கூ

இதனினுங் கோடிமடங் கெவ்வெவர்தே யத்தும்
இதனோடிங் காள்கையுமுண் டென்ன - இதுபோதும்
என்னிட்ட மென்னி னிதுமூடர் சம்மதத்துக்
கென்னபின் னிட்டதுவோ விங்கு. கo

இட்டபடி யான்மாக்க ளீங்குழல வோவேதம்
சட்டம் விதித்தமுறை சாற்றுதியேல் - இட்டபடி
எங்கிருப்பை யெக்கலையு மீதுக்தோ கற்றுணர்தல்
இங்கெதினு ணுணமுனக் கில். கக

எதையெம்பி ரானென்பை யீதென்னிற் கல்லே
இதைக்கொண்டு பாவிப்ப தென்னிற் - கதையாகும்
பாவிப்பாற் றூடமென்னே பாவமுயிர் கற்பிதமே
யாவதுவே றில்லைவழி யாம். கஉ

நினைவளவே சாக்கிரந்தா னின்பா வனையும்
நினைவளவே யன்றியிலை நீகாண் - நினைவதுவும்
காணுந் திரிசயமாக் காணுமிது போற்பாவம்
காணுமோ வோர்நிமிடங் காண். கங

தோற்றி மறைவதினுற் சொல்லேற் பரமென்று
தோற்றுவதெல் லாம்பொய்யே சொச்சமன்று - சாற்றேல்
இதுதெய்வ மென்றினிநீ யென்னவவன் சீறி
யெதுவோநின் றெய்வமென்று னிங்கு கச

சுட்டில் விடயமதாஞ் சுட்டொழிக்கிற் சூனியமாம்
விட்டிரண்டும் நிற்கநிற்க மெய்யாகப் - பட்டவருத்
தத்தளவாக் காணுஞ் சதோதயமாய் நின்றவரி
இத்திறத்த தென்றுணர்தி யிங்கு. கரு

முருகன் சடகோபர் முன்னுரைத்த தீர்ப்பில்
பெரிதுசிறி தென்கண்டாய் பேசேல் - ஒருநிலையே

கண்டால் விழக்கேது கண்டபடி பேதிக்கேல்
தொண்டர்போற் காட்டித் தொடர்ந்து. கசு

ஆண்டா னடிமை யகற்றுநெறி யீதாகும்
வேண்டா மெமக்கென்னின் மெய்யாகும் - ஆண்டான்
நிலைபோ லடிமை நிலையும் வீணுகக்
கலைவிலோய் சொல்லெல்கடிந்து. கஎ

என்ன வவனு மிதுநா னுடலென்றான்
என்னதென்று சொல்பவெலா மீங்கன்று - நின்னதுரு
வாதலினுற் கண்டறைதி யப்பா வெனச்சொல்ல
எதுமறி யேனென்று னிங்கு. கஅ

அறியேனென் றுனுநீ யன்றே விருக்க
அறியே னெனையென்ன லாமோ - பிறிதலையே
ஆய்ந்துணர்ந்து சொல்லென்ன வையோ வெனைவிடென்று
சாய்ந்தானு நீர்விடீர் தான். கக

எட்டவறி யாததினு லில்லாமற் போயிற்றே
எட்டிற் சகுணமதா மீதேற்கும் - எட்டப்
படாததினு னிர்க்குணமாம் பாராய்நீ யென்ன
எடேனென்று னிம்மொழியை யிங்கு. உ௦

யாதினு லென்ன விசைக்கிற் சகுணத்தை
யீதேற்ப னென்று னீதன்விபரம் - ஓதியபின்
னின்னதெலாஞ் சம்மதமே யின்னதற்கு மாறுய
அன்னகுணம் யாதென்வே யன்று. உக

இன்னதின்ன தென்றுரைக்க வீதேலோமென் றுரைத்தான்
அன்னதெதி னுலென்ன வையாகேள் - இன்ன
சுகுணத்தை நீக்கிலது சூனியமாங் காணும்
சுகுணமே காட்டுந் துணிந்து. ௨௨

அல்லவிறை யன்றற் கசத்தாதி சொன்னமறை
அல்லவுல கென்றற் கவற்றெதிருஞ் - சொல்லுமலோ
இன்ன தவசரமே யீதுண்மை யாமோதான்
அன்னவஸ்து நிர்க்குணமே யாம். ௨௩

துர்க்குணமே யில்லெனற்குச் சொல்விற்றே வேதந்தான்
நிர்க்குணமென் ருேராதென் னீரையா - நிர்க்குணத்துக்
கெதருத்த மாயி னிதுபாச மல்லவென
ஓதியதென் சத்தாதி யோர்ந்து. ௨௪

கூறியதே கூறலெனுங் குற்றமதா லோராதென்
கூறினும் வேறுக்கிக் குற்றத்தில் - தேறிலைகொல்
மூன்ருகும் லக்கணையில் முன்லக் கணையார்த்தம்
சான்ருேர்க் கிதுமுறையோ தான். ௨௫

சுகுணங் குறியாச் சுயவடிவங் காணில்
சுகுணக் குறியுஞ் சொருவும் - சுகுணநிலை
நிர்க்குணம தாக்கி நிகரின்றித் தானுக்கும்
நிர்க்குணமே வஸ்து நிலை. ௨௬

சுகுணமு நிர்க்குணமுந் தோயாது தோய்ந்த
மகிமையதா நிற்பதே வஸ்து - உகந்தறிய

விட்டுவிடா லக்கணையை வேதம் விதித்ததுகாண்
மட்டிகள்போற் சொல்லேல் மறுத்து. உஎ

அறிந்தார்போற் பேசே லதுநிற்க நீகண்
டறியிவ் வுலகநிலை யப்பா - குறிகொள்ளக்
காட்டுதியே லுண்மையதாங் கண்டுரைக்கு நின்வசனம்
ஏட்டறிவா லேனு மிசை. உஅ

என்ன வவனு மிதுவுலக மென்றுரைக்க
இன்னதெனச் சுட்டியுரை யென்னவே - அன்னதுதான்
பூதப் பவுதிகமே பூரணமா நிற்பதிதென்
றோதவதி லொன்றதனை யோது. உகூ

அதிலொன்று மண்ணிதெனி லல்லவெனு துண்மை
யிதுவென்று யானேற்க வீங்கே - மெதுவாகச் [தான்
சொல்லென்ன வன்னோனுஞ் சொல்லிசொல்லிக் கைசோர்ந்
இல்லையென வுண்மையுரு விங்கு. ௩0

வெளியிலா வோரணுவும் வேறாக வின்றால்
வெளியன்றி யுண்டென்னோம் வேறு - வெளியோடு
நான்கு மகத்தாக நண்ணுவதா லின்றென்னோம்
நான்மொழிவ துண்மையெவ னன்கு. ௩க

வெளிநாட்டத் தெல்லாம் வெளிமயமாக் காணும்
வெளிநாட்ட நீக்கத்து வேறாய் - எளிதறிதி
நாட்டபே தத்தளவா நண்ணுமுல கெங்ஙனிதை
நாட்டுது முண்மையென நன்கு. ௩உ

நாட்ட மிருவழியு நாடாதிங் கேசமமா
நாட்டமது பெற்றறைதி நாமேற்பம் - எட்டறிவால்
ஆகா திதுசொல்ல வாராது மீதுண்மை
ஏகாது சொல்லென்ன விங்கு. ௩௩

ஓதியக்கண் ணுங்கவனு மோடத் தலைப்பட்டான்
வேதியனே யீதழகோ மேலோர்க்கு - நீதியே
யன்றி யறைகிலன்யா னேயோவென் போதிப்பீர்
இன்றுலகில் போதகரா யிங்கு. ௩௪

என்றுரைத்துங் கேளாம லேகித்தன் னூர்சென்று
நன்றுணர்ந்த சாஸ்திரிபா னுடியே - அன்றவர்க்கங்
கிதெல்லாஞ் சொல்ல வெமக்குவலி யில்லெனவே
யோதவவ னுந்திகைத்தா னுற்று. ௩௫

வேங்கடேச ஜீர்பால் விரைந்தோடி நம்மதந்தான்
சங்கடங்கொண் டேகத் தவிக்குதே - அங்கொருவர்
ஞாயத்தால் யூகத்தா னுமறியா ரசத்தாற்
காயத்தை யென்சுமப்போங் கண்டு. ௩௬

அவருந்தன் பட்டத் தலங்காரம் போர்த்துச்
சிவிகையே றிக்கடிதிற் சென்றங் - கவர்கண்டு
சாரமற்ற தாவிங்கே சாற்றுவதென் வைணவத்தை
ஓரயா னிங்கே யுரை. ௩௭

இன்னவஸ்தை நாமென் றிருக்குமே லுண்மையதா
வின்னமத நாமென் றிருப்பமே - யின்னதொடு

நானெனற்கிச் சென்மமென நாட்டுகியே லின்னமதம்
நானெனற்கிங் காகு நயந்து. ௩௮

இல்லாத கேள்வியெலா மீங்கிசைத்தல் ஞாயமதோ
இல்லா அனுபவமோ விம்மொழிகள் - இல்லாதன்
றென்னி லிதுவுமிலாதன்று கண்டறைதி
யுன்னைவிட சொல்வாரா ருண்டு. ௩௯

இப்படிசொன் னல்விடைதா னெப்படியான் சொல்வனென
எப்படியுங் கூடாதே யேட்டறிவால் - தப்புவரும்
ஆதலினற் கௌரவமா யப்பாலே போவென்ன
ஓதென்ரு ரற்பமதா வொன்று. ௪0

எதுமூன்ருத் தோற்றுமுயிர்க் கெவ்வவத்தை தோறும்
மதியன்றி யில்லையெனின் வாய்மை - மதியன்றி
எந்தமத மெவ்வுயிர்க்காம் யார்க்கு மதியில்லை
வந்தவழி செல்மூடி வாய். ௪௧

கண்டிலையோ ஜீயர்நான் கண்டார் வணங்குவார்
கண்டபடி வைவதெவன் காணென்று - விண்ட
மதியினற் சித்துவித்தை மானதமும் பேதித்
ததிரசில காட்டின ரங்கு. ௪௨

உலகமெலா மேல்கீ ழுருண்டாலு மஞ்சோம்
அலகில் துயரிழைக்கி லஞ்சோம் - நிலைகலங்கச்
செய்யினு மஞ்சோமே ஜீயரே வந்தவழி
பையவே போகும் பரிந்து. ௪௩

என்றுரைக்கச் சீறியெழுந்து விசிட் டாத்துவிதம்
நன்றறியாய் தூஷித்தல் ஞாயமோ - இன்றென்றூர்
சங்கற்ப மன்றிச் சகநிலைமை காட்டென்ன
சங்கற்ப மாமோ சகம். சச

எண்ண மணுவேனு மின்றித் துரும்பி தெனத்
திண்ணமதாக் காட்டுதியேற் றீர்வென்ன - எண்ணந்
துணைக்கருவி யன்றியெங்ஙன் சொல்லவெவர்க் காகும்
துணைக்கருவி யாகத் துரும்பு. சரு

எண்ணமன்றி வேறாக வீங்கறியக் காட்டென்ன
கண்ணிலதா லின்றாமோ காணுலகம் - எண்ணிலைகொல்
என்னிற் றுரும்புந்தா னென்னபொருள் சொல்லென்ன
அன்னதுரு வாமென்றா ரங்கு. சசா

விகாரமோ வுண்மையோ மேவுமிது வென்ன
விகாரமே யென்னிலெது மேவும் - விகாரமதா
வென்னப் பிரிதிவெனி னீதியல்போ வன்றோசொல்
லென்னவியல் பேயென்றா ரிங்கு. சஎ

இயல்பாயின் வேறென்றா லேன்மாறுமையா
செயலாயி னார்செய்தார் செப்பில் - செயலென்பம்
என்னிலிரு மாறுவதா லிவ்வணுவின் சையோகம்
இன்னவடிவாக் காட்டிற் றிங்கு. சஅ

இப்படிவிங் காவதினு லீதியல்பா மென்றுரைக்கில்
இப்படிசொன் னீச னில்லெனற்காந் - தப்பிலையே

நாஸ்திகனீ யென்றதற்கு நான்ஜீய ராமென்றார்
ஆஸ்திகத்துக் கெல்லா மடி. சகூ

உயிர்செயலன் றதலினு லோதினர் மேலோர்
இயற்கையென மாறுக விங்கே - செயற்கைக்கு
இக்கருத்தை யோராதென் னென்னச் செயற்கை யென்றார்
இக்கருத்தைக் கேட்டபின் னிங்கு. ருo

மண்ணின் விகாரமதால் மண்ணுருவைத் தள்ளியெங்கே
மண்ணுதுரும் பாக வலியுண்டோ - மண்ணுக்கிங்
கில்லேனு மென்னபொரு ளிங்குருவாக் காணுதெனில்
நல்லாய்கே ளன்னதனை நன்கு. ருக

உருட்சி நீட்சி யாதியிவை யோர்முதலின் பண்பே
மருட்சியா லொன்றையொன் றுவாயால் - பரிட்சையிலார்
சொல்வதுபோற் சொல்லேல் சொரூபமெலாந்தோற்றமதே
சொல்வதனைக் கண்டறிந்து சொல். ருஉ

குண்குணியா காதென்னிற் கோதிலோய் கண்டு
குணிமாத் திரமிதென்று கூறாய் - அணுவேனுங்
குற்றமின்றி யென்னவவன் கூறவிட மில்லையென்றான்
உற்றதுமண் ணேயிங் குறும். ருங

குணங்கா ரணமல்ல கூறுந் துரும்பு
கணித்தபெயர் வேறதனாற் கண்டு - இணக்கமுறச்
சொல்லென்ன மட்குத் துரும்பென்னில் காரியமிங்
கில்லைபொருள் வேறு யிதில். ருச

தனித்திது வென்றற்குத் தடைவருவ தாலே [கென்
தனித்தெங்ஙன் சொல்வனெனிற் றக்கோய் - தனித்திதற்
றுள்ளபெயர் வீணுமே லோதுகின்ற வெப்பொருட்கும்
உள்ளபெயர் வீணு யுறும். ருரு

இருக்குதெனிற் காட்டென்றீ ரில்லையெனி லுண்டாய்
இருந்து விவகரிக்க வீங்குறுமோ - கரந்தென்றீர்
என்செய்வ னென்னி லெவருமிலை சொல்லவலார்
நின்னிலுந் தீர்ப்புசெய நின்று. ருசு

முன்னுண்டாய்ப் பின்னின்றாய் முற்று முடியு மெனில்
இன்னவா றுயதெதிங் கீதன்றேல் - அன்னதனை
யாய்ந்துணர்ந்து சொல்லென்ன வையா நினைவென்னில்
ஆய்ந்துநா னேற்க வறை. ருஎ

துரும்பெனற்குச் சொற்பொருடான் சோதித்துங் காணேன்
துரும்பிங்கே தோற்றமுஞ் சொல்லா - யிருந்ததே
உண்மையாத் தோற்றுவது முண்டா யறிவதுவும்
உண்மை நினைவா யுறும். ருஅ

நினைவே துரும்பதனு னீங்கிற்றே யன்றாய்
நினைவன்றி யுண்டில்லை நேரே - யினையதெனக்
கண்டறியே னுதலினுற் கட்டுரைத்தே னின்னதென
விண்டுரைக்கக் கேட்டிவரு மேல். ருகூ

தூலவுருவாந்துரும்பு சோதிக்கச் சென்றதெங்கே
தூலவுரு வுண்டாகிற் சொல்லலாம் - தூலயாத்

தோற்றல் மனதன்றித் தூலவுரு வில்லென்னில்
தோற்றுமனங் கண்டாய்ந்து சொல். சூ0

மனத்துரும்பும் போயிற்றே மாறுது நோக்க
மனதும்பா ழாய்காணு மாறி - மனதென்னும்
பேருமிலே யூருமிலே பின்னுமிலே முன்னுமிலே
யாருமிலே நானுமிலே யங்கு. சூக

அகலாதங் கேநின் றறிந்துசொல் லென்ன
அகன்றொளிருஞ் சோதியெங்கு மையா - புகன்றிடநான்
அன்னியமல் லாததினு லந்நிலைமை சொல்லறியேன்
என்னவிழுந் தானடியி லிங்கு. சூஉ

என்னகத்தை யெல்லா மிமைப்போதி லேகெடுத்திங்
கென்னை விளக்கியதற் கென்செய்வேன் - அன்னையே
என்று வலமிடம்வந் தேத்திப் பணிந்தெழுந்து
நின்றுருகி ஞன்சோர நீர். சூரு

ஆண்டா னடிமைநிலை யையாவறைதி யென
ஆண்டவனே யொன்றுமறி யேனே - யீண்டுநான்
உன்னருளாற் சோதியன்றி யொப்பிலா யென்சொல்வன்
என்னதவப் பயனோ விங்கு. சூச

நம்மாள்வார் கண்ணன்மொழி நன்னிலையை யின்றுணர்ந்தே
எம்மானே நான்குருவா யீங்கழிந்தேன் - சும்மா [ன்
பெருமைக்கே யல்லாற் பெறும்பயனொன் றில்லேன்
அருமையினே யப்பாலென் றங்கு. சூரு

விழிக்கி னுலகா விளங்குதே யென்னில்
விழிப்பொளியா நிற்கவிங்கு மேவில் - பழிப்பின்றிச்
சின்மாத் திரமாகுஞ் சிந்தித்துக் காணென்ன
சின்மாத் திரமென்றான் றேர்ந்து. சூசா

இன்னுமைய முண்டாயி னீங்கறைதி யென்னவ்வர்
என்னபடி யானிருக்க வீங்கென்னில் - தன்னை
மறவாது நில்லென்ன மாருது தன்னில்
இறவா திறந்தா னினி. சூஎ

வைணவம் வாழி வகுத்தோ ரடிவாழி
வைணவத்தி லேயுண்மை மன்னியதால் - வைணவராய்
நின்றுமறி யாரிருந்தென் னேசரடி யார்வாழி
என்றுமென் னுள்ளத் திருந்து. சூஅ

சுருதியுத்தி யோடு சுவானுபவ மொக்கச்
சரியாகக் காட்டுமதந் தானிவ் - விருமதமே
பல்லாண்டு வாழி பரிபாகர்க் கின்பநிலை
ஒல்லையினி னல்க வுவந்து. சூகூ

---

வைணவமதசித்தாந்தவாதம் முற்றிற்று.

உ படலம்-டு-க்கு ஆ கவி-சசூஅ.

திருச்சிற்றம்பலம்.

# சாத்தேயமதசித்தாந்தவாதம்.

சாத்தேயன் வந்து தனித்தெதிரி னின்றையா
சாத்தேய மும்பொய்யாச் சாற்றுவதென் - சாத்தேயம்
முத்திக்கு வித்தாகு மூதுணர்ந்தோர் கொள்கையிது
சத்திமய மாதலினாற் றான். க

சத்திவயப்படார் தாமெங்கு மில்லையெனின்
சத்தியெனற் கருத்தஞ் சாற்றென்ன - சத்திக்கு
வல்லமையென் பாரிவ் வலிமையையே பெண்ணாக்கி
வல்லபையென் றேதொழுவோம் வந்து. உ

ஒன்றையொன்றுக் கொண்டதென வுன்சொல்லே காட்டுவ
இன்றதைதுங் கற்பனையென் றென்னையம் - நன்றாய் [தால்
முதற்கோண லாயிற்றே முற்றுமென்ன வென்பன்
இதற்கென்ன சொல்வா யினி. ௩

மாதர் வசத்தில் மனங்குழம்பி யாடவர்கள்
எது நிலையறியா தேங்கியே - மோதும்
பிறவிக் கடலிற் பெயரவகை யில்லார்
அறிகிலையோ லவையா வதை. ச

அப்பா வதுமெய்யே யாடவர்பால் மோகித்துத்
தப்பாது சிந்தையவர் தாமாகி - யெப்போதும்
பித்தாவார்க் கெச்சத்தி பேதாயாண் சத்தியுண்டோ
எத்தாற் படித்தையோ விங்கு. ரு

சத்தியே தேவாகச் சாதித்த லெங்கள்மதம்
சத்தனையே தேவாகச் சாதிப்பர் - மற்றயதம்
சத்தியே முக்கியமேற் சத்தனே யென்பரவர்
சத்தியின் வல்லமைகேள் சற்று. சா

இச்சத்தி தானே யிருக்குமைந்து சத்திகளாய்
இச்சையாதி யென்றுரைக்கு மெம்மறையும் - இச்சத்தி
யில்லாப் பரமுயிர்க ளெங்கெங்குந் தேடினிலை
யில்லா வுலகெங்கு மில். எ

சத்தி யிலாவிடத்துச் சத்த னெதுசெய்யும்
சத்திக்கே யைந்துதொழில் சந்ததமும் - இத்திறத்தால்
எம்ப்ரம்ம மென்றெவரு மேசுவதைக் கண்டிலைகொல்
எம்ப்ரம்மம் போன்றவரை யிங்கு. அ

நான்குவாக் காலெங்கு நாட்டிற்றே சத்தியையே
நான்மறையைக் கண்டிலைகொனன் காய்ந்திங் - கேன்கர்ணு
ஐயமிதி லென்னி லசைக்குமிதை யாதசைக்கும் [ம்
பையவிது கண்டு பகர். கூ

தன்னை யசைக்கத் தனக்கோர் முதலின்றால்
தன்னசைவி லப்பரமுந் தானசையும் - இனனதே

சத்தியமா மென்னிற் றனியே யிதினும
இத்தகைய தென்றிங் கிசை. க0

உருவா யருவா யுபயமுமாய் நிற்குந்
தெரிவாகி யன்றாகிச் செப்பிவ் - விருமையுமாய்ப்
பின்ன மபின்னமுடன் பின்னுபின் னந்தானு
யின்னு, மநந்தமுள் விங்கு. கக

சத்தா யசத்தாய்ச் சதசத்தா யெப்போதும்
மெத்தகட னுகடனய் வேறாகி - யித்தகைய
தென்றுரைக்கக் கூடா திருப்பதுவே சத்திநிலை
யென்றுரைக்கிற் கேளா யினி. கஉ

உன்ன லுணர்த லொழித்துநின் சத்திநிலை [வோ
யின்னதெனக் காட்டென்ன வீங்கெவரும் - சொன்னது
வாக்குமன மெட்டாத மாமாயா சத்தியென்றார்
நாக்குநாக் கென்பதொக்கு நாம். கந

அவாச்சியமா மென்னி லஃதுண்டோ வின்றே
தவாதிருப்ப தாலுலகஞ் சத்தே - அவாவளவாம்
ஈதேயெஞ் சித்தாந்த மென்னி லுலகநிலை
ஓதா தசத்தாக வோது. கச

கண்டிருக்க நீவுலகைக் காட்டென்ன லென்னமதி
கண்டாலும் வஸ்துநிலை காணேனுன் - கண்டுணரப்
பூதப் பவுதிகத்திற் பொன்றா தொருபொருளை
ஈதென்று காட்டுகென் விங்கு. கரு

கையிதென்று கண்டிலையோ காட்டென்ன லென்னமதி
கையிதென்று வேறுபொருள் காட்டாது - கைநாமம்
ஏற்கும் பொருளிலென்றிங் கெள்கண்முன் சுட்டுதியேல்
ஏற்பன்யா னப்போதே யிங்கு. ௧௬

இதுவென்று சுட்ட விதற்குப்பேர் தோலாம்
இதற்குள் ளிருப்பதெனி லென்புஞ் - சதையாதி
யாமிதற்குப் பேருண்டே யையோகை யெங்கேயோ
நாம மநர்த்தமதா நன்கு. ௧௭

இல்லாயிற் றேற்றுமோ வீங்கிருக்கிற் காட்டாதென்
இல்லாயிற் செய்யுமோ வெத்தொழிலும் - நல்லாய்கேள்
வேறுபொருள் கையோக மேவுமே கையாதி
தேறிலையோ யப்பாநீ செப்பு. ௧௮

தத்தமக்கே யுள்ள தனித்தனிநா மங்களெலாம்
மித்தையாப் போக விளம்புவதென் சத்தியமாக்
கண்டிருப்ப மென்றுரைக்கிற் கைபோலக் காட்டவல்லை
அண்டமெலாம் போது மடக்கு. ௧௯

காரியமே பொய்யாகிற் காரணமென் சொல்லுதும்யாம்
காரணமு மித்தையே கண்டிலைகொல் - ஆரணத்தின்
ஞானகாண் டத்தி னவின்றபொரு ளுண்மைதனை
ஏனபிமா னத்தையொழி யிங்கு. ௨0

மித்தையாப் போகாது வேறுபொரு ளுண்டென்வ
சத்தியமாச் சாதிக்கத் தக்கதுண்டோ - எத்தடையு

மின்றியெனில் மெய்யை யினிவிளம்பக் கேட்கவலை
யன்றுநீ யென்ன வவன். உக

எல்லா முணர்ந்த வெனக்கீருமை யோவென்ன
எல்லா முணர்ந்தாலு மீதருமை - நல்லாய்கேள்
வித்தையிலெல் லாம்பிரம வித்தையெனக் கேட்டிலையோ
எத்தலத்து மீதொப்ப தில். உஉ

இருந்தபடி யென்று மிருந்தொளிர்சிற் சோதி
யிருந்தபடி யென்று மிருக்கத் - தெரிந்ததுவாய்
நில்லா ததனை நினைத்தபடி கற்பித்துப்
பொல்லா மயலழிவம் புக்கு. உ௩

உடலேறு நானென்ன லுண்மையா யெப்பால்
இடமென்ன வென்றுரைக்க வீதொ - திடமாகக்
கண்டிருக்க கேட்பதென்னை காணுமுட னலவே
கண்டுரைப்பா ரெங்குமிலை காண். உ௪

நானென்ன லென்னபொரு ளென்னு மில்லையுயிர்
ஆன்றினுற் சொல்லென்ன வையறிவே - நானென்னில்
நானுண்டே சொற்பனத்தி னுடமைவை யின்றேனும்
நானென்ன லாகுமன நன்கு. உ௫

மானதமெங் கேசுழுத்தி மாறுது நானிருக்க
நானென்னல் சீவனெனி னன்கயலைத் - தானறியும்
ஆன்றித் தனையறியா தாதலினு னுகா
தென்றறையப் பின்ன ரிவன். உ௬

தன்னையே தாளறியத் தக்கனா னெங்கனுந்தா
னின்னதெனக் கேட்டறியே னென்றுதாக்கில் - அன்ன
தருமையே யார்க்கு மருமையல, ஞானிக்
கிருதிறத்த நானு மிது. ௨௭

ஒன்றுசுக துக்கத்துக் கொன்றுபே ரின்பத்துக்
கென்றசுத்த சுத்தமதை யீங்குறைத்தார் - அன்றுமற்றை
தொம்பதத்திற் கண்டிலைகொல் சோதித்துப் பாரென்ன
தம்பமென நின்றான் றனித்து. ௨அ

நானென்ன லெத்தனையோ நாடிற் கணக்கில்லை
நானெல்லாஞ் சேர்த்தொன்று நாடென்ன - நானுடலாக்
காணுதெனி லெவ்வுடலுங் காணுது நில்லென்ன
காணுதொன்றுந் தோன்றாமை காண். ௨௯

அப்படியே சாயா தனவரத நில்லென்ன
அப்படியே நிற்கநிற்க வானந்தம் - ஒப்பில்
கடலனுவா வெங்குங் கரைபுரளக் கண்டங்
குடல்படிய வீழ்ந்தா னுவந்து. ௩௦

ஆண்பெண் ணலிபேத மாங்கொன்றுங் கண்டறியேன்
ஆண்பெண் ணலியா யழிந்தநான் - மாண்புடைய
சற்குருவே செய்தவமே தாக்கற்ற பூரணமே
அற்புதனே யென்றேத்தி யங்கு. ௩௧

ஆரையார் கண்டிடுத லாரையார் போகித்தல்
ஆரையார் சுற்றமென லையையோ - ஆருமிலை

மண்ணையன்றி யெண்ணமொடு மாறுக நானேனென்
எண்ணமெலாஞ் சிற்சோதி யிங்கு. கூஉ

அகம்பிரம மெய்பதனை யையமறக் கேட்டிங்
ககவிளக்க மேயெங்கு மாகி - மிகத்தெளிந்து
நிர்விகற்ப மாகின்று னீங்கா ததுவதுவாய்ச்
சர்வம் பிரமமெனத் தான். கூங

---

சாத்தேயமத சித்தாந்தவாதம் முற்றிற்று.
படலம் ரு-க்கு - ஆ கவி ருoக.



திருச்சிற்றம்பலம்.

# பிர்ம்மசமாச்சியமதசித்தாந்தவாதம்.

பிரமசமாச் சத்தான் பெரியோன்முன் வந்து
பிரமமன்றி யாதொன்றும் பேணுர் - திரமாக
என்னத் தெரிவன்றி யீதென்று காட்டுதியேல்
அன்னதே தீர்வெமக்கிங் காம். க

இவ்வுலக மீங்கிருக்க வீதா லவருண்டாம்
இவ்வுலகு ஞெப்தியன்றி யீங்குரைக்கிற் - செவ்விதா
ஏற்பமென வன்னேனு மீதாகா தென்றுரைக்க
ஏற்பதெவர் மூடரன்றே யிங்கு. உ

சிற்றறிவு நம்மாற் சிவம்பே ரறிவுண்டாம்
சிற்றறிவிங் கெம்மட்டோ செப்பென்ன - உற்ற
உடலளவா மென்னி லுறக்கத்திற் காணும்
உடலேது சொல்லதனை யுற்று. ௩

வாசனையா லென்னிலது வாசனையாத் தோற்றலெது
வாசனையாத் தோற்றுவது மானதமே - யோசிக்கில்
என்னில் மனமின்றே லீரிடத்து மீருடலும்
என்னவித மாக்காணு மில். ச

இந்நிலையால் மானதமே யீங்குயா னென்பனெனில்
அன்னமன துண்மையுரு வாராய்ந்திங் - கின்னதெனக்

காணாது சொல்லற்க கட்டுரைக்கி னீகெடுவை
நாணாது சொல்பவர்போ னடு. ௫

இன்னதெனச் சொல்லற்கிங் கென்னலா காதென்னிற்
சின்னமவிச் சின்னமதாய்த் தேருமே - இன்னவிரண்
டம்மையுமா நிற்கு மதுகண்டு நிற்றியேல்
தம்மை விளங்கத் தரும். ௬

ஞாயமே யுன்வசன நாடுவழி யாதென்னில்
நீயிங் கனமிருந்து நில்லென்று - மாயோக
மைந்துமுறைவழியே யாங்காங்கு காட்டியக்கண்
ஐந்துநிலை காட்டிற் றகம். ௭

அக்கணமே யாநந்த மாகி யடிவீழ்ந்திங்
கிக்கருத்தை யோரா திகழ்ந்தேனே - மெய்க்குருவே
ஐயனே யான்செய் யபசார நீபொறுத்தி
பொய்யகல வென்னுட் புகுந்து. ௮

சந்தேக மெல்லாந் தவிர்க்கத் துவிதநிலை
அந்தமுத லின்றியே யாயினான் - இந்தநெறி
கண்டார் விழுவரோ காணுலகப் பாழ்நரகில்
அண்டாதே யெப்பற்று மங்கு. ௯

இவ்வாறு பற்பலவா யேத்தி வலம்வந்து
ஒவ்வா வனுபூதி யுண்மைநிலை - செவ்விதாக்
கண்டபடி யேற்கக் கழறி யடிவீழ்ந்து
கொண்டுவிடை சென்றான் குழைந்து. ௧0

---

பிர்ம்மசமாச்சியமத சித்தாந்தவாதம் முற்றிற்று.
படலம் ௭ - க்கு ஆக கவி ௫௧௧.

உ

திருச்சிற்றம்பலம்.

# காலப் பிர்ம்ம மத சித்தாந்தவாதம்.

காலபிர்ம்ம வாதி கடிதவற்பாற் சென்றையீர
காலமும் பொய்யாக் கழறுவதென் காலநிலை
இன்னதெனக் கேட்டறியீ ரீதே யெவைக்குமுடி-
இன்னதுபோற் றீர்ந்தநிலை யில். க

எக்கா லமுமுள்ளா னெம்மிறையென் றேசொல்வீர்
அக்காலத் துட்பட்டா னுயிற்றே - யிக்காலத்
தன்றிச் சடசித்தை யாயுங்கா லில்லையே
என்று மொருபடித்தா மிங்கு. உ

எவ்வுயிருந் தோன்றி யிறத்தலுங் காலத்தில்
எவ்வுலகு மிங்ஙனமே லென்செய்வம் - எவ்வெவையுங்
கண்டு மறைவனவுங் காட்சியும் போகந்தான்
உண்டு கொலோ வேறெதிலு மோர் ௩

முக்குணத்திற் றோன்றினர் மும்மூர்த்தி யென்னுமிடத்
திக்கூற்றே காலமதி லென்றுணர்த்தும் - எக்கலையும்
கற்று யறிகிலையோ காலத்தை யார்கடந்தார்
அற்று ரெனல்சொல்லே யாம். ௪

காலங் கடந்தபொருள் காலங் கடந்தவிடம்
காலங் கடந்தேயிர் கட்டடங்காக் - காலங்

கடந்தபர முண்டென்று கற்றுரைப்பார் காணேம்
கடந்திரோ நீருமதைக் காண். ரு

நேற்றின்று நாளையென னீங்கினு ராருமிலே
நேற்றின்று நாளையென னீக்கமெவன் - சாற்றீர்
அணுமகத்தாங் காலநுட்ப மார்தா னறிவார்
கணிதரு மையமுற்றல் காண். சா

நுட்பத்து ளெட்டாத நுட்பமாய்ப் போகுமெனில்
நுட்ப மறிவடங்கா நுட்பமாம் - நுட்பம்
மனவாக்குக் கெட்டாத வஸ்துவெனில் வேறெங்
கினியெதுவுண் டேது மிலே. எ

எம்மதத்தோர் மூர்த்திகளு மிக்காலத் துட்படலால்
சம்மதியோ மிம்மதம்போற் சாதிக்கில் - எம்மதமும்
பஞ்சகிர்த்தி யந்தானும் பார்க்கி லிதினிகழும்
பஞ்சகர்த்தா வேறுண்டோ பார். அ

என்ன வவரு மிவையெல்லாஞ் சத்தியமே
உன்னலொழிந் திக்கால முண்டெனவே - என்னெதிரிற்
காட்டுதியே லேற்பமெனக் கண்ணெதிரிற் றோற்றுவதைக்
காட்டென்ன லென்னமதி காண். கூ

தெரிவதனைத் தள்ளித் தெரிய வெவர்க்குந்
தெரிவியெனக் கூடாதேற் செப்பப் - பெரிதாகிக்
காலமின்றே வென்றிடிலோ காலமெங்கே கேவலத்தில்
காலமெங்கே மாறிற்று காண். க0

மாறிலதே லென்று மறைவானேன் கேவலத்தில்
மாறதற்கன் றேலெதற்கோ மானதனுக் - கேற்றலெனில்
உண்டேல் மனங்கால முண்டா மொடிங்கிலிலை
உண்டாகத் தானே யுரை. கக

எந்தக் கணமு மிருக்கு மனமிருக்கில்
இந்தவகை யில்லென்பா ரெங்குமிலை - அந்தமுதல்
இன்றேனுங் காலந்தா னெங்கே மனமன்றி
என்றுமுண்மை யிங்கிலையென் றெண். கஉ

காலநோக்கி லுண்மையதாக் காணுமே காலந்தான்
காலநோக்கை விட்டுக் கருதுவதிற் - சாலவே
நாட்டமுறின் மானதந்தா னண்ணுமே யுண்மையதா
நாட்டுவன்யா னின்னுமிதை நன்கு. கரு

பழநாட்டந் தன்னிற் பழமே விளங்கும்
விழிநாட்டந் தன்னில் விழியே - வழுவின்றிக்
காணு மனுபவத்தைக் கண்டிலைசொல் மாறுமோ
நாணமிலார் போலுரையே னன்கு. கச

ஒருதலைத் தீர்ப்பினு முண்மையென யாரும்
இருதலைத் தீர்ப்பே யெடுப்பர் - பெரிதுந்தாம்
கேட்டிலையோ விம்மொழியுங் கிட்டிப் - பெரியவர்பால்
நாட்டமதைக் கற்றிடுக நன்கு. கரு

அறிபொரு ளாட்டத் தறிவேன் விளங்கும்
அறிபொரு ளேன்காணு மறிவைக் - குறியாகக்

காணுங்கா லீதருமை கண்டா ரெவரு மிலை
துணைப்பார் காணார் துணிந்து. கசு

இருநாட்டப் பண்டிதமு நீங்ககன்று சாயா
தொருவா திடைநாட்டத் தொன்றில் - மருவுநிலை
சத்தியஞ் சத்தியமே சந்ததமும் வேறில்லை
இத்திறத்தைப் போலெங்கு மே. கஎ

என்றனவி லன்னே னிறைஞ்சியரு ளென்றேத்த
நன்றெனவே யங்கொன்றை நாடென்ன - அன்றே
நியதி சீலந்ததனை ஞேயமதைக் காட்டப்
பயகம் பனமொழிந்தான் பார்த்து. கஅ

வேதாந்தம் போலுண்மை வேறெங்குங் கண்டிலன்யான்
நாதாந்த போத நழுவுங்கால் - ஏதாந்தம்
இல்லை யெனவிறைஞ்சி யேத்திப் பலவாறுக்
கல்லையொத்து நின்றான் கடை. கக

சின்னாள் கழிந்து சிறைதவிர்ந்தான் போலுவந்து
பன்னாள் மலமயக்கைப் பார்த்தழித்து - நன்னாள்
சுயஞ்சோதி யென்றிருந்தான் சுத்த மசுத்த
வயப்படா தெங்கு மகிழ்ந்து. உ0

தன்னிறைதா ளேத்தித் தனதிடத்திற் கொண்டுவிடை
மன்னிபரிச் சின்னமதை மாற்றியே - எங்கையுங்
கண்டப்பாற் றேர்ந்த கலங்கா நிலைநின்றான்
விண்டுரையா தெங்கும் விழைந்து. உக

---

காலப் பிர்ம்மமத சித்தாந்தவாதம் முற்றிற்று.

படலம் அ-க்கு ஆ கவி ருகஉ.

உ

திருச்சிற்றம்பலம்.

# சூன்யப் பிர்ம்ம மத சித்தாந்தவர்தம்.

சூன்யபிர்ம்ம வாதி துணிந்தவர்பாற் சென்றையா
சூன்யமதை யும்பொய்யாச் சொல்வதெவன் - சூன்யமதில்
இல்லாப் பொருளாதி யில்லா வுயிராதி
இல்லாப் பரனாதி யில். ௧

இன்னதெனை வாக்குமனக் கெட்டாச் சுயம்பிரமம்
அன்னதனை யாரறிவா ரா ஆஆ - அன்னையார்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலுக் கப்பாலென் றார். ௨

எங்கணுஞ் சூனியத்தை யிக்கணமே காட்டவலம்
இங்கங் கெனுதபடி யேனையம் - பங்கமுள
நம்பிக்கை யன்றிதுதா னுட்டோ மதத்தரைப்போல்
இம்பரே காண்மினிதை யின்று. ௩

எப்பொருளைச் சோதிக்கி னெல்லாம் வெளிமயமே
மெய்ப்பொருளீ தன்றியெங்கும் வேறில்லை - தப்புமதப்
பித்தர்போற் பொய்சொல்லோம் பேரறிவுஞ் சிற்றறிவும்
இத்தையன்றி யெங்குதிக்கு மில். ௪

கொண்டுபோவதொன் றுமிலைகொள்ளைகொள்ளையாவாழ்ந்துங்
கண்டிவிரேர் வெம்மதத்துங் கற்றுணர்ந்தீர்- கண்டவர்போல்
முன்பின் பிறழ்ந்துளர்வீர் முன்னேனைக் கண்ணெதிரில்
அண்டப் புரட்டரென லாம். ௫

மாருத் திருத்தி வருவிப்ப தொன்று மிலை
மாருத சூனியம்போல் வல்லீர்காள் - மாறுகக்
கண்டசக சிந்தனையாற் காண்டெய்வ பாவனையால்
உண்டிகொலோ வாயிங் குமக்கு. ௬

போக்குவர வில்லாத போதமெனல் சூனியமே
தாக்கற்ற பூரணமுந் தானாகும் - சூக்கத்திற்
சூக்கமிதே வேறென்று சொல்வா ரறிவில்லார்
நீக்கியறி யார்பொய்மை நின்று. ௭

சும்மா விருத்துநிலை சூனியமே யானவரை
எம்மாலும் யாரானு மெட்டரிது - சும்மா
அயலென்ப தெல்லா மறிவினர் கொள்கை
மயலகல்வ தென்றே மகிழ்ந்து. ௮

கண்டதே காட்சியன்றிக் கண்டவர்போற் பேசுவதென்
கொண்டதே கோலமன்றிக் கோலமிலை - உண்டோ
இறந்தாற்கண் டிங்கே யெவர்வந்து சொன்னார்
பிறந்தும் பயனடையாப் பேர். ௯

பூதத்தின் காரியத்தைப் பூதமென்பீ ரெட்டறியீர்
ஆதாரஞ் சூனியத்தை யன்றியிலை - ஆதாரங்

கண்ட புலவர்மொழி கற்பனையன் றீதுண்மை
கண்டதிலை நம்பிக்கை காண். க0

நானுனென்பதினு நாட லவன்வினென்
றூனு மகிமையென்பீ ராச்சரியம் - ஏனோ
இருவரு மொக்க வியம்பியிறப் பானேன்
பெருமையிலை நுஞ்சொல் பிழை. கக

சூனியத்தின் காரியமாந் தொல்லுலகை வெல்லறியீர்
சூனியத்தை யாவெல்வீர் சொல்லளவே - கோனுளதாய்ச்
செய்கோல மெல்லாஞ் சிறிதெங்கோ லத்திலன்றோ
பொய்கோல மீதெல்லாம் பொய். க௨

சுசாதி விசாதி சுகதபேத மின்றி
நிசானுபூ திப்பொருளா நிற்கும் - உசாவுங்காற்
சூனியத்தி னுண்மைநிலை சொல்லளவே நுங்கொள்கை
ஏனிதற்கு மாறுவீ ரிங்கு. கந

நிட்டையன்றி யிந்தநிலை நேடியெட்டு வாரில்லை
கட்டமென்றோ பொய்க்கோலங் காட்டுவீர் மட்டிகள்போல்
வாசித்த தின்னதற்கோ மாண்டிடுமுன் பார்த்தும்மின்
நேசித்தென் றுனவரு நேர் கச

சூனியமென் றுலில்லை சொற்கருத்த மென்றனைமெய்
சூனியமோ வோர்தலுந்தன் றேற்றுதென் - சூனியத்தை
விட்டுனதை துன்குற்றம் விட்டா லுலகமதேல்
விட்டிரண்டு நில்லென்ன மேல். கரு

விட்டிடுதல் கட்டமதேல் மெய்யென்று கொள்வதெதை
ஒட்டா வுணர்வொன் றுளதாகத் - தட்டுதெனில்
உற்றதனைப் பாரென்ன வோயாக் கலக்கமெனின்
மற்றொன்றுங் கேளுண் மகிழ்ந்து. கசு

உணர்வொன் றுளதென்று முன்னையன்றி வேறே
உணர்வோனென் னினுடலார் - உணர்வதனைக்
கண்டிலதா னென்றான் காட்டுமிது செய்தானை
உண்டடிமை யாண்டா னுனில். கஎ

போகவிச்சை நீங்களவும் போகிப்ப தெங்ஙனுண்டாந்
தேகமன்றி யித்தேகஞ் செய்திலம்யாம் - மாகர்த்தா
உண்டவனை நம்பி யுயிர்க்குறுதி வேறிலதாத்
தொண்டுசெய் முன்னே துணிந்து. கஅ

சரியைமுத னான்குந் தனைப்புனித னாக்கி
உரியவடி வாக்க வுணர்த்தும் - பெரிதுந்தான்
ஆதலினு லிந்நெறியி லற்பமுங்கோ ணாதிருக்கிற்
சாதுசங்கத் தேநுழைக்குந் தான். கக

அப்பா லதுதன்னை யாரென்று தேடவித்துத்
தப்பா தடைவிக்குஞ் சற்குருவை - யப்பாற்
சுருதியுக்தி யொக்கச் சுவானுபவங் காட்டித்
தெரிவுமய மாகச் செயும். உО

அறிவயலென் றின்றி யனைத்துமறி வாகப்
பொறிகரணத் தாக்கனைத்தும் பொய்யாய் - நிறைவாகிச்

சச்சிதா னந்தமதாங் தன்னிலையிற் சேர்க்குமதால்
உச்சிதமா மென்றே யுணர். உக

என்ன வவரடியை யேத்தி யுறுதிமொழி
பின்னமெனக் கேட்டோ ரிடத்திருந்து - உன்னியுன்னித்
தானேதா னயினன் சற்குருவின் றாள்வாழ்த்தித்
தானவா ரீதுணர்வர் தாம். உஉ

---

சூன்யப்பிர்ம்ம மத சித்தாந்த வாதம் முற்றிற்று.

படலம் கூ-க்கு ஆ கவி ருருச.



திருச்சிற்றம்பலம்.

# மாயாமதசித்தாந்தவாதம்.

மாயாவா தத்தலைவன் வந்தவர்பா லண்ணியே
மாயா நிலையதனை வஸ்துவென - ஆயாதிங்
கெண்ணரிப் பகவா னிலையென்ப தெங்ஙனென்றான்
அண்ணணிலை யாயாத வன். ௧

எதைப்பகவா னென்பை யெதையிலை யென்பை
இதுவென்று சுட்டாதென் னிங்கே - இதையெல்லாம்
ஆக்கினா னில்லையோ யாராக யானேற்பன்
நாக்கையடக் கென்றா னலிந்து. ௨

கோபித்தாற் றீருமோ கொண்ட வழக்கதுதான்
கோபித்து மஞ்சாதென் குற்றமின்றே - கோபத்தை
ஏற்குமிடத் தேற்ப மிதின்வழக்கை நீக்காதென்
ஏற்கயான் சொல்வனென்றா னிங்கு. ௩

ஆணென்னி னென்ன வடையாளத் தாலென்ன
ஆணலதேல் யாவு மமைக்குமோ - ஆணன்று
பெண்மாயா சத்தியெனப் பேசுவதென் சாத்தேயன்
பெண்ணுண்டே லாணிலதோ பேசு. ௪

சத்தியற்ற போதுள்ள சத்த னெதுசெய்வன்
சத்தனின்றேற் சத்தியெங்கேதங்குமிடஞ் - சத்தியன்றிச்
சத்த னிதுவென்னச் சாற்றுதற்கிங் கேதுண்டு
சத்திசத்தன் பேதமல தான். ரு

சத்திசத்த னாகுமோ சத்தனது வாகுமோ
சத்தி மயமன்றிச் சத்தனெங்கே - சத்தன்
அகோசரமேற் பாழாகு மவ்வாறே சத்தி
யகோசரம தாலங்ங னாம். சா

இருவர் வழக்கதனை யில்லையென்றே காட்டும்
உருவருவ மென்றனு மோடும் - தெரிவிலதால்
இல்லையுண் டென்பனவு மிங்ஙனமா மாயுங்கால்
எல்லையின்றிக் கற்றோய்சொல் லிங்கு. எ

அனுமானத் தீர்ப்பிங் ககலுமே யெங்கும்
அனுமானத் துண்மையுரு வாயில் - அனுமான
வல்லவுமக் கேதக்க மாயாவா தப்பெயரை
அல்லர்மேற் சொல்லினெவ னாம். அ

உபாதிகுணஞ் செய்கை யுயிர்பரம தென்பீர்
உபாதிகுணஞ் செய்கைமுத லோரீர் - உபாதியையே
வத்துவென்பீர் மாயையன்றோ மாயாவா தக்குரியீர்
எத்திறத்தா லேற்போ மிது. கூ

மாயைதனை வஸ்துவென வந்திப்பீர் நாமன்றே
மாயாதீ தப்பொருளை வந்திப்போம் - மாயாவா

தப்பெயர்நீர் மன்னுவீர் சாற்றுவதென் மற்றவர்மேல்
அப்படிசெய் தாற்பெருமை யென். ௧௦

கண்ட மகண்டமெனக் காண்ட வுபாதியதே
கண்டதில சீவேசர் கண்ணதனாற் - கண்டவர்போற்
காட்டுவீர் பொய்க்கோலங் கற்ற வலியதனால்
நாட்டுவீர் பொய்யதனை நன்கு. ௧௧

பாவ மபாவமதாப் பாழ்படுதல் கண்டிருந்தும்
பாவனையைத் தெய்வமெனப் பார்ப்பதெவன் - பாவனைதான்
சிந்தனையின் கற்பிதமே சித்தந் தெளிவதெவன்
இந்தமயக் கோராமை யென். ௧௨

தம்பெயரை யன்னியர்மேற் சாற்றிக் களிப்பதெவன்
தம்பெயரென் றோர்வதென்றே தாமறியீர் - நும்போல்வார்
கண்டு மகிழ்வதலாற் கண்ணுளோர்க் கென்னுவீர்
அண்டப் புரட்டரென லாம். ௧௩

தன்னைப்போல் மூடரென்பீர் சன்மார்க்கர் தம்மையுநீர்
உன்னிலுமக் கொப்பாரிங் குள்ளரோ - என்னமதி
மாயாவா தப்புலவீர் வஸ்துநிலை கேட்டறியீர்
ஆயாதென் னுண்மை யகம். ௧௪

ஒன்றே யனைத்தென்ப மொன்றாகு மீண்டென்பம்
ஒன்றையன்றி யில்லென்ப மொன்றென்பம் - அன்றாகத்
தோற்றமெலாம் பொய்யென்பஞ் சோதியே மெய்யென்பம்
சாற்றுவதென் னெம்மைத் தொடர்ந்து. ௧௫

மறந்துமே சொல்லோம்யா மாயாவா தத்தை
அறிந்திடு ருண்மையிதை யன்றி - அறிந்தவர்போற்
காட்டுவதை விட்டுக் கடைப்பிடிமி னுண்மைதனை
ஓட்டுமே மாயை யொருங்கு. கசு

ஒன்றுமல வப்பிரம மொன்றுமிலை வேறாக
என்றநிலை யெம்முடிபிங் கிதொக்க - அன்றுணர்ந்தோர்
ஒன்றுநீ யன்றொன்று முன்னையன்றி யில்லென்றார்
என்றுமிது பேருண்மை யில். கஎ

என்ன வவனு மிருதாள் வணங்கிமுன்சு
சொன்னநிலை காட்டெனவே சோர்வின்றி - யன்னநிலை
காட்டக் களித்துக் கலக்கமெலாம் விட்டுண்மை
நாட்டமதி னின்று னயந்து. கஅ

---

மாயாமத சித்தாந்தவாதம் முற்றிற்று.

படலம் ௧0-க்கு ஆகவி ௫எ௨.

திருச்சிற்றம்பலம்.

# நாஸ்திகமதக் கற்பிதக்கழற்றி.

நாஸ்திகன்வந் தையாநீர் ஞாயமய மாயுள்ள
நாஸ்திகமும் பொய்யென்று நாட்டுவதென்-ஆஸ்திகர்போல்
அல்ல மெதுமத மாயுங்காற் கண்டளவே
இல்லையென நம்பிக்கை யிங்கு. க

நாஸ்திகரே கேண்மினிதை நானென்ன லொன்றல்ல
நாஸ்திகமென் றீரிவையு நண்ணுதே - நாஸ்திகமேல்
இவ்வுலக போகந்தா னெவ்வுயிர்க்கு மொவ்வாதென்
எவ்வுயிரு நூதனமே யிங்கு. உ

உலகியல்பா மென்னி லொருபடித்தா யேனின்
றுலகியல்ப திங்ஙனெனி லுண்மை - நிலையிலதாப்
போவதெவ னன்னதெனிற் போகமுணர் வுக்கன்றே
ஆவதிலை மாறென் னவர்க்கு. ங

மாறிடும்பின் னலென்னின் மாறுதென் னிப்போது
மாறிடுங்கா லத்தென்னின் மாறிற்றே - தேறிலைகொல்
சொன்ன சுபாவந்தான் றுண்டா தகர்த்துருத்வம்
இன்னகா லந்தானு மிங்கு. ச

அன்னியமாய் நின்றயலை யாசித்தல் ஜீவதர்மம்
அன்னியந்தா னீங்கிலிச்சை யன்றறுமோ - என்னமதி
இச்சை யொழியளவு மெவ்வா றயனீங்கும்
இச்சையன்றி யெப்பிறப்பு மில். ரு

இச்சை யினியெழா தேற்ற செயல்முடிக்கின்
இச்சைதலை காட்டுமோ வெண்ணமேன்-எச்செயலும்
என்செய்ய வேண்டுவதின் றெப்படிதான் சென்மம்வரும்
நன்குணர்ந்தீ ரோர்மினிதை நன்கு. சா

ஆதலினுன் முன்பின் னளவிலதாஞ் சென்மங்கள்
ஈதுநஞ் சித்தாந்த மெங்கொழிப்பீர்-போதநும்
வாய்மூடிக் கேட்டிம்மின் வல்லார் சரணடைந்து
பேய்மதமென் றெண்ணுவீர் பின். எ

இம்மையிலே காண்மி னெவரெவருஞ் செய்கைபலன்
இம்மையிரு னேயடைத லிவ்வாறே-யெம்மையிலும்
தான்றான் செய்தவினை தாமே யனுபவிப்பர்
ஏன்காணு மையமிதி லிங்கு. அ

எவரெவருஞ் செய்கைபல னிங்கே நுகரின்
பவமே னெவரெவர்க்கும் பாராய்-எவரானும்
எண்ணக் கடல்காண்டற் கில்லை யிதுலேசம்
அண்ண லளந்தளிப்பா ரங்கு கூ

அகப்பற் றழுக்கறுக்கி னன்றதுவீ டென்பர்
அகப்பற்றே காமாதி யாகும்-மிகப்படித்தீர்

ஞானி யெரிப்புனல்த நல்லீச னேர்ந்தளக்கும்
கோனளிக்குங் கண்டளவு கொண்டு. ௧௦

எவரெவர்க ளிச்சைகடா னெவ்வாறங் கவ்வா
றெவரெவர்க்கு மீசனறிந் தீவன்-தவறின்றித்
தேகாதி யாவென்னிற் சேதமெவ னேற்கிலிதை
யேகாதோ நம்மிட்ட மிங்கு. ௧௧

இட்டமெலா மிங்கவுர்பா லிட்டு வணங்குதிரேல்
கட்டமெலா முண்டோநீர் காணுமினோ-கட்டடங்கார்
சொற்போலு நுந்நடைதான் சோதிக்கில் வேறன்று
கற்பதெலா மீதுக்கோ கண்டு. ௧௨

ஈச னுளனென்றிங் கெவ்வாறேறற் போமென்னின்
ஈசனன்றித் தேகாதி யீங்குண்டாய்-நாசமெவன்
வாய்க்குமென வீதெல்லாம் வாய்த்தல் சுபாவமெனின்
வாய்க்குமோ தானே மனே. ௧௩

கருவிதனைக் கொண்டிதுபோற் கர்த்தா வெதுசெய்
துருவாதி செய்வனெனி னுண்மை-தெரிகில்லாய்
இட்டமே செய்கருவி யென்றாற் றடையென்னே
இட்டமெங்ங னுங்கருவி யிங்கு. ௧௪

இட்டமே யர்திதுணை யென்னுங் கருவியதாங்
கட்டுமனே பூச்சதுபோற் கண்டொழிமின்-இட்டமொழி
தன்னிடத்தி னின்றனைத்துந் தன்னிடத்தி லேசெய்யும்
தன்னிலவை தோயாமற் றான். ௧௫

ஏற்றற் கிடமெங்ங னென்னிற் ககனம்போல்
சாற்றலா மென்றிடிலோ சாற்றன்மின்-தோற்றமதே
சூனியம தாமென்னிற் சூனியமாம் நம்மிடமும்
சூனியமாம் நாமுந் துணிந்து. க௬

இருப்பமே யென்னி லிருக்கு மிடமும்
இருப்பதனாற் சூனியமென் றெண்ணேல்-இருப்பதுவே
எட்டப் படாதெனினு மில்லாமற் போயதல
தட்டன்மி னெம்மொழியைச் சாய்ந்து. கஎ

காரியந்தா னேரிரண்டிற் காரியமொன் றேலாதென்
காரணனென் கண்ணுக்குக் காணாதென் - ஒருணர்வாய்
ஐயுணர்வும் நின்றொளிரி லக்கண்ணுக் கேகாண்பன்
மெய்யுணர்விங் கில்லையிதின் வேறு. கஅ

இக்கண்ணுக் கேன்காணா னீங்குருவ மல்லனக
மக்கண்ணுக் கோவுபய மல்லனுமாம் - மக்கினத்திற்
சீவனெனுங் கண்ணுக்குஞ் சேயா னருவமலன்
யாவனென்ப னிவ்வறிவா லிங்கு. க௯

அறியும் பொருளென்னி லாகு முலகம்
அறியாப் படுபொருளே லாகும் - வெறுமையதா
எந்நிலைய னென்றுரைப்ப மீங்கவனு மாகுமட்டும்
அன்னநிலை யெட்டவரி தாம். உ0

எட்டவரி தாமதனு மில்லையென நாமிருப்பம்
பட்டிமா டொத்துமனம் பாய்வதினாற்-கட்டமுடன்

ஓயாக் கவலை யொழியாத் துயர்சோர்வு
தீயாத் தகிப்பதற்கென் றீர்வு. ௨௧

ஈதெல்லா மெப்போது மெங்குஞ் சுபாவமெனின்
ஈதெல்லாந் தள்ளி யிருப்பதெவன் - ஓதியதேல்
தன்னாலே யீதெல்லாஞ் சார்ந்து தவிர்ந்திருக்க
என்னாகு நின்வாத மிங்கு. ௨௨

ஆசை யடக்கார்க் களவில் கவலையதாம்
ஆசை யடக்கி லவர்க்கிலவே - ஆசைநிலை
கண்டறியார் போலுநின்சொல் காணு மியற்கையெனல்
துண்டமதி காக்குமோ சொல். ௨௩

எந்தலக்கா லாசைதனை யீங்கடைதல் போக்கிவிடல்
அந்தலக்கிங் கோரிரண்டா மாயுங்கால் - இந்தவுல
கொன்றறிவொன் றிவ்விரண்டி லொன்றறிவை மற்றதனை
என்றுமறி யாய்கேட்டு மிங்கு. ௨௪

உன்னைவிட வேறன்றிங் குன்னு லதுசாணுய்
உன்னிடத்தி லுன்னனீ யுற்றுணர்வால் - பன்னுகுரு
தந்திரத்தா லீதுண்மை தள்ளி லதுதவிரத்
தந்திரம்வே றெங்குமிலை தான். ௨௫

என்னமோ சொல்லுகின்றீ ரீதெமக்கு வேண்டுவதின்
றென்னில் சுகபோக மிவ்வுலகன் - றன்னியமே
இச்சை தவிர்தற்கே யீங்குன் விசாரணையேல்
இச்சைவை யென்மொழியி லிங்கு. ௨௬

தன்னூர் கலகத்தைத் தானரசன் போக்காதிங்
கின்னசுபா வந்தானென் றேனிருப்பன் - அன்னதுபோற்
காமாதி தன்னுட் கலகமதைப் போக்காதென்
போமாறிங் கேது புறம். உஎ

உன்னை யயலா ரொழியாத் துயர்செய்யில்
இன்னசுபா வந்தானென் றேனிருப்பை - அன்னதுபோற்
சிந்தை சிதறனீ தீர்க்காதிங் கார்தீர்ப்பார்
அந்தவகைக் கேதென் னறை. உஅ

சுபாவஞ் சுபாவமெனச் சொல்லியொன்றுஞ் செய்யா
தபாவமா நிற்குதியோ வந்தோ - உபாயமாய்ச்
செய்து சுகிப்பதுபோற் சித்தஞ் சகமாகா
தெய்துமுழைப் பெம்மதே யிங்கு. உக

அந்தவுழைப் பேதென் றறிந்தார்பாற் சென்றறிதி
அந்தவுழைப் பாலன்றி யையமறு - தெந்தவிதத்
தானுமது சொல்லே யறிந்தா ரிலையென்னேல்
ஏனவரைத் தேடவிலை யிங்கு. ௩0

தேடியெங்குங் காண்பரவர் தேடாதார்க் கேதுண்டாம்
தேடவெமக் கக்கரையென் செப்புதியேல் - சாடுவன்யான்
இல்லைபக வானென்னி லெந்தவிதத் தாற்சொலியும்
இல்லையுமக் கக்கரைதா னிங்கு. ௩க

நித்தியமாந் திர்த்திதனை நேசியா ரெங்குமிலை
யெத்திறத்தா லெப்போதெங் கேயென்றிங் - கித்திருத்தி

வாய்க்குமென்றக் கேதென்னை மண்ணுலகி லில்லையே
வாய்க்குமென்க் காத்திருந்தும் வந்து. ௩௨

ஆன்மாமுன் பின்னில்லை யாமெனிலிப் போதேதிங்
கான்மா வரற்குட லாலாமென்னில் - என்வந்த
திவ்வுடற்றன் காரணமில்லையோ வீது சுபாவமெனின்
இவ்வித்தி யேன்முன்பின் னில் ௩௩

சுபாவமிப்போ தென்னிற் சொல்லாதென் முன்பின்
சுபாவமொரு போதலவே சோர்வாம் - சுபாவமெனுஞ்
சொற்கருத்தந் தேராய்நீ சொல்வழக்கிங் காரேற்பர்
அற்பருக்கே நின்வாத மாம். ௩௪

அல்லவெனின் ஞாயஞ்சொல்லார்கண்டார்முன்பிறப்பிங்
கில்லையெனி னிப்பிறப்பார்க்கிதுநமக் - கொல்லுமெனின்
எப்பிறப்பு மிப்படியே யேலோமோ முன்பிறப்பார்
இப்பிறப்பிங் கெந்தநமக் கின்று ௩௫

இந்தநா மென்றிங் கிருந்தாற் சொலப்படுமேல்
இந்தநா மில்லையென்பா ரீங்கெவரோ - இந்தநாஞ்
சைதன்ய மாந்தர்மந் தப்பாது முன்பினிலை
சைதன்ய மாங்கலப்பாற் றன். ௩௬

உடல்கா ரணத்தாலிங் குற்றதெனச் சொல்லி
முடிவி லுரையிழந்தாய் முன்னே - விடுமொழிதான்
எந்தவிதத் தானு மிலையேநுஞ் சித்தாந்தம்
இந்தமட்டும் காணமிலா தென். ௩௭

இனியுலக முண்மையென வீங்குரைப்பும் யாமும்
தனக்கென் றுருவுளதேற் சற்றும் - தனக்குள்ள
தூலதேகந் தள்ளித் தொல்லுலகத் தம்சமன்றோ
ஏனுமோ நின்னு மிங்கு. ௩அ

என்செய்வேன் காட்ட விருக்கு முடறள்ள
என்செய்வே னேற்றற் கிடங்காணேன் - என்செயலால்
ஆகா தெனிலுலகெங் காகுமுண்மை நீயேசொல்
ஏகாரார் தோற்காம விங்கு. ௩௯

நனவவத்தை யன்றிசகம் நாட்டவலா ருண்டேல்
கனவினுநா மில்லென்றல் காணும் - நனவவத்தை
யுள்ளளவு முண்மையெனி னுண்டோ நினைவன்றித்
தள்ளுதும் நுங்கொள்கை தான். ௪௦

வெற்றவெளி தள்ளியணு வேறாகக் காட்டுதியேல்
முற்றுலகு முண்மையதே மூதுணர்ந்தோய் - சற்றும்
அறிவிலர்போற் பேசாதே யானமட்டும் வாயால்
நெறியுளோர் சன்னிதிக்க ணின்று. ௪௧

எவ்வுயிரும் பாடுபடல் யாதுக்கென் றோர்ந்திலைகொல்
செவ்விதா யுன்பாட்டைச் சிந்திக்கில் - அவ்வாழும்
நீயே தெரிந்திடுவை நீங்காச் சுகமதற்கென்
றேயா துயிர்க்கியற்கை யோர். ௪௨

ஆரா வியற்கை யவாவென்றார் வள்ளுவரும்
தேராய்கொ லன்றுதித்த சேய்க்கண்ணும் - பாராய்நீ

கூகூவென் றேனழுகை குன்றாச் சுகமதற்கே
ஏகாதென் னின்கொள்கை யிங்கு. ௪௩

இச்சையே யெவ்வுயிர்க்கு மென்றுஞ் சுபாவமதால்
இச்சை யடங்கிலையே யிப்பிறப்பில் - இச்சை
அடங்காமை யால்முன்பின் னுமனந்த சென்மம்
இடங்காணும் நின்கொள்கைக் கிங்கு ௪௪

கண்ணாலேகண்டவைபோற் காண்பதெது சிந்தனையில்
கண்ணினுக்குக் காணுமவை காண்பதெவன் - கண்ணாலே
கண்டவைவுட் சென்றவல காணுமவை பூதமல
விண்டுரைசெய் வல்லையோ மேல். ௪௫

ஈதெல்லா மிங்கியற்கை யென்னிற் சுவானுபவ
போதத்தா னீருக்கப் போவதினால் - ஓதியற்கை
எல்லாஞ் செயற்கையதே யீங்கியற்கை யொன்றுமில்லை
நல்லார்பாற் கேட்டுய்தி நன்கு. ௪௬

பசுபதி பாசப் பகுப்புண்மை காணேண்
நிசவடிவீ தென்று நிகழ்த்தில் - வசையென்றீர்
என்னிலும் மூடரே யெந்தமதப் போதகரும்
அன்னவர்பா லென்னழுவே னங்கு. ௪௭

சுருதியுத்தி யோடு சுவானுபவ மொத்துச்
சரியாக வுண்மைநிலை சாற்றல்-அரிதெங்கும்
இந்துமதந் தன்னி லிருப்பா ரிதுசத்யம்
எந்தமதத் தும்போலி யே. ௪௮

அறிந்தளவு சொல்லுமதி லையாவென் றேத்த
அறிந்திடுதல் தோற்றிடுத லாகும்-பிறிந்திரண் டாய்த்
தோற்றுவதைக் காணாது சும்மா விருவென்ன
தோற்றுவதென் செய்வேன் சுரந்து ௪௯

சுரக்குமிடங் கண்டதனைச் சொல்லென்ன வையா
சுரக்குமிடம் பாழாமென் சொல்வன்-இருட்டிடத்தை
உற்றுநீ பாரென்ன வோயாப் பெருவெளியாய்
நிற்றலெனி னுற்றதனி னில். ௫௦

நிற்கநிற்க மின்மினிபோ னீங்கா தொளிருமெனின்
நிற்குதிநீ கண்டதனை நீங்காது-கற்போல
என்ன வணுவணுவா யெங்குமொளிர் கின்றதெனின்
அன்னதனைக் கண்டுநில் லங்கு. ௫௧

சோதிமய மாயொளிருஞ் சொன்ன பெருவெளிதான்
ஏதயலுங் கண்டிலன்யா னென்சொல்வன்-போதமதை
என்னினீ யவ்வா றிருக்கிலெது காணுமதை
அன்னியமா காதங் கறை. ௫௨

ஆநந்த மேமயமா யாகி யொளிர்வதெனின்
ஆநந்தங் கண்டப்பா லாகுநிலை-நீநந்தா
தங்கிருந்து சொல்லென்ன வாங்கே யகோசரமாம்
எங்கேநான் சொல்வே னிருந்து. ௫௩

ஆநந்த மேயுருவா யன்பரகத் தேயிருந்தே
யானந்த மாக்கடலா யாங்கொளிர்வை-யானிந்த

உண்மைதனை யோராதே யோர்மா னிடனீயென்
றெண்ணினே னீபொறுப்பா யிங்கு. ருச

இந்தவப சாரமதை யெள்ளளவு நீநினையா
தெந்தவிதத் தாலுமெனை யீடேற்றாய்-அந்தமுதல்
இல்லாச் சுயஞ்சுடரே யெந்தையே யெங்குருவே
பொல்லேலெற்கார் புத்திசொல்வர் போந்து. ருரு

இவ்வற் புதமெங்கு மில்லையே யென்சொல்வேன்
எவ்வெவர்க்குங் கண்மணியே யென்றேத்திச்-செவ்விதா
யஞ்சலிதன் குஞ்சியதா யங்கே விழுந்திறைஞ்சி
அஞ்சிவிடா நின்றா னடி. ருசு

இன்னு மநந்தமுள விவ்வனுபூ திக்குப்பின்
அன்னவையான் சொல்லுவன்கா ணங்காங்கே-சொன்னநிலை
காக்குந் திறங்கண்டு காதலித்த தேன்கிடையா
காக்குமவர்க் காசான்சொல் காண். ருஎ

புறம்பில் வெளிநாட்டம் போக்கா தகத்தில்
நிறைஞான விண்ணாட்ட நீங்கா-திறையேனும்
நிற்பார்க்கெப் பற்றுண்டு நின்மலராஞ் சீவன்முத்தர்
அற்பமுமேன் பாவ மவர்க்கு. ருஅ

**க-வது மகாவாக்கிய விளக்கம்.**

செயற்கையே யென்றுணர்ந்தேன் சிந்தனைநின் கண்ணால்
இயற்கையென வில்லாம லிங்கே-புயற்குதவி

இல்லதுபோ லென்செய்வ னிங்குன் னருட்குதவி
பொல்லனே னையா புகல். ருகூ

அப்பா வனுபூதி யையமற நீவிளங்கல்
தப்பாத கைம்மாறு தானாகும்-எப்போதும்
என்ன வவனடியை யேத்தி விழுந்திறைஞ்சு
இன்னுமுள தோர்குறைதா னிங்கு. சுO

இந்த வனுபவமே யெம்முன்னோர்க் கென்றுணர
அந்தமகா வாக்கியத்தி னந்தரங்கம்-இந்தநிலை
என்றுணரப் போதிப்பை யென்றானுக் கோதுவன்சாண்
நன்குணர்ந்த ஞானகுரு நாடு. சுக

ஈசனன்று நால்வர்க்கு மெம்பகவா னர்ச்சுனற்கும்
நேசத் தயன்சுரர்க்கும் நின்றுணர்த்தும்-பாசமகல்
ஞானமிது வேயாகும் நன்காய்ந் தவைபார்க்கில்
ஏனுனக்கிங் கையமிதி லிங்கு. சுஉ

வசிட்டர் சுகர்சனகர் வல்லகும்ப யோனி
நிசப்பரத்து வாசர்முத னேசர்-கசக்காத
விந்நிலையே பெற்றுய்ந்தா ரீங்கவர் நூ லாலேற்பை
அன்னவற்றை யாராயி னங்கு. சுங

வேத மசரீரி மிக்கமகா வாக்கியந்தான்
ஓதுமே நான்கதனி னென்றுகேள்-காதுற்றுப்
ப்ரக்ஞானம் ப்ரம்மமெனப் பேசுமுதல் வாக்கியந்தான்
ப்ரக்ஞான முண்மையது பேண். சுசு

அறிவெனலே ப்ரக்ஞான மன்றியர்த்த மில்லை
பிறிதோவா நந்தமதாம் பேதம்-அறிவதுவே
யானந்த மன்றி யயலாகா தெங்ஙனெனில்
ஆநந்த மல்லமுத லாம். சரு

சத்தாதி யைந்துந் தவிரவின்ப முண்டாமேல்
சித்தையன்றி யின்பஞ் செனிக்குமென்பம்-இத்தகைய
தில்லையெனி னிப்படியே யீங்கிதுவு மில்லையென்பம்
அல்லமுத லானந்த மாம். சசா

திரிசியமு மின்பஞ் செனிப்பிடமா நிற்கத்
திரிசியவா நந்தமெனச் செப்பா - தொருவிதந்தான்
சொன்னதுயா துக்கென்னிற் சொல்லி லறிவன்றி
யின்னதென வில்லையதா லிங்கு. சஎ

அறிவே சுயஞ்சோதி யற்பமும்வே றில்லை
அறிவுநாட் டத்தவர்க்கங் காகும்-பிறிதாகும்
அன்னியநாட் டத்தவர்க்கிங் காதலினுற் சித்துண்மை
அன்னியமா நந்தமல வாம். சஅ

இந்நிலையைச் சொன்னு மிட்டம்வே ருெனார்க்கிங்
கன்னியமே யின்பநிலை யானும்-இந்நிலைதான்
என்பொய்யாந் துட்டர்கடா மேலாதா னீதுபொய்யோ
என்காணு மையமிதி லிங்கு. சகூ

அறிவின்ப மாயி னயலின்ப மின்றே
அறிவன்றி யின்றே லறியேன்-அறிவாக

இன்ப நுகர்வாரை யென்னி லதுசுகிப்பைப்
இன்பமதாக் கண்டிங் கிருந்து. எ0

உள்ள தறிவே யொழிந்தவெலாந் தோற்றமதாம்
எள்ளளவு மையமிலே யேதானும்-உள்ளதிதே
யாகும் பரமபர மந்தவிரண் டுண்மைநிலை
ஏகுதும்யாஞ் சொல்லவினி யிங்கு. எக

ஏட்டறிவு காலவறி வீங்குகிரி யாயோக
நாட்டறிவிம் மூன்றபர ஞானமதாம்-நாட்டம்
அயலா தலின்ஞான மல்லவே யல்ல
மயலகற்றற் கில்லை வலி. எஉ

தன்னை யறியுந் தனக்கயலுந் தானறியும்
என்ன மயறனை யு மீங்ககற்றித்-தன்னந்
தனியா யொளிர்வதுவே சாற்றுபர ஞானம்
இனியநிலை யீதொப்ப தில் எந

தன்னை யறியாது வேறுண்டாய்த் தானறியா
தென்னுநிலை சித்தாந்திக் கேதேற்கில்-துன்னுசடம்
வத்துசித் தாந்த வகைதெரியார் சொல்வதொக்கும்
இத்துறையி னீயிழியே லிங்கு. எச

திரஞான வுண்மைநிலை செப்புதுமுன் சொன்ன
இருவகைக்கு மாதார மீதால்-பரமபதம்
ஆகுந் திரஞான மப்பா விதுவாய்த்தற்
கேகுநெறி சொல்லுதும்யா மிங்கு. எரு

இல்லை பரஞான மீங்கபர ஞானமின்றேல்
இல்லை திரஞான மிந்தபரம்-இல்லையதேல்
அத்திரஞா னந்தானே யாம்ப்ரக்ஞை யென்றதுவும்
இத்திறங்கண் டாலைய மேன். எசு

பராபரமா மிந்நிலையே ப்ரக்ஞான மேற்கும்
தராதலத்தில் வஸ்திதுபோற் சாற்றார்-நிராசனமே
வஸ்துநிலை யீதெனற்கே மாவாக் கியத்தெழுவாய்
அத்திபா ரம்போலுமாம். எஎ

உ-வது-வாக்கியம்.

நானென்று ரில்லையதா னுனென்ன வின்னதெனத்
தானுணர்த்த ஞானமுதல் சாற்றிற்றே-ஆனதினுற்
பின்னரகம் ப்ரம்மாஸ்மி பேசுமிரண் டாமொழியில்
பன்னுமறி வேயகமாம் பார். எஅ

அகமெனலிங் காரியமே யாதலினு னென்பர்
மிகவுணரார் பாஷைநிலை வேறென்-றகமதனுற்
கண்டபடி தூஷிப்பார் கற்றாரிவ் வுண்மைநிலை
கண்டதனி னிற்பார்கள் காண். எகூ

அறிவல்ல நானெனலிங் காகுமய லென்பார்
வெறியெல்லாம் வேதாந்தம் வென்றிங்-கறிவாக்கும்
ஆதலினு னறிவென் றுய்ந்தவிடத் தேபிரமம்
ஓதயிக்க மேயஸ்மி யோர். அ0

௩-வது-வாக்கியம்.

அடுத்தமா ணுக்கனைநீ யாரென்று சொல்லி
தடுத்தாள வேண்டுமதாற் றக்கோய்-அடுத்தமொழி
மூன்றதனிற் றத்தொமசி முன்பின் பிரகடிதம்
ஆன்றவதிற் றெம்பதநீ யாம். அக

நீயெனலு மான்மாவாய் நேருமத னுலறிவே
நீயறிவாய்க் கண்டொளிர நில்லென்றிங் காயமொழி
அப்பாற் பிரமாஸ்மி யாகுநிலை தானேயாம்
இப்பகுப்பைக் கண்டொளிர்வை யிங்கு. அஉ

௪-வது வாக்கியம்.

அறிவெனலே யான்மாவா மாகா தயலென்
றறியவய மான்மாவென் றுங்கே - நெறிமுறையே
நான்கா மொழியதனி னுட்டியது மோருணர்வாய்
ஆன்மா வொளிர்வதற்கே யாம். அங

அறிவே சிவமவ் வறிவேநா னுமவ்
வறிவேநீ யாமவ் வறிவே - நிறையான்மா
என்றுணர்த்த விந்நான்கு மேகவறி வாக்காண
அன்றுமறை யின்கருத்தே யாம். அச

நீநான் சிவமான்மா நீங்கா வழக்கமதால்
ஆனு மற்றையிவற்றை யாய்ந்தொன்றாய்த் - தானுக்கச்
செய்தகரு ணுமொழியே திவ்யமகா வாக்கியந்தான்
எய்துமோர் வீடெவர்க்கு மிங்கு. அரு

அவனிவனீ நானென் றடங்கிற்றே யாவும்
இவற்றினுண்மை காணி னெவையும் - இவைபோலாம்
ஓர்துறையின் மூழ்கி னுவர்நீர் முழுதும்போன்ம்
ஓர்மினிதை யுய்யும்வகை யுற்று. அசா

நான்மறையு மோர்மொழியா னுட்டாதென் னோர்பொருளை,
என்போரு மையமதிங் கேளையதில் - நான்மொழியில்
மூன்றுவ தேற்பதென்னே முக்கியமா யெவ்வெவரும்
ஆன்றவுப தேசமொழி யாம். அஎ

இம்மொழியா லெவ்வெவரு மேற்பானேன் பற்பலவாய்
இம்மொழியின் சத்தமதா லெங்ஙனெனின்-இம்மொழிக்குப்
பாஷியபே தத்தாற் பகர்ந்தசத்தார்த் தங்காணும்
பாஷியபே தங்களைநீ பார். அஅ

சங்கரமே பாஷியத்திற் சத்தியமா மேனையவை
பங்கமதாஞ் சோதித்துப் பார்க்குங்கால் - இங்கணுவும்
ஐயமிலை யெங்ஙனெனி னற்பமும்வே றுண்டாகில்
மெய்யறிவுக் கங்கவையே மெய். அகூ

அனுபவத்துக் கொவ்வாமை யற்பமதாம் யாதும்
அனுபவமோ சித்துசட மாகா - தினியசிற்
சோதிவடி வாய்விளங்கல் சொல்லல்ல மெய்ம்மையே
ஆதிவடி வாதலினு லெங்கு. கூ௦

வத்துபரி சோதிப்பால் மண்ணாதி தத்துவங்கள்
எத்திறத்து மில்லனவா யிங்கமையும் - அத்தகையால்

எல்லாமு மித்தையதே யீங்கறிவே யுண்மையதாம்
நில்லாதென் கண்டிந் நிலை. கூக

கல்விச் செருக்காற் கருதும் பொருமையினுற்
செல்வச் செருக்காற் றிடமுடலால்-வல்வினையின்
காரணத்தால் மூடத்தாற் கண்டிந் நிலையேலார்
ஆரணத்துக் கென்னட்ட மாம். கூஉ

எந்தையே வாக்கியத்தை யீங்கு விளக்குவித்தாய்
இந்தமுறை முன்பின்னென் றீங்குரைப்பை-யந்தமில்லாய்
என்றிறைஞ்ச வாசானு மெம்பெருமா னுண்மைநிலை
யென்றுமுதற் சொன்னதா மிங்கு. கூங

நானென்ப தின்றே னவிலுவது மின்றதனுல்
நானெனலைப் பின்னிங்கு நாட்டியதாம்-நானென்பான்
முன்னிலையி லென்று மொழிந்தார்பின் னீயென்றிங்
கின்னொன்று சொல்வ னினி கூச

நானெனலு நீயெனலு நாடுங்கா லான்மாவாம்
ஆன்தினுற் பின்னீ தறைந்ததாம்-எனிதனுல்
எல்லா மொருபொருளென் றீங்கதனைக் கண்டுய்ய
நல்லாய் வகைதேடு நன்கு. கூரு

அறிவி னில்லையை யறிந்ததுவாய் நிற்கில்
அறிவைமே விட்டநிலை யப்பால்-நெறியர்கக்
காட்டாதிங் கென்றதனுற் கட்டுரைத்தோ முக்கியத்தை
பாட்டதனுற் கிட்டும் பதிந்து. கூசா

அறிவாஞ் சுயஞ்சோதி யாமெனற்கிந் நான்கும்
நெறியே மறையுரைத்த னீதி - அறிவேநான்
நானே யறிவென்று நானறியக் கூறுமென
ஞானகுரு தாள்பணிந்தா னன்கு. ௯௭

யுத்தி.

சுயஞ்சோதி தன்னையே சொல்வரறி வென்னச்
சுயஞ்சோதி யெங்ஙனஞ் சொல்லும் - நயந்தென்று
பல்கால் விழுந்து பதம்பணிந்திங் கேத்திநிற்க
ஒல்காது கூறு முவந்து, ௯௮

இவ்வுலகந் தீபாதி யிந்திரிய மானதம்பின்
னிவ்வுயிர்சை தன்யமுந்தா னிம்முறையே - செவ்விதா
யொன்றையொன் றுநின் றிங்கே யோயாம லேவிளக்கும்
இன்றுன்னுள் ளேயறிதி யிங்கு. ௯௯

சைதன்ய மேதாலே தான்விளங்கு மென்னுதே
சைதன்ய மேதன்னைத் தான்விளக்கும் - சைதன்யம்
உன்னு ளொளிர்வதுவே யொன்றால் விளங்குவதோ
உன்னுளே காண்டி யுவந்து. ௧௦௦

ஒளிர்வதே சத்தீ துணர்வதுவே சித்திங்
கொளிர்வதுவா நிற்ற லுவப்பாம் - எளிதறிதி
சச்சிதா நந்தமதைத் தக்கோ யெனவுரைக்க
நச்சி யடிதொழுதா னன்கு. ௧௦௧

ஒளிர்வதுவே சத்தாதிக் குண்மைவடி வத்தான்
ஒளியாதி தீபத்துக் குண்மை - கொளுமுறைபோல்
இன்ன தறிவினிலை யீங்குன் னிலையுமிதே
அன்னதனுல் வேறன்ற தாம். ௧0௨

சத்தாதி யேகவுரு சாற்றுவது வேதாந்தம்
சத்தாதி மாருஞ் சமயநிலை - பித்தாகி
ஞாயந் துவிதமதா னல்லா யதுசாரேல்
தூயநிலை யீங்கிதுவோ சொல். ௧0௩

சுருதியுத்தி யொத்துச் சுவானுபவங் கண்டாய்
திரிவுமய வின்றித் திகழ்ந்திங் - கிருவென்று
சொல்லித் திருவடியைச் சூட்டி யனுபவத்தை
நல்லா யுரையென்று னன்கு. ௧0௪

அன்று னெடுநேர மாங்கே சமாதியிருந்
தன்னநிலை யாய்விழித்திங் காசான்முன் - அன்னையே
அப்பனே யானு வமுதேயென் றேவணங்கிச்
செப்பலுற்று னன்ன தெரிந்து. ௧0௫

## சிந்தனுவிளக்கம்.

எத்தனையோ சிந்தையில்வந் தேகுவதாற் சொந்தமல
எத்தனைக்கு வாடுவதிங் கீதறிவன் - றத்தனைக்குஞ்
சிந்தையிட மாவதன்றிச் சிந்தை யவையல்ல
சிந்தைசுயஞ் சோதியென்றுன் றேர்ந்து. ௧0௬

## ஜீவனிலை.

தானுபா சத்தறிவாய்த் தானோர் முதலன்றாய்க்
கோனுய் மனுதிக்குக் குற்றமதாய் - நானுதல்
அல்லவற்றிற் கென்றறிந்தே னையனே ஜீவனிலை
சொல்லனே னின்னருளிற் புக்கு. க0எ

யானெனதென் றன்னியமா யாவுமது வாய்த்தோன்றத்
தானகத்தாற் கற்பித்துச் சத்தியமாய்த் - தானெண்ணி
நிற்குநிலை சாக்கிரமா நித்தியனே யென்றுணர்ந்தேன்
சற்குருவே நின்னருளாற் றான். க0அ

இவ்வழுத்தந் தானேநின் றிந்நினைவு சோர்வதனில்
இவ்வுலகா யானெனதா யெவ்விடத்துஞ் - செவ்விதாய்த்
தோன்றி யுழல்வதுவாய்த் தோன்றல் கனவென்று
சான்றுநான் கண்டேன் றனித்து. க0கூ

இவ்வழுத்த முஞ்சோர்வி லொன்றுமின்றிப் பாழாக
எவ்வுயிர்க்குங் காண்பதினு லெங்கெங்கும் - இவ்வகையைக்
கண்டேன் சுழுத்தியதாக் கண்மணியே நின்னருளால்
தொண்டனே னின்னுருவிற் றோய்ந்து. ககO

இப்பா ழறியுமறி வீங்ககலா நின்றுவிழித்
தப்பாழ் நிலையுரைக்கு மாங்கறிந்து - தப்பா
தறிவிருக்கை யுண்மை யதுவே துரியக்
குறியறிந்தே னின்னருளைக் கொண்டு. கக்க

ஈசனிலை.

அனைத்துலகுந் தானா யனைத்துயிருந் தானாய்
அனைத்தும் படைத்தழிப்ப தாகி - இனைத்தன்றாய்
நிற்குநிலை யீசனென நின்விழியா லின்றுணர்ந்தேன்
அற்புதமென் சொல்வே னறிந்து. சகஉ

அவ்வறிவே தாக்கற் றகண்டபரி பூரணமாய்
எவ்வண்ட முந்தானா யீங்கன்றாய் - எவ்வகையும்
நிற்குநிலை யென்றுணர்ந்தே னீங்காச் சிவனனவாய்
கற்பனைவிட் டங்கதனைக் கண்டு. சகங

இன்னநினை வின்றடிப்பே யிந்நினைவு சோர்வதனில்
இன்னவித மாய்க்காண்ட லீதுகன - விந்நிலையும்
சோருமிடம் பாழே சுழுத்தியதென் றேயுணர்ந்தேன்
ஆரியனே நின்னருளா லங்கு. சகச

இப்பா ழறியுமறி வீதே சிவதுரியம்
எப்பா லுயிரவத்தை யெம்மூன்றும் - இப்பரனுக்
கோரொன்றே யென்றுணர்ந்தே னுன்னருணோக் கத்தாலே
சாருமோ வையமிதி றான். சகரு

பரநிலை.

இவ்வீ ரறிவாக வீங்கொளிர்வ தெந்தவறி
வவ்வோ ரறிவேதா னுகுபரம் - எவ்வெவ்
வுபாதி கடந்தாரு மோர்தலரி தாகும்
உபாதிமய மல்லதா லுற்று. சகசா

இவ்வி ருபாதி யிழந்தறிவ தாயொளிர
எவ்வசத்து மாகா திஞிதிருந்து - எவ்வடிவுஞ்
சின்மாத் திரமாகச் செய்தல் பரமனவென்
றுன்கருணை யாற்கண்டே னுற்று. ககஎ

சுயஞ்சோதி யாநினைவுஞ் சோருமிடத் தங்஗ன்
வியந்தொளிர்வ தேயன்றி வேறாய் - நயந்ததுவாய்
நில்லாமை யேகனவாம் நின்னருளா லென்றுணர்ந்து
சொல்லாமற் சொன்னேன் றுணிந்து. ககஅ

இவ்வாசனையுந்தா னீங்கே நழுவுமிடத்
தவ்வறிவே யாநந்த மாய்மிக்கு - எவ்வசத்து
மன்றி மவுனமதா யாதனன விற்சுழுத்தி
இன்றே நிலைபோ லிது. ககக

அம்மவுன மேலிட் டதுவிதுவா யீததுவாய்ச்
சும்மா விருத்த றுரியநிலை - யெம்மானே
என்றுணர்ந்தே னின்னருளா லெப்பிறவிக் கும்மஞ்சேன்
உன்பணிக்கே யாளா யுறில். க௨0

எக்குணமுந் தானுகி யீங்கல்ல வாய்த்தானே
மிக்கெங்குந் தானாய் விழுமியதாய்ச் - சிக்கிலா
நிற்றுரி யாதீத நித்தநிலை யென்றுணர்ந்தேன்
உற்றுணரார்க் கிதே துறும். க௨க

அயிக்கமதிங் கேலா தகத்தாற்றா டிப்பார்
மயக்கந் தவிர்க்கறியா வல்லோர் - மயக்கமதோ

ஓர்போ தறிவாகி யோர்போதிங் கின்பமதாய்ச்
சார்வதெவன் சந்ததமுந் தான். க௨௨

அறிவே யுறக்கத்தி லாநந்த மீதே
யறிவாம் விழிப்பிலிதை யாயார் - வெறியதறல்
ஆநந்த மேயறிவா மவ்வறிவே யாநந்தம்
ஈனந்தா னெங்கே யிதில் க௨௩

ஆநந்த மேநினைவா யாநித் திரைத்தெளிவில்
ஆநந்த மன்றிமிலை யாயுங்கால் - ஆநந்த
மாத னினைவேயா மாகா ரிலையிவ்வா
றாதலினுற் றள்வோ மவர் க௨௪

நான்றானீ தானென்றும் நண்ணுமவன் றனென்றும்
மூன்றிடத்துந் தானென்றான் மூவாது - தான்றனியே
நில்லா மொழியிலைபோ னில்லா வெவையுமிலை
எல்லாந்தா னாகு மியைந்து. க௨௫

தானே யறிவாகுந் தானே சுகமாகும்
தானன்றி யிவ்விரண்டுந் தானிலையால் - தானறிவா
நந்தமென்றார் மூதுணர்ந்தோர் நண்ணுமுடி வாமொழியென்
றெந்தை யடிதொழுதா னிங்கு. க௨௬

எல்லாமா யன்றா யிருக்குநின் னுண்மைநிலை
பொல்லனேன் கண்டு புகல்வதெவன் - இல்லார்க்கு
மாநிதியம் போற்கிடைத்தை வந்தடியேற் கென்றேத்தி
மோநமா நின்றான் முடிந்து. க௨௭

இவ்வாறு தானங் கிருந்து நெடுநேரம்
ஒவ்வா வனுபூதி யோடுவிழித் - தெவ்வாறும்
ஐயமிலா தின்னு மடியேற் குரைப்பதுண்டு
மெய்யனே யென்றான் விழுந்து. ௧௨௮

உலகமாத் தோற்றுதிங் குண்மை வடிவா
யிலகுமுறை யெங்ஙனெனி னென்றும் - பலபலவாக்
காணும்போ தெல்லாங் கலங்கா தறிவுருவாக்
காணிலுல கெங்கேநீ காண். ௧௨௯

திரிபுடி பேதத்தைச் சேதிப்ப தெங்ஙன்
திரிபுடியின் ஞானமொன்றைச் சிந்தித் - திருக்கவே
யேனை யிரண்டு மெழின்ஞான மாய்விளக்கும்
ஏனைய முண்டா மினி. ௧௩0

மூன்றாக முத்தி மொழிவர்சிலர் யாதுக்கேல்
மூன்றாக வல்ல முடிவிலதா - நான்றானே
யேற்பனறி வன்றியனு வீங்குளதாக் காட்டுவரேல்
ஏற்பரோ மூடருந்தா னிங்கு. ௧௩௧

பொன்னாற் பலபணியும் புந்தியாற் காண்பவர்போல்
நின்னுருவா யெவ்வெவையு நீகாண்டி - இன்னபடி
வாழ்த்திகுரு செல்ல வணங்கித்தன் னுண்மைதனில்
ஆழ்த்தித்தா ஞானவன். ௧௩௨

---

நாஸ்திகமதக் கற்பிதக்கழற்றி முற்றிற்று.

படலம் ௧௧ - க்கு ஆக கவி ௭0௬

திருச்சிற்றம்பலம்.

# ஆஸ்திகநாஸ்திகர்கட்குணர்வுறுத்தல்.

கிளைவழி போகிற் கிடைக்குமுள் கள்ளர்
களைந்து பெருவழி காணில் - உளைவுறுமோ
இல்லையுண் டென்னன்மி னெல்லா மவசரமே
அல்லவிது வஸ்துநிலை யாம். க

இல்லையெனிற் பாழா மிருக்குதெனிற் றோற்றமதாம்
இல்லையுண் டென்னன்மி னீதுணர்ந்தும் - நில்லறியீர்
ஆய்ந்து நடுநிலையி லாஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
சாய்ந்திவற்றிற் போகாது தான். ௨

இல்லையென்று கண்டதெவ னென்னகண்டீ ருண்டென்று
இல்லையெனப் போய்விடுமோ வெத்துயரும் - வல்லமைக்கு
ஆய்ந்துணரா தென்னகற்றீ ராஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
வீந்துநீர் போவதே மேல். ௩

இருவர் வழக்கதனி லில்லையுப்பு சப்பு
ஒருவா மயக்கே யுடையீர் - பெருவாயால்
நாட்டுவதா லென்னபய னாஸ்திகமு மாஸ்திகமும்
ஓட்டுமோ நும்மயலை யோர்ந்து. ௪

இல்லதல வுள்ளதல் வென்பவர்சொல் கேளாதென்
வல்லரோ தீர்ந்தாரின் வஸ்துநிலை - அல்லவற்றை
நானெனலைப் போக்கறியீர் நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
ஏனுமக்கு வீண்வாத மிங்கு. ரு

இல்லதெங்கே யுள்ளதெங்கே யேதுநீர் கண்டறியீர்
இல்லையென்பீர் சொல்லாலே யெத்துயரும் - தொல்லைமயல்
அற்றதெனக் கேதுகுறி யாஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
இற்றைநா ளென்றறியீ ரிங்கு சா

ஒருபோது தூலமொருபோது சாயை
ஒருபோது பாழா யுலகந் - திரிவதெவன்
நாடறியீ ரீதுண்மை நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
ஏடகற்றிச் சொன்மிதை யிங்கு. எ

இவ்வாறிங் காகுங்கா லெவ்வா றிருந்தறிவம்
அவ்வாறிங் காகுநா மாரறியீர் - எவ்வாறு
நாட்டுவீர் நும்மதத்தை நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
நாட்டுமினோ யென்னெதிரி னன்கு. அ

விரிவொடுக்க மின்றி விளங்குஞ் சகத்து
விரிவொடுக்க மேற்பானேன் மெய்யாத் - தெரிகிலிரோ
நாடோறுங் கண்டிருக்க நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
நாடாதென் னிம்மயக்கை நன்கு கூ

ஏதற்கு வெளிப்படுத லிம்மூன்று காட்சி
அதற்குரிய வுண்மைநிலை யாயீர் - எதற்குமே

ஆகீர் விடைகொடுத்தற் காஸ்திகர்கா ஞஸ்திகர்காள்
ஏகாதென் சான்றோ ரிடை. க0

அறிவதொன்று தோற்றுவதொன் றாகு மிரண்டே
பிறிதிருக்கக் கண்டிலம்யாம் பின்னும் - பிறழ்வுதான்
நண்ணலெதற் கென்றறியீர் நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
எண்ணுவதென் வல்லவரென் றிங்கு. கக

தோற்றமதை யுண்மையெனச் சொல்லவலீர் சொல்லறியீர்
தோற்றமதற் காதாரஞ் சுத்தமா - ஏற்றிடுது
மல்லநுஞ் சித்தாந்த மாஸ்திகர்கா ஞஸ்திகர்காள்
நில்லுமி னுண்மைதனி னேர். கஉ

அறிவதற்கு மாறலெனி லங்கங்கே நின்று
அறிவதெது நூலாதி யவ்வா - றறிவதற்கன்
றானலென் வாதிப்பீ ராஸ்திகர்கா ஞஸ்திகர்காள்
ஏனனீர் வல்லவரென் றிங்கு. கஙு

உபாதித் திரியமதா வுற்ற வறிவு
உபாதித் திரியமல வோரில் - உபாதிகடர்
தாயநீர் வல்லரலீ ராஸ்திகர்கா ஞஸ்திகர்காள்
வாயுமக்கேன் பேச வலிந்து. கச

அறியும் பொருளெல்லா மன்றிங் கறிவேல்
உறுதியதற் குண்மையுரு வோரீர் - வெறியர்போல்
நாட்டுதற்கோ நும்புலமை நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
கேட்டுய்ம்மி னல்லோர்பால் கிட்டி. கரு

அறிவினிலே யாழத்தை யாய வறியீர்
அறிவணுவாக் கொண்டளப்பீ ரானல் - வெறியரென
லாகாதோ நுந்திறத்தா லாஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
ஏகாதோ நும்வாத மிங்கு. கசா

தூலாதி மூன்றாகத் தோற்றுமுத லேதெனிலோ
தூலமென்பீ ரோரவஸ்தாத் தோற்றமன்றோ - தூலமதை
ஆயி லணுவன்றி யறியோ மகத்துருவம்
ஞாயமிலை உண்மையென னன்கு. கஎ

நனவெங்கெங் கேயுண்டோ நாடு முலகம்
நனவிலெங்கெங் கேயிலேயோ நாடா - நனவளவே
யன்றியெங்குங் காணதென் னாஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
என்றடங்கு நுங்கர்வ மிங்கு. கஅ

தூலமு மற்றவைபோற் றோன்றி மறைவதினாற்
றூலமுத லென்றேலோஞ் சோதனையில் - தூலமுதல்
மூன்றாகத் தோற்றலெது முற்றுமுணர்ந் தார்க்கரிது
ஊன்றிநின் றோதற் குறில். கசு

அந்தமுத விம்மூன்று மல்லவிவை மாறுவதால்
அந்தமுத லேதோவென் றயாதென் - எந்தமட்டும்
ஆகுநுஞ் சித்தாந்த மாஸ்திகர்கா ணாஸ்திகர்காள்
ஏகுமின் சான்றோ ரிடை. உ0

அறிவுசக மிவ்விரண்டிற் காகு மயக்கை
அறிந்தகற்றற் கேற்றநெறி யாயீர் - திறந்தெரிந்து

நாட்டுவிரா நும்மதத்தை நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
ஓட்டுவோ மெங்கு முமை. உக

நம்பிறழ்வோ வன்றியிங்கு நாடுஞ் சகம்பிறழ்வோ
வம்பகலா தீதுணரு மட்டுமலோ - நம்பன்மின்
ஆயாது நும்மதத்தை யாஸ்திகர்கா ளுஸ்திகர்காள்
ஓயாது நல்லோர்பா லுற்று. உஉ

எம்மயலுந் தீர்க்கறியீ ரெப்போ தகற்றநிற்பீர்
இம்மை யகலுமெனி லென்செய்வீர் - இம்மைபோல்
ஆகுமோ வெப்பிறப்பு மாஸ்திகர்கா ளுஸ்திகர்காள்
ஏகுமின் சான்றோ ரிடை. உங

நமக்குப் பிறப்பிறப்பு நஞ்செயலோ வன்றே
நமக்கிறையுண் டேலாதென் னட்டுத் - தமக்குரிய
போகத்தைத் தள்ளாதென் பொய்யலவோ நாஸ்திகர்காள்
ஏகத்தை யேதறிவ திங்கு. உச

ஏத்திட்டு மென்னபய னெம்பகவா னுண்டென்று
போற்றுவதென் னல்லவற்றைப் புத்தியெங்கே - கூற்றன்
வருமுன்ன ராஸ்திகர்காள் வந்துணர்ந்து நின்மின்
திரிபின்றி யெங்குஞ் செறிந்து. உரு

தனுவா வகம்புறத்திற் சத்தியமாக் காண்பீர்
தனுவலவே யெவ்வுயிருஞ் சற்றுந் - தனுவன்றித்
தன்னையுங் காணறியீர் சாதிப்பே னுஸ்திகர்காள்
உன்னுதென் னும்மடமை யுற்று. உசா

எதுவுலகாத் தோன்றி யிலதா மறையும்
அதுகாண் வங்கயறியீ ரந்தோ - பதிநிலையைக்
கண்டவர்போற் கோரணியூற் காட்டவலீ ராஸ்திகர்காள்
உண்டோ துளியன் புமக்கு. உஎ

இருந்தபொரு ளெவ்வா றிருந்தபடி நீரும்
இருந்துவிடி லன்றே விலகும் - இருந்தயலாக்
காணிலுல காக்காணுங் கண்டிலிரோ நாஸ்திகர்காள்
காணுமதன் னிஞ்ஞாயங் காண். உஅ

விழிப்பிற் சகத்தும் விழிப்பொழிவிற் பாழும்
அழிந்தொன்றுங் கண்டறியீ ரந்தோ - எழுத்தகத்தாற்
கண்டபடி சொல்லிற் களைந்திடுவ மாஸ்திகர்காள்
எண்டிசையுந் தங்கா திவை. உகூ

உடலுயிரொன் றாய்மீண் டுறுவானேன் வேறாய்
உடலன்றே போக முவத்தல் - உடனுக்
கொள்வதெதை யிவ்வுடல்பின் கொண்டதனு லன்றியற்கை
கொள்வதென்று நித்ததிர்த்தி கூறு. ௩0

இன்னமு நாஸ்திகர்கா ளேனயலை நானென்னல்
அன்னதறி வன்றியுடற் காகுமோ - இன்னமயல்
வந்ததெதி னுலே வருவானே னிர்நிமித்தம்
வந்ததெவன் மூன்றவத்தை மால். ௩க

காமாதி துர்க்குணமுங் காசகற்று நற்குணமும்
ஆமாறிங் கெத்தர் லவாவேதனுல் - பேமாறிங்

கேதா லியற்கையென்றே யென்சொலினு ஞாயமன்றே
ஏதாகு நும்புலமை யிங்கு. ௩உ

ஆதாரம் பாவனைகட் காய்கிலிரேல் யாதுபயன்
ஆதாரங் காணவன்றோ வாக்கினூர் - ஆதாரந்
தேடிப் பிழைமினெனிற் றிட்டுவதென் னாஸ்திகர்காள்
நாடிப்பா ராதென் னலம். ௩௩

அல்லவற்றை நானென்று மாகுஞ் சுகமென்றும்
மெல்லநீர் கொண்டமயல் விட்டகல - ஒல்லுநெறி
நாடுமி னேன்கெடுவீர் நாஸ்திகர்கா ளாஸ்திகர்காள்
ஓடி மசானடிக்க ணுற்று. ௩௪

---

ஆஸ்திக நாஸ்திகர்கட் குணர்வுறுத்தல் முற்றிற்று.

படலம் கஉ - க்கு ஆ கவி எ௩அ.



திருச்சிற்றம்பலம்.

# போலிஞானக்கழற்றி.

உண்மையென்றும் போலியென்று மோதுமிரு ஞானத்துள்
உண்மையெனப் போலியினை யோர்ந்திங்கே-திண்மையதாப்
போதிக்குஞ் ஞானிகட்குப் போதமிஃ தென்றுணர்த்த
வாதிப்ப மென்றூர் மகிழ்ந்து க

சித்துசடத் தின்சகிதஞ் சித்துசடத் தின்ரதிதம்
ஒத்தவே கத்துவந்தா னேரிரண்டாம் - இத்துவிதத்
தொன்றுபந்த மொன்றறுதி யோராத ஞானிகளே
இன்றுவந்து கேண்மினிதை யிங்கு. உ

அறிவன்வெல் லாம்பொய் யறிவேமெய் யென்றால்
செறிநரக மேயென்று செப்பும் - வெறிகொண்ட
ஞானிகளே கேண்மினிதை ஞானமிஃ தென்றறியீர்
ஆனநர கம்முமக்கே யாம். ௩

வேதாந்த சித்தாந்த மெய்ந்நிலைமை காணாது
வேதாந்தஞ் சித்தாந்தம் வேறன்று - நாதாந்தத்
தென்றுளறு ஞானிகளே யென்றாய் நீர்விளங்கல்
இன்றே மதியென் னிது. ௪

ஞானியென யாவருமே நன்குமதிக் கப்பெற்று
ஞானங் கனவிலுந்தா னண்ணுத - ஞானிகளே
சித்துசட மொன்ருக்கத் தேராமை யோஞானம்
பித்தனுந்தான் சொல்லான் பிறழ்ந்து. ரு

வழக்குமயம் வேதாந்த வஸ்துநிலை யன்ருே
விழிச்சொருகிக் காட்டுவீர் மெய்போல் - வழக்கறுக்கீர்
பக்குவம்வந் தாற்றெரியும் பாரென்பீர் ஞானிகளே
இக்கதைக்கிங் கிந்நடிப்பா லென். சா

உபாதான மோடிங் குபாதேயம் வேறன்
றுபாதானஞ் சிற்சடமா யொன்றும் - அபாவமதா
வாக்கற் கெவையு மறியாத ஞானிகளே
தாக்கறுவ தெங்ஙன் சகம். எ

விருப்புவெறுப் புக்கிடந்தான் மேவுலகென் றெண்ணி
யருவருப்புக் கொள்வதெவ னந்தோ - தெரிகிலிரோ
நாமே யிடமாவோம் ஞானிகளே கேட்டறியீர்
நாமாரென் ருேர்ந்தக்கா னன்கு. அ

என்னவொரு ஞானி யெழுந்தருகே வந்தையா
இன்னநிலை யென்றறியீ ரிவ்வுலகை - இன்னின்ன
தின்னகுண மின்னகுண மென்றிருப்பா லெப்பெருளும்
அன்னவற்ருற் றுன்பவின்ப மாம். கூ

எங்கே யுலகன்றி யெங்கே தெரிவன்றி
எங்கே சகத்தன்றி யித்தெரிவும் - எஙகே

தெரிவன்றி யிவ்வுலகுந் தீதுசுக மெங்கே
தெரிவுக் குலகன்றிச் செப்பு. கo

ஆகார மன்றி யகிலசுக துக்கமெங்கே
ஆகார மேதுலகை யன்றியே - ஆகாரம்
ஆத லறிவன்றோ வாமோ வுலகின்றேல்
ஓதறிவிங் கன்றி யுலகு. கக

காணப் படுமிதுவேற் காண்பதனைத் தள்ளியெங்கே
காணப் படுமிக்கல் கண்ணுமோ - காணத்
தகுங்கண் சுயம்பதனைக் கண்டிதுகல் லென்றால்
தகுங்கண் ணதற்கனியந் தான். கஉ

அப்படியார் சொல்வரெனி லப்படியல் லாதக்கால்
இப்படியா ரேற்பரிதை யீதறிவோ - எப்படி தான்
சொன்னாலு நீமறுப்பை சும்மா விருப்பனெனில்
என்னு முனக்கிதனு லிங்கு. கங

சும்மா விருத்தல் சுகஞ்சுகமென் றூரென்னில்
சும்மா வெதுவிருத்தல் சொல்லென்ன - சும்மா
மொழியா திருத்தலெனின் மோகாதி போமோ
பழிமனந்தா னென்னிலது பார். கச

கிரியாயோ கத்தாலே கிட்டினு மீளும்
ஒருவாஞா னத்தா லுதவுந் - திரிபின்றிச்
சும்மா விருக்குநிலை சும்மா கிடைக்குமோ
அம்மா வரிதரிதிங் காம். கரு

எட்டில் வழக்கறுத்தா ரிங்குமிலை யெங்குமிலை
நாட்டத்திற் கண்டன்றி ஞானிகளே - எட்டறிவால்
அற்பமு மித்தையிதென் றுக்க வறைகுவீரிர்
சிற்சொருப மாக்குவிரோ தேர்ந்து. கசு

பரமான்மா மாயை பதைமனமிந் நான்கும்
சுருதிமுதற் காரணமாச் சொல்லும் - விரியுலகுக்
கிதென்னை நான்காக வீங்கிசைத்தல் ஞானிகளே
ஓதுமினே யென்ன வுவந்து. கஎ

விழிப்புறக்கந் தன்னில் விரிந்தொடுங்கல் யாதோ
எழுத்தில் படித்ததைவிட் டிங்கே - விழித்துள்ளே
கண்டைய மின்றியதைக் காட்டறியா ஞானிகளே
உண்டுகொல் ஞான முமக்கு. கஅ

எல்லாமா யல்லவுமா யிங்கிருப்பீர் நாடோறும்
எல்லாமன் றல்லவுமன் றீங்கறியீர் - நல்லார்போல்
ஞானநிலை பேசுவீர் ஞானமிஃ தென்றறியீர்
ஞானிகளே யீதோ நலம். கசூ

பசுபதிவே றென்றும் பசுபதியொன் றென்றும்
இசையவே யாவர்க்கு மிங்கே - வசையின்றி
நாட்டுவதென் வேதாந்தம் ஞானிகளே கேட்டறியீர்
எட்டறிவை விட்டுணர்மி னிங்கு. உ0

எப்பொருளு நாட்டறியீ ரிதென்றுங் காட்டறியீர்
தப்பையே ஞானமெனச் சாதிப்பீர் - எப்பழிப்பும்

போக்காது ஞானிகளே போதமறி யாரேற்பர்
எக்கமிலை வாழ்த்துவதா லிங்கு. உக

சித்தஞ் சிவமாகச் சிந்திப்ப மென்றுரைப்பீர்
சித்தஞ் செருவடிவாச் சிந்திப்பீர் - மித்தையதா
வாக்கவறி யாத்திறு லையையோ ஞானிகளே
நீக்குவதென் றேபழியை நின்று. உஉ

இலக்கணங்கற் ருர்முன் னிலக்கியவல் லார்கள்
அலக்கணுறு வார்போலிங் காவீர் - கலக்கமின்றித்
தன்னிற் றெளிந்தார்முன் றற்றேரா ஞானிகளே
உன்னுவதென் றுங்குருவென் றுள். உங

விழிப்பிற் சகமும் விழிப்பொழிவிற் பாழும்
பழக்கமதாய்த் தம்மினிதம் பார்த்தும் - பழிப்பதெவன்
மித்தை யுலகமெனல் மெய்ஞ்ஞானி காள்போக்கீர்
புத்திமயக் கந்தன்னைப் புக்கு. உச

நினைவுள் ளளவு நிகழு முலகம்
நினைவன்றி யெங்கே நிகழும் - இனையதனுற்
சங்கற்ப மென்றுற் றடுப்பதெவன் ஞானிகளே
இங்கற்பந் தானு மிலை. உரு

எதிரின்றி யில்லா விதுஞானந் தானே
பதியாதி யுண்மையதாப் பார்த்தல் - கதியற்ற
ஞானிகளே சித்தாக நாடவறி யீரெவையும்
ஏனகலு மைய மிதில். உசா

சிற்றறிவு சீவன் சிவன்பே ரறிவென்பீர்
சற்று மயக்கமிலை தானென்பீர் - கற்றுணர்ந்த
ஞானிகளே பேதந்தா னண்ணு முடிந்தியதால்
ஏனணுகுஞ் சுத்தத்துக் கிங்கு. உஎ

அற்ப மகத்ததனு லாமோ மடுக்கடலா
அற்பமகத் தில்லைநீர்க் காயுங்கால் - கற்பிதமே
சித்திரண்டு மொன்றேயாஞ் சீர்தூக்கின் ஞானிகளே
அத்துவிதத் தோடமென்ன வாம். உஅ

நாமுலக மாவமெனி னுமே பரமாவோம்
நாமின்ன தென்றுண்மை நாட்டுதியேல் - ஆமலவெ
றப்பா லறைதுமென வையா வறிவென்னில்
எப்பாலுஞ் சாயா திரு. உகூ

இருந்தறியக் காணுமே யேதொன்று மென்னில்
தெரிந்திடுமுன் ஞானியெனல் சீரோ - தெரிந்தெவரும்
பூசிக்கக் கற்ற புதுமைவே தாந்தியே
காசிக்கு மர்காய்நீ காண். ௩௦

இப்படிநீர் செய்யி னெவர்க்கு மலட்சியமாம்
ஒப்பிலா ஞானிகளு மோராதென் - தப்புமதே
வெட்கத்தா லென்னென்று மெய்வளர்க்கு ஞானிகளே
கட்கமிது வாகுங் கடை ௩௧

புலிபசுத்தோல் போர்த்தற்றுப் பொய்ப்பகட்டை டக்காணில்
நலியாதென் னுங்நெஞ்ச நாடீர் - அலிபோன்ற

ஞானிகளோ கேட்டறியீர் நல்லரச ஞானத்தைப்
போனகத்துக் கேவல்லீர் புக்கு. ௩௨

சிற்றறிவும் பேரறிவுஞ் சிந்தித்தொன் றாக்கறியீர்
சிற்றின்பம் பேரின்பஞ் சிந்தித்திங் - கற்றுபயம்
ஆக்கிநிற்க வெங்ங னறிவீர்மெய்ஞ் ஞானிகளே
போக்குவீரோ மாயை புறம். ௩௩

மாயைபொய் யென்பீர் மகத்துலகுக் காதியென்பீர்
மாயையீ தென்றுணர்த்த வல்லீரோ - பேயர்போல்
போதிக்கு ஞானிகளே புத்திமயக் கேமாயை
ஈதென்று ஞானியென லிங்கு. ௩௪

ஆன்மசுகஞ் சொற்சுகமென் றாகுமிரண் டாநந்தம்
ஆன்மசுகங் கேட்டறியா தையையோ - ஆன்மசுகம்
என்றுணருஞ் சொற்சுகத்தை யேமாந்த ஞானிகளே
என்றடைவீ ருண்மைதனை யிங்கு. ௩௫

எட்டுச் சுகம்போல வீங்கறியீ ரான்மசுகம்
நாட்டங் கபோதியொப்பீர் ஞானிகளே - வாட்டமெவன்
உண்டிச் சுவையா லுபசாரத் தான்மதிப்பால்
விண்டிருப்ப தென்றோ விரைந்து. ௩௬

ஞானம் விடையமெனு நாட்டமிரண் டாமிவற்றுள்
ஞானங் கனவிலுமே நாடறியீர் - ஞானநூல்
போதிப்பால் ஞானிகளே புத்தே ளுலகொப்பீர்
ஏதுக்கு தன்னாட்ட மிங்கு. ௩௭

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகென் - றிகலிகந்த
வள்ளுவனார் சொன்ன வகைதெரிந்தும் ஞானிகளே
எள்ளுவதென் யான்சொல்லி னிங்கு. ௩௮

அறிவேயா தார மறிவே யனைத்தும்
அறிவன்றிக் காட்டிலுண்மை யாகும் - பிறிதில்லை
என்றேட்டா லன்றியணு வீங்குணர்த்தீர் சோதனையால்
இன்றிதுவோ ஞானியென விங்கு. ௩௯

சொல்லாநந் தத்தாற் சொருகிவிழி நீர்சோர
நல்லார்போற் காட்டி நடித்திடுவீர் - பொல்லா
மயல்போக்கா ஞானிகளே மாயமென் சொல்வன்
அயல்வியக்குங் கோலமிது வாம். ௪0

எப்போது மித்தையென விப்போது மித்தையன்றோ
இப்போதிங் காக்கறியீ ரீதறிவோ - இப்போதம்
ஆர்சொன்னா ஞானிகளே யாரைக் கெடுக்கவிது
பேர்பெரியீ ரென்ன பிழை. ௪௧

திரிபுடிபே தத்துட் டெரியவொவ் வொன்றின்
றிரிபின்றி யுண்மைநிலை செப்பீர் - பெரிதுநூல்
கற்றுணர்ந்த ஞானிகளே கண்டார் வியக்களப்பீர்
பற்றையகன் றுய்யீர் பதைத்து. ௪௨

காண்பவற் றொன்றுமயல் கட்டறுத்து நாமாக்கீர்
மாண்புடையோர் நூன்மொழிகள் மாட்டியே-காண்பவர்க்கு

நாதனம்போற் பாடுவீர் நோக்கறியா ஞானிகளே
பாதகத்தைத் தீரீர் பதைத்து. ௪௩

உலகமயல் போலெங்கு மொன்றுமிலை நீரோ
வுலகமயல் விர்த்திக்க வோதிப் - பலபலவாக்
காட்டுவீர் பூச்சி கதியேது ஞானிகளே
நாட்டம் பெறுவதென்றோ நன்கு ௪௪

அகந்தொலையக் கற்பா ரறிவுடையோர் நீவிர்
அகங்வளரக் கற்றீர்க ளந்தோ - மிகத்தமையே
தெய்வம்போ லெண்ணிச் செருக்குவதென் ஞானிகளே
[illegible]வன் விட்டிடுங் குவந்து. ௪௫

எல்லாமா யல்லவுமா யிங்கிருத்தல் வத்துவென
நல்லாரைப் போன்மொழிவீர் நாடறியீர் - சொல்லாலே
காட்டி யபிநயிக்குங் கண்கெட்ட ஞானிகளே
ஏட்டையன்றி யாதறிவீ ரிங்கு. ௪௬

ஏட்டிற் படித்ததன்றி யிவ்வுலகுந் தன்னையுமே
நாட்டத்திற் கற்றறியீர் ஞானிகளே - வாட்டந்
தவிர்வதெவ னிவ்விரண்டுஞ் சந்ததமுந் தோற்றிற்
பவமகல்வ தெங்ஙன் பதைத்து. ௪௭

ஞானங் குழகுழென்று நன்குணர்ந்த ஞானிகளே
ஞானமல வற்றையெலா ஞானமென்பீர் - ஞானியெனச்
சொல்வந்தாற் போதுமென்றோ சொத்தேட்டிலே படித்தீர்
நல்வழிபோற் காட்டி நயந்து. ௪௮

தன்னை யறிவாகத் தான்கண்டு நிற்பளவும்
தன்னை யயலாகத் தான்காண்பார் - இன்னதற்கு
மாறாகு ஞானிகளே வஸ்துநிலை சொன்னாலும்
தேறீ ரொருபோதுஞ் சென்று. ௪௯

ஒருணர்வே யையுணர்வா மோரும் பிரிவதனால்
ஒருணர்விற் றேகாதி யொன்றுமே - நீரறியா
தித்தனுவிற் காண்பதெவ னிங்கிலையால் ஞானிகளே
மெத்தவகங் கொண்டிருப்பீர் மேல். ௫௦

இவ்வுடல்முன் னிவ்வுடல்பின் னிவ்வுடலைக் கண்டறியோம்
இவ்வுடலை நானென்ன லென்னமதி - இவ்வுடலாய்
நின்றுதமை ஞானியென்பீர் நீக்கிசுயம் பாவதென்றோ
என்றுணர்வீர் நுங்குற்ற மிங்கு. ௫௧

ஆகார மன்றி யனைத்துமிலை யோரிலெங்கும்
ஆகார மில்லை யறிவன்றி - ஆகார
மாமறிவு மில்லை யறிவாகா ரங்கடக்கில்
தாமதமென் னெங்கே சகம் ௫௨

ஆறுதா ரத்தி னனுபவங்கண் டேகளிப்பீர்
ஆறுதா ரத்தான மாமுடலே - வேறாகும்
பூதாதி யாவும் புறம்புகா தெங்ஙனுய்வீர்
ஏதாகு நுஞ்ஞான மிங்கு. ௫௩

அகம்பாவ நீக்க மறிவுதயத் தன்றி
அகநிச் சயத்தா லறுமோ - மிகப்படித்த

ஞானிகளே யெந்தமட்டி ஞானந் தெரிவித்தான்
எனகனு மஞ்ஞான மிங்கு. ருச

தன்முயல்வால் வந்தபந்தந் தன்முயல்வாற் றீர்வதன்றிப்
புன்மதியா லீசன்மேற் போட்டுவிட்டுத் - தன்செயலை
யுன்டியுறக் கத்தி னுடல்வளர்ப்பின் மேல்வைத்தீர்
உண்டுகொலோ வீடிங் குமக்கு ருரு

உடனுனென் றுன்ன வுணர்வுநா னென்று
திடஞானக் காட்சியதாற் றீரும் - மடமையர்
லேலா தவமதிப்பீ ரிந்நிலையை ஞானிகளே
மீ[illegible]ழல்வீர் மடிந்து. ருசா

தெரிவுசக மோரிரண்டாச் சேடிக்கு மெங்கும்
தெரிவுதனைக் கண்டாலென் சேதம் - விரியுலகைக்
கண்டதுபோன் ஞானிகளே கண்டாரைப் போனடிப்பீர்
கண்டவர்பாற் சேர்மின் கரைந்து. ருஎ

உள்ள தறிவே யொழிந்தவெலாம் பொய்யென்பீர்
தெள்ளறிவா லோரணுவுஞ் சித்தாக்கீர் - கள்ளமய
ஞானிகளே யத்துவித நாட்டவுமக் கேதுவலி
மான தம்போக் கெங்ஙன் மடிந்து. ருஅ

தன்னை யறிவாகத் தான்கண் டிருக்கினன்றோ
தன்னிறையி னுண்மைநிலை தான்விளங்கும் - தன்னை
அறிவாக நிச்சயிப்பீ ராணவப்போக் கெங்ஙன்
வெறிகொண்ட ஞானிகளே மேல். ருகூ

பண்டிதரும் பாமரரும் பார்மேற் றிரிசியத்தைக்
கண்டிருப்பார்போ னீருங் கண்டிருப்பீர் - அண்டமெலாம்
ஞானியரஞ் ஞானியரு நாட்டமதிற் பேதமிலை
ஞானியென லென்னமதி நன்கு. ௬௰

இறந்தனவு மிப்போ திருப்பனவு மேலே
பிறப்பனவும் போகமே பேணும் - இறப்பிலா
இப்போகம் போக்கற் கிடங்காணீர் ஞானிகளே
எப்போது போக்குவீரோ விங்கு. ௬௧

அனைத்துலகு நாமு மறிவேயென் றோதும்
நினைத்திருக்கி லெம்மயலு நீங்கீர் - தினைத்துணையுங்
காணளவு ஞானிகளே கண்டார்பாற் கேட்டும்மின்
நாணமதை விட்டடைந்து நன்கு. ௬௨

என்ன வொருஞானி யெழுந்தெதிரி னின்றையா
தன்னந் தனியே தனைக்காண்டல் - என்னமதி
கண்டாற் றிரிபுடியாங் கண்டபடி வைவதெவன்
பண்டிதத்துக் கிதழகோ பார். ௬௩

என்றுரைக்கி லப்பா விதுபடமென் றுள்ளபடி
நன்றாத் திரிபுடிநீ நாட்டுகென - அன்றே
படமென்று காட்டவிப் பார்வையோ ஞானந்
திடமாக யான்காணச் செப்பு. ௬௪

என்ன வவனு மிசைத்தவெலா மல்லவென
என்னசெய் வேனென் றிசைத்தளவில் - அன்னபோ

தப்பா நினைப்புமறப் பற்றுநில் லென்னவவன்
தப்பாது நின்றுந் தனித்து. சரு

ஐயா விதுசெய்ய வாராது மாகாது
யெய்யா வெனத்தொழுது வேண்டவே - பைய
இருந்துநீ சொல்லென்ன வென்சொல்வேன் சோதி
தெரிந்திடுத லெங்குஞ் செறிந்து. சசா

இருந்தபடி நில்லென்ன விப்படியே நிற்கப்
பெரும்போக வின்பம் பிறக்கத் - தெரிந்திறந்து
சும்மா விருக்குஞ் சுயநிலையைக் கண்டெழுந்திங்
கெம்மானே யென்றிறைஞ்சி யேத்தி. சஎ

ஐயந் திரிபற் றகண்டபரி பூரணமே
மெய்யதா நின்றொளிர மேவியே - ஐயனே
என்று பலவாக வேத்தி விடைகொண்டு
சென்றுதா னன் சிறந்து. சஅ

---

போலிஞானக்கழற்றி முற்றிற்று.

படலம் கரு - க்கு ஆக கவி அ௦சு



உ

திருச்சிற்றம்பலம்.

# அடாஞானக்கழற்றி.

தன்னைத்தான் கண்டு தனைத்தான் சுகியாது
தன்னினு மிக்கசுகந் தானென்று - அன்னியர்தங்
கைம்பெண்ணை வேட்டுக் களிக்கின்ற ஞானிகளே
அம்புமக்கு வேறில்லை யாம். க

தனக்கனியந் தானாகாத் தான்செய் கடமை
தனித்துநின்று செய்யாது தள்ளி - மனப்போக்கால்
கள்ளாதி யுண்டு களிக்கின்ற ஞானிகளே
தள்ளுமோ யானெனதைக் தான். உ

தானின்ன தென்றறியாத் தன்மயலைப் போக்காது
தானகன்ற வேதாந்தந் தான்படித்து - ஞானகுரு
வென்றுணர்த்தி முண்டைகளை யேமாத்து ஞானிகளே
என்று வழிப்படுவீ ரிங்கு. ந

தன்னினும் போதையிலை தான்கண்டு மூழ்காது
அன்னியகஞ் சாவாதி யாசித்துத் - தன்னறிவை
யப்போதை மேலீட்டி லாழ்த்துகின்ற ஞானிகளே
எப்போது விட்டிருப்பீ ரிங்கு. ச

இல்லெனற்கு மாறு விருப்பதெனக் கொண்டுலகை
நல்லவே தாந்தமெலர் ஞாபகங்கொண் - டல்லலற்றார்
போற்காட்டி மாதர் புணர்ஞானி காளையோ
ஏற்குமோ தெய்வ மிது. ௫

உலகமயல் போதைதனை யொன்றுனும் போக்கற்
கிலததனுற் றுக்கமின்றி யென்றும் - மலினமுறும்
அன்னியபோ தைக்கே யலைந்துழலு ஞானிகளே
என்னுபடி யுய்வீ ரினி. ௬

கூத்தா டிடம்போலுங் குன்று வறிவினிலே
பார்த்துவக்கக் கல்லாது பாவையரைப் - பார்த்துவக்கக்
கற்றுணர்ந்த ஞானிகளே கண்டார் பழிக்கஞ்சீர்
பற்றகல்வ தென்றோ பதைத்து. ௭

அணுமகத்தாக் காணு மறிவினிலே யெங்கும்
நணுகிநிட்டை தன்னிலிதை நாடித் - துணமாகக்
கண்டெல்லா நிற்பீர் களிக்குமது ஞானிகளே
உண்டுகொலோ துக்க முமக்கு. ௮

சங்கற்ப சாலச் சகத்தோற் றரவென்னல்
சங்கையறத் தேர்தலின்றிச் சந்ததமும் - மங்கையரை
வேட்டுழலு ஞானிகளே மேவினர்க்கென் போதிப்பீர்
பாட்டுசொல வல்லீர் பரிந்து. ௯

சிற்சோதி தன்னைச் செகமுதலாக் காண்பதெவன்
சிற்சோதி யென்று தெரிதந்துஞ் - சிற்சோதி

கண்டறியாத் தன்மையினாற் கள்ளுண்டு ஞானிகளே
கண்டபடி செய்வீர்கள் கற்று. க0

நேற்றிருந்தா ரின்றிலரை நேர்ந்துங் கலங்காது
போற்றி யுடம்பதனைப் போகிக்க - நூற்றிரளைக்
கற்றுமட வார்தமையே காதலிக்கு ஞானிகளே
சற்று மதியிலையோ தான். கக

அறிவு மறிவனவு மாமிரண்டு கூறில்
அறிபவற்றி லாராய்ச்சி யன்றி - யறிவுதனில்
இல்லா தயல்போதைக் கென்றுமுழல் ஞானிகளே
பொல்லா மயலெங்ஙன் போம்.

போக்கமயல் தேடாது பூரிக்க மாதுமயல்
நீக்கமற நின்றுழற னீதியோ-எக்கமிலை
கண்கெட்ட ஞானிகளே கண்ணுடையார்ச் சேர்ந்துய்ம்மின்
கண்பஞ் சடைமுன்னர்க் கண்டு. கங

உள்ளும் புறம்பு முணர்வுதனைக் காண்டற்கோ
கள்ளுமயக் காழ்தற்கோ கற்றுணர்ந்தீர் - தெள்ளறிவிங்
கில்லாத ஞானிகளே யீங்கறிவை யுற்றுணர்மின்
பொல்லா மயலெதுவும் போம். கச

எல்லா விபரீத மில்லை யறிவன்றிக்
கல்லாது கண்டதனைக் கற்றுணர்ந்தீர் - நல்லார்போற்
காட்டி மயல்வளர்ப்பீர் கட்டறுக்கா ஞானிகளே
வீட்டுநெறி சொல்லவலா மேல். கரு

சிந்தித்த போது செகத்திற் சுகதுக்கம்
சிந்திப்பை யின்றியிவை சேருமோ - சிந்தனைதா
னில்லை யறிவன்றி யீண்டறிவைக் கல்லாதென்
றொல்லை மயலதனிற் றேய்ந்து. ௧௫

அறிவுநாட்டங் கல்லா தனந்தநூல் கற்றும்
அறியாமை போக்கற்கிங் காமோ - வெறிவிலைக்கு
வாங்குகின்ற ஞானிகளே மாளாச் சுயவெறியை
நீங்கிநிற்ப தென்றோ நிறைந்து. ௧௭

பாவமொடு பாவிப்பான் பார்த்திதனிற் றேயாது
பாவபா வங்கடந்த பாழதனில் - தாவாது
மெய்யுணர்வைக் கண்டதனில் வீழாத ஞானிகளே
மையலென்று போக்குவிரோ வந்து. ௧௮

தற்போதை மேலாக்கித் தானதனில் மூழ்காதிங்
கற்பபோ தைக்கலைவீ ரையையோ - கற்பில்லா
ஞானிகளே யென்கற்றீர் ஞானநூ லேத்தற்கோ
ஆனதித னல்மடமை யாம். ௧௯

உலக மறக்கற் றுணர்வா லறியீர்
கலகமயக் கள்ளதனாற் கண்டீர் - பலகற்ற
ஞானிகளே யென்னேர் நண்ணுமோ ஞானம்போல்
ஏனிதனை யுற்றுணரீ ரிங்கு. ௨௦

சிந்தனைக்குக் காட்சியெது தீராது கண்டிருக்க
எந்தவுரு பாவனையு மீங்ககலும் - அந்தோ

அறியாது ஞானிகளே யன்னியபோ தைக்கே
வெறிகொள்ளி னெங்ஙனுய்வீர் மேல். உக

விழிப்பிற் சகத்தும் விழிப்பொழிவிற் பாழும்
அழித்தறிவைக் காணுதிங் கந்தோ - பழிப்பகலாப்
போதைக்கும் மங்கையர்தம் போகத்துக் கும்முழல்வீர்
ஏதுக்குப் பாத்திரரோ விங்கு. உஉ

அகம்பிரம மென்பதனை யாய்ந்துணர்ந்து நில்லா
தகம்பிரம மென்றோதி யந்தோ - மிகமயல்கொண்
டன்னியதா ரத்தை யணைந்துசுகி ஞானிகளே,
என்னமதிப் பார்கண்டா ரிங்கு. உந

அம்மொழியாற் குற்றமிலை யாயாமை நுங்குற்றம்
எம்மயலும் போக்கலெவ னீங்கிதனல் - மெய்ம்மையுணர்
ஞானிகட்குந் தூடணமே நாடாதென் ஞானிகளே
உளனு மதுவுமெத்த வுண்டு. உச

பகலெல்லா ஞானிகளாய்ப் பாதிரவின் மோகம்
மிகுதலாற் காமிகளாய் மேவி - அகவிளக்கம்
இல்லதனாற் சையோகத் தின்பநுகர் ஞானிகளே
நல்லவர்போற் காண்பதெவ னன்கு. உரு

சிவவேடம் பூண்டு சிவக்கொழுந்தாக் காட்டி
யுவக்கவே தாந்த நூ லோதி - அவத்திலே
கள்ளனை வேட்டுக் களிக்கின்ற ஞானிகளே
எள்ளுவார்க் கென்சொல்வீ ரிங்கு. உசு

ஞானவெட்டி சித்தாதி ஞானநூ லென்றோதி
ஞானமிஃ தென்றறியா ஞானிகளே - ஞானிகள்போற்
காட்டி மடவார் கரவிற் புணர்ந்துழல்வீர்
ஓட்டுமோ யானெனதை யோர்ந்து. ௨௭

விதிவிலக்கிங் கற்ற விமலர்போற் றம்மை
மதியக்கா லெண்ணிவழி மாறி - விதிவிலக்கைப்
போக்கிமது போகமதைப் போற்றியுழல் ஞானிகளே
நீக்கியெங்ங னுய்விரோ நின்று. ௨௮

சித்து விளக்கஞ் செடவிளக்க மிவ்விரண்டிற்
சித்துவிளக் கத்தாற் செடவிளக்கம் - எத்திறத்துங்
காண்பதென வோராது கள்ளுண்ணு ஞானிகளே
வீண்பயனுற் கொள்வதென்னை மேல். ௨௯

உலகமதைக் கண்டிங் குவப்பதனுல் யாது
பலனெவர்க்குந் துக்கமதே பாரா-தலகிலதாக்
கற்றுமது போகங் கடவாத ஞானிகளே
சற்றுமதி யில்லாதென் றுன். ௩௦

மனிதாதி ரூபமெலா மண்ணுதி பூதம்
வனிதாதி யின்பமென மாள்வீர் - புனிதமாம்
ஆன்மசுக லேச மயலின்ப மெல்லாமென்
றான்மசுகங் கண்டுய்ம்மி னங்கு. ௩௧

உலகின்ப மெல்லா மொழியாத் துயரென்
றலகிலதாக் கண்டு மறியீர் - இலதறிவால்

ஞானியெனக் காட்டி நலிதலுறு ஞானிகளே
ஞானநிலை கண்டுய்ம்மி னன்கு. ௩உ

அயலறிவ தல்ல வகம்பாவ மல்ல
இயலறிவ தல்ல வெவையும் - மயல்விளைக்கும்
ஆதலினுன் ஞானமென லாயாது ஞானியென்பீர்
வேதனையே யின்பமிலை மேல். ௩௩

எங்கோநா னென்பதுவு மெங்கே யெனதெனலும்
எங்கே செகத்தொடுக்க மெங்ஙனே - நங்கருத்திங்
காயாது போகத் தலைகின்ற ஞானிகளே
ஓயாது துன்ப முமக்கு. ௩௪

அல்லல்போ தாதென் றகமமதை கொண்டுமிக
அல்லல் பெருக்கவோ வாயாதிங் - கில்லல்லார்
போகத்துக் கேயுழலும் பொய்வேட ஞானிகளே
ஏகத்தை யெங்கடைவீ ரிங்கு. ௩௫

நாமரூ பப்பொருளே நண்ணுவதா லெவ்விடத்துந்
தாமகறற் கேற்றநெறி தாவாது - சாமத்துக்
கள்ளபோ கத்தைக் கருதியுழல் ஞானிகளே
உள்ளுவதென் றேதன்னை யுற்று. ௩௬

அறிவின்ன தென்றிங் கறிந்தாற்பாற் சென்று
பொறிவழியிற் செல்லாது புக்கு - நெறியோடு
காணாது தன்னைக் களித்துழலு ஞானிகளே
நாணுதிங் குய்வதெவ னன்கு. ௩௭

தம்முளே மிக்காளைத் தாஞ்சகியா துண்மறைந்து
தம்மவரால் மிக்கதுன்புந் தந்திடுவீர் - அம்மா
கொலையாத ஞானிகளே குற்றமிலார் போல்வீர்
இலராவ தெங்ங னிறந்து. நஅ

என்று பலவா றிசைத்துக் கருணையால்
அன்றவர்க்கு முத்திநெறி யாங்களித்து - நன்றே
புரிதற்கு யாரும் புகன்றமறைச் சிக்கை
யொருங்கித் தெரிவித்தா ரோர்ந்து. நகூ

---

அடாஞானக்கழற்றி முற்றிற்று.

படலம் கச - க்கு ஆ கவி அசடு.



உ

திருச்சிற்றம்பலம்

# கல்வியாதாரவிளக்கம்.



எப்பாடை கட்கு மிரும்புலவீர் கேண்மினிதை
எப்பாடை கட்குமுத லீதென்று - தப்பாது
ஆய்ந்திடநீர் வம்மி னவற்றின் மயக்கமெலாம்
மாய்ந்திடுதற் குள்ளே மகிழ்ந்து. க

அதுவதற்குக் காரணங்க ளாய்ந்தாய்ந்துட் செல்லில்
இதுவிதுவென் றெட்டாம லேகும் - அதுதான்
எழுத்தாதா ரங்கணுமைந் தெட்டவெட்ட வின்றும்
எழுத்துமுத லெட்டினிரோ வின்று. உ

எழுத்தொலியின் மிக்கநிலை யெட்டினிரோ வில்லை
எழுத்தென் றிடையி லிருப்பீர் - அழுத்தமாய்
முன்பின் படியாத முற்றுணர்ந்தீ ரெட்டில்
இன்பநிலை வேறொன் றிலை. ங

பெயர்ச்சொ னிலையதனைப் பேசுதும் வாரும்
பெயராம் பொருட்கென்பீர் பின்னும் - பெயர்க்கிங்
குருவருவஞ் சித்துசட முள்ளபொருட் பேதம்
உருவமதை யாய்குதும்யா மோர்ந்து. ச

உருவமதின் மண்ணெனற்கிங் குள்ள வடிவந்
திரிபின்றிக் காட்டத் திடமின் - றொருவர்க்கும்
என்னி னனர்த்தமதா மெப்பெயருஞ் சொற்றோற்றம்
இன்னதற்கு மாறே விசை. ரு

மண்ணின்றேற் பூமி மலையாதி பல்லுருவம்
எண்ணில் பலவளப்ப மெத்தொழிலும் - உண்ணலுடை
இன்பதுன்ப மேல்கீ ழிறப்புபிறப் பாதியின்றே
என்மொழியா ரேற்பா ரிதை. சா

எதுவுஞ் சுயம்பா யிருக்கவெங்குங் காட்டில்
இதுவெல்லா முண்மையென வேற்பம் - அதுகாணும்
நுட்பவனு சையோக நுண்ணுணர்வோ ரேயறிவார்
மட்டிகளே னேற்பார் மகிழ்ந்து. எ

பந்த மகற்றுவார் பார்க்குநெறிக் கேற்குமிது
இந்த வகையறியார்க் கேற்குமோ - இந்தமட்டும்
நிற்க வினையி னிலையறியக் கூறுதும்யாம்
ஒற்கத்திற் கோலாத யுற. அ

வினைமுதலே தென்னில் விடாதொன்றை யொன்று
இனையதென வெட்டாம லேகும் - அனையதுகேள்
தேகமெனி னித்திரையிற் செத்தபிணம் போற்கிடப்பென்
தேகமல வென்றே தெரி. கூ

பிராணுதி யென்னிற் பெருஞ்சுழுத்தி தன்னிற்
பிராண னிருந்தும் பிணம்போல் - திராணியின்றித்

தேக மிருப்பதனுற் செப்பே மவைமுதலா
ஊகத்தா லாய்குதுமே லுற்று. ௧0

இச்சையன்றி ஞான மெழுமோ விதையன்றி
எச்செயலு மெங்கு னெழுமென்னல் - இச்சையுந்தான்
தோன்று தவித்தையன்றிச் சொல்லினிங்ஙன் மேன்மேலே
தோன்றுமற் போகுமன்றே சொல் ௧௧

தேகம் பொறிகரணஞ் சீவன் பரமாதி
யேகுமெனி லெத்தொழிற்கு மேதுமுதல் - ஊகத்துக்
கெட்டா முதலறியா தென்னகற்றீர் பண்டிதர்காள்
எட்டுவரா ரும்மையன்றி யில். ௧௨

சென்று னெனுமிடத்துத் தேகம் வினைமுதலே
யென்றுஉன் றுதசைவு மேன்காணும் - இன்றாகும்
இச்சையன்றி யுன்னலுந்தா னிவ்வாறே மேற்செல்லின்
நிச்சயிப்பார்க் கேது நிலே. ௧௩

வினைமுத லீதென்று விளையாட்டாக் கொள்வீர்
வினைமுதலை யெட்டவெட்ட மேலே - யினையதெனக்
காணு நிற்குநிலை கண்டகலா நிற்பதென்றே
வீணாகு நுன்னிலைமை விட்டு. ௧௪

ஆடிஞ னென்னுமிடத் தாரவனென் றாரவனென்
றேடதனை விட்டாய்வா ரெங்குமிலை - ஏடவனைக்
காட்டுமோ வுண்மையுரு கண்டா ரொருவரிலை
காட்டுமகக் கண்ணென்றே காண். ௧௫

ஆண்பெண் ணலியன் றருவுருவு மேதுமன்று
காண்மினிதைக் கேவலத்திற் கற்றுணர்ந்தீர் - மாண்புடை
சொல்வதையுங் கேளீர் சுயபுத்தி யுங்காணும் [யோர்
கல்வியெல்லாம் யாதுக்கோ கற்று. கசா

தேடினீர் நூலமட்டுஞ் சென்று வினைமுதலை
யூடுருவிக் கண்டா ருளரருமை - நாடுங்கால்
என்னென்ப னும்புலமை யீங்குவைப்பீர் கேலிதனில்
இன்னாநிலை விட்டெம்மை யிங்கு. கஎ

எத்தொழிற்கு நூலமன்றி யென்கண்டீர் செய்கைமுதல்
இத்தையுணர்ந்தேன் மறந்தே னென்னுங்கால் - மெத்தவுங்
கற்றிடுத லெட்டிமுதல் காண்டற்கே யேனெட்டீர் [தான்
உற்றுணர்தல் கட்டமென லோ. கஅ

கருவிற் படுமுன்னர் காணின் முதலைக்
கருவுட் படினுங் கலங்கோம் - கருவதனிற்
பட்டதனு லின்னும் படுதுமெனற் கையமுண்டோ
விட்டமோ தேகபோக மெய். ககூ

வினைமுதலென் றல்லவற்றை மெய்யாகக் கொள்ளில்
இனையதெனக் கண்டுணர்வ தென்றோ - நினைவில்லீர்
இம்மை யகலுமெனி னெப்பிறப்போ வென்செய்வம்
இம்மையிலே கண்டுய்ம்மி னிங்கு. உ0

கண்கலக்க மில்லேங் கலங்கா நிலைநிற்க
மண்போக மெக்கணத்தின் மாண்டிடுமோ - கண்புதைந்த

பண்டிதர்கா ளிக்கணமே பார்த்துய்ம்மின் செய்கைமுதல்
உண்டில்லை யென்று துவந்து. உக

எல்லா வினைமுதலு மேகமெனக் கண்டொளிர்வீர்
எல்லா வினைமுதலை யெட்டினால் - வல்லீர்காள்
என்சொல் லசட்டைசெயா திப்போதே சோதிக்கில்
என்சொல்மெய் பொய்காண்பீ ரிங்கு. உஉ

எழுத்துப் பெயர்வினையை யிவ்வாறே காணின்
விழித்துறங்கி நிற்குநிலை மேவும் - பழிப்பின்றிப்
பண்டிதர்கா ளிங்கிதுபோற் பார்த்தறியீர் கேட்டறியீர்
கண்டிட்டீ ரென்றாலே காண். உங

உன்னினு னென்னுமிடத் துன்னுமுத லேதேதென்
றுன்னவுன்னச் சான்றோரா லோர்ந்திடுவீர் - அன்னநிலை
எட்டாப் பழம்பொருளே யீதுண்மை யீதுண்மை
எட்டாதீ தெவ்வெவர்க்கு மே. உச

அவசரங் கொள்ளா தமைந்துநின் றென்ன
அவசரத்தாற் சொன்னனென் றுயின் - அவசரந்தான்
காணு மழைக்குங் கதிகடந்த வுண்மைதனில்
நாணச் சமய நடை. உரு

எவ்வளவோ கற்றுணர்ந்தோ மீதற்ப மென்றிகழா
தெளவியம்பின் னிட்டிதனை யாய்ந்துணரிற் - செவ்விதாக்
கண்டகலா நிற்பீர் கலங்கா நிலையதனிற்
பண்டைமயல் போகப் பரிந்து. உசா

இதுநிற்கக் கல்வி யெதுவுண்டே லுண்டாம்
அதுசற்று யாமொக்க வாய்தும் - மதிவல்லீர்
ஞாபகத்தைத் தள்ளியிந்த நாட்டோ மெதில் வல்லோம்
ஞாபகமென் றேங்கல்வி நாம். உஎ

ஞாபகத்தி னுண்மையுரு நாடிற் சடமன்று
ஞாபகமன் றெங்கிலையு நாசமுறும் - ஞாபகத்தை
உற்றுநின்று காணி லொழியாச் சுயஞ்சோதி
கற்றும் பராக்ககலீர் காண். உஅ

கற்றுணர்தல் ஞாபகத்தைக் கண்டகலா நிற்றலைவிட்
டுற்றிடநீர் போகமதை யோயாது - சற்றுஞ்
சலியாதிங் கேயுழல்வீர் சந்ததமும் வல்லீர்
மெலியீ ரகம்பாவம் விட்டு. உகூ

ஞாபகத்திற் கற்றளவு நண்ணுமிகை யெங்ஙனுண்டாம்
ஞாபகத்தைத் தள்ளியெதி னுடுவோம் - ஞாபகத்திற்
கொள்ளளவை யன்றியெங்ஙன் கொள்ள விடங்கொடுக்கும்
உள்ளியதைக் கண்டுய்ம்மி னுற்று. ௩0

ஞாபகத்தி னுண்ணுமநிலை நாமென்று கல்லாது
ஞாபகத்துக் கன்னியத்தி னுங்கழிக்கில் - ஞாபகத்தை
யாய்தல்மிகக் கட்டமென்றே வத்தனையும் பேரின்பம்
மாய்ந்திடுமுன் கண்டுய்ம்மின் வந்து. ௩க

ஞாபகநாட் டத்தினிற்கி னுடுமோ வன்னியந்தான்
ஞாபகநாட் டத்தைவிடி னுடுமே - ஞாபகத்தைக்
கற்று ரெவருமிலை கற்றமட்டும் போதுமிதைக்
கற்றுணர்ந்து நின்மினினிக் கண்டு. ௩உ

இதுவே பயன்கல்விக் கிதொப்ப தில்லை
எதுவு மபாவமதே யெங்கும் - இதுசத்யம்
சொல்வதனு வென்னபயன் சோதித்துப் பார்த்துய்ம்மின்
வெல்வதுமெய் மோகம் விரைந்து. ௩௩

சும்மா விருக்குஞ் சுகநிலையே தக்கபலன்
அம்மாவிஞ் ஞாபகத்தை யாய்ந்துணரில் - தம்மில்
எதுவுமல வாயினுந்தா னெவ்வண்ணங் காண்பம்
அதுவிதுவென் றின்றி யகம். ௩௪

சின்னமவிச் சின்னமல சேருமிடம் வேறில்லை
உன்னுங்கால் ஞாபகத்தி னுண்மைநிலை - அன்னியமாய்ப்
பாழுமாய்க் காணுமெவர் பார்வைதனக் கேற்றபடி
ஆழமாய்க் காண்மி னதை. ௩௫

விடயஞ் சொரூபமென வேவு மிரண்டிவ்
விடையமிடர் தந்திட்டே வேறும் - கடைமுடிவில்
எனையதாற் பேரின்ப மிவ்விரண்டு மல்லவிது
எனைய மாய்ந்துணர்மி னிங்கு. ௩௬

திரிசயத்தி லொன்றுந் தெளியாத தில்லை
தெரிவதனைக் கண்டேன் தெளியீர் - திரிபுடியற்
றென்றூற் பிழையென்னை யேனசட்டை செய்திகழ்வீர்
ஒன்றுமறி யாதவர்போ லுற்று. ௩௭

எதுவுலகாத் தோன்றி யிலதாகத் தோற்றல்
அதுவே யறிகருவி யாமென் - றெதினும்
ஐயமின்றி யொன்று யனுபவிக்க வல்லிரேல்
மெய்யுணர்வுண் டேவயலா வேறு. ௩௮

ஞானமென்ல் வேறன்று ஞாடகத்தி னுண்மைநிலை
மோனமுறக் காண்பதென்றார் மூதுணர்ந்தோர் - ஈனமெவ
மாப்புலவீர் செய்தற்கு வல்லார்பாற் கேட்டுய்ம்மின் [ன்
மூப்பு வருமுன் முதிர்ந்து. நகூ

ஞாபகமே யாதார நண்ணுபந்த முத்திக்கு
ஞாபகமல் லாவுயிர்க ணுங்காணும் - ஞாபகத்தை
எப்பிறவி யென்றுணர்து மேகபரி பூரணமே
அப்பதத்தி னின்றார்க் ககம். சo

ஞாபகநாட் டத்தைவிடி னண்ணும் விபரீதம்
ஞாபகநாட் டம்படிக்கீர் ஞாயமோ - ஞாபகத்தைக்
கற்றுணர்ந்து நின்மின் கலங்கா நிலையதனில்
மற்றவையெல் லாம்போக்கி வந்து. சக

செயற்கரிய சான்றோரே செய்வர் சிறியர்
செயற்கரிய வல்லவற்றைச் செய்வர் - மயக்ககலா
தென்பவற்றி னுங்கருத்தே திங்ஙனமே செய்துய்ம்மின்
என்சொல்லை நம்பாம லிங்கு. சஉ

நானே சமஷ்டியென ஞானே வியட்டியெனல்
நானன்றி யில்லையிவை நாடுங்கால் - நானெனலோ
சித்து சடமல்ல திரிபுடியுந் தானுமல
சத்தசத்து மல்லவே தான். சந

---

கல்வியாதாரவிளக்கம் முற்றிற்று.

படலம் கரு - க்கு ஆ கவி அஅஅ.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# வஸ்துபரிசோதனைவிளக்கம்.

இம்மொழிகள் கோஷ்டிக்கு மிவ்வியாசர் முன்னொருவன்
எம்மதமு மேலாம லீங்கிவ்வரை - எம்மிறையே
யானெனதென் றல்லவற்றை யெண்ணுமடி யேன்மயலை
யானகல்வ தெங்ங னிசை. ௧

என்றுனை நோக்கி யிதுவதுவென் றுள்ளவெலாம்
பொன்று மயல்விளைக்கப் போந்தனவே - என்றோர்ந்து
சாயாது நிற்றியேற் சர்வம் பிரமமெனல்
ஓயாது காட்டுவன்யா னுற்று. ௨

இல்லையுண் டல்லவா மென்றவழக் கோர்நான்கும்
தொல்லைமயல் போக்கற்குச் சொன்னமுறை - வல்லையேல்
கேட்டிவற்றைச் சிந்தித்துக் கேடில் நிலையதனில்
நாட்டமுற்றிங் குய்ந்திடுக நன்கு. ௩

காரணத்தை யுண்டென்றுங் காரியத்தை யில்லென்றுங்
காரணத்தை யாமென்றுங் காட்டலொடு - காரியந்தான்
ஏதல்ல வென்று மிசைக்குமறை யின்காட்டை
ஓதயான் கேளிங் குவந்து. ௪

பொன்னையன்றி யில்லைபணி பொன்னே பணியதனால்
பொன்னையே யுண்டென்னும் போற்றுமறை - பொன்னல்ல
இப்பணிதா னென்று மியல்புருபொன் னுமென்றுந்
தப்பின்றி யோதுமே தான். ரு

இவ்வுவமை போலென் னிசைக்குமறை யென்றிடிலோ
இவ்வுலக ஞெப்தியன்றி யீங்கில்லை - இவ்வுலகம்
ஞெப்தியல காரணமோ ஞெப்தியா முண்டென்னல்
ஞெப்தியே யுண்மை நிலை. சு

உலகமன்றித் தேகசுக மோர்காட்சி யுந்தான்
இலவாதற் கேதென் னெவர்க்கும் - உலகமிலை
என்றுரைத்தா லையாவென் றேத்தி யவன் கேட்க
நன்றிதனைக் கேட்பாய் நயந்து. எ

தெரிவன்றி யெங்கே செகத்தன்றி யெங்கே
தெரிவுண்டே லுண்டாஞ் செகமும் - தெரிவுந்தான்
உண்டா முலகுண்டே லுண்டோ நினைவின்றேல்
கண்டவருண் டோதெரிவைக் காண். அ

கண்டார் தெரிவன்றிக் கண்டையோ விவ்வுலகைக்
கண்டார் தெரிவோடு காண்கிலையோ - உண்டிரண்டும்
என்றதென் னையா விருக்குமட்டுங் காண்பதெவன்
என்னுகு நின்வசன மிங்கு. கூ

எல்லார்க்குங் காண்பானே னீங்கொருவர்க் கின்றியக்கண்
கல்லாய் தெரிவிருத்த னுடிலையோ - எல்லார்க்கும்

எங்கெங் கறிவுண் டிருக்குமே யங்கங்கும்
எங்கெங் கிலையோ விலை. க0

கடபடம்போ னின்மொழியாற் காணாதே யென்னிற்
கடபடத்தின் மாறாகிற் காட்டாய் - படபடென
உண்டில்லை போதறிவிங் குண்டிலதாக் காண்பதன்றி
உண்டில்லை யேலா துலகு. கக

இருபோது மாறா திருக்க வுலகைத்
திரிபதன்மே லேற்றுவது சீரோ - பெரிதுபிழை
யென்னிலறி வன்றி யிருபோதுங் காட்டுதியோ
என்னமதி யூகியலை யிங்கு. க௨

மனவிருத்தி யுள்ளளவு மண்ணாதி காணும்
மனவிருத்தி நிற்கின் மறையும் - தினமுநீ
கண்டிலையோ வென்றுரைக்கக் காண்ட விருந்தன்றே
உண்டென்ப மென்று முலகு. கங

இருப்பதெனின் ஞப்தியன்றி யிப்போது காட்டில்
இருப்பதற்கு மாறில்லை யென்ன - இருப்பதெது
கண்ணுக்கு முன்னாகக் கண்ணலவே மாப்பூதம்
எண்ணமின்றிச் சொல்வதெவ னிங்கு. கச

தனக்கென்றிங் குண்மையுரு சார்ந்திருப்ப தொன்றை
இனக்கலப் பின்றியெவ ணேதும் - அஸர்த்தமின்றிக்
காட்டுதியே லேற்பமெனக் காணுலகுக் கையமெவன்
காட்டுவன்யா னென்றான் களித்து. கரு

அணுக்கூட்டமேனு மனுபவிக்கப் பாற்றிங்
கணுத்திரளே யுண்மையுல காகும் - பிணக்கின்றி
யென்னி லணுவுந்தா னில்லை வெளியன்றி
யன்னியமோ வில்லைவெளி யாம். கரு

வெளிமயமென் றேகிலெதிர் வேற்றுருமுட் டாதோ
வெளிமயத்துக் கையமுண்டோ மெய்யும் - வெளிமயமே
யென்னத்தா னுகி லிலேயே யசைவுந்தான்
அன்னியமே யில்லையத னுல். கஎ

வேற்றுருவ மெல்லாம் லெளியதனிற் கற்பிதமே
வேற்றுருவ நோக்கால் விபரீதம் - நீத்து
வெளிநாட்ட மாகில் விபரீத மின்றி
யெளிதிற் சுகநிலையா மிங்கு. கஅ

இதுபற்றிக் கூறு மிருமறையி னந்தம்
இதுமறுத்தல் துட்டமதி யேலோம் - இதுநோக்கத்
தென்றுநில் லென்ன விதுபொருளன் றென்னினுணர்
இன்றுசுக சாதனமா மிங்கு. கக

உலகிருப்பைக் காட்டிங் குணர்வன்றி யெங்கும்
உலகோ வுருவருவா யொன்றும் - உலகுருவச்
சிந்தனையால் ராகாதி சேரு முலகருவச்
சிந்தனையா னிர்மலமாந் தேர். உ0

சிந்தனையை யன்றிச் செகத்திருப்பைக் காட்டுதியோ
சிந்தனைமட் டேசெகத்து தேர்கிலேயோ - சிந்தனைதான்

உள்ளவிட மெல்லா முலக மஃதன்றி
யுள்ளதுல கென்னே னுவந்து. உக

செகத்தின்ப துன்பமிவை சிந்தனைமட் டன்றேல்
செகத்துவே றென்பமிது திண்ணம் - செகத்துசடம்
ஆதலினு லென்னி லறிவன்றி யோரணுவுஞ்
சோதனையாற் காணேந் துணிந்து. உஉ

இல்லையுண் டாமலவென் றேலாத தோர்பொருளும்
இல்லையே யுண்டிலகென் றேற்பதெவன் - வல்லையே
சொச்சமதாக் காட்டத் துணிபில்லை யேயெவர்க்கும்
எச்சொல்லுஞ் சொல்லா திரு. உங

எதைநாட்டி னுமிஃ தில்லையல வென்பீர்
எதையாமுண் டென்பிரோ வென்றும் - அதையாமும்
வாச்சியத்தா லோர்ந்தும் வலியோஞ் சலனத்தில்
ஆச்சியம்போற் காணுத தால். உச

மரத்தையுண் டென்னின் மரத்துளை யன்றி
மரமில்லை காணுமிந்த வஸ்தோ - மரமல்ல
ஆதலினு லெப்பொருளு மல்லவிலை யென்பனவாம்
ஓதுதியோ மாறு வுணர்ந்து. உரு

முன்னுளது பின்னெங்கே மூடமதாற் பின்னில்லை
இன்ன விசாரணையா லீதறிவே - யன்னியமன்
றெல்லாமு் மிப்படியே யீதறிஞர்க் கேதெரியும்
எல்லாரு மோரா ரிது. உசா

ஆடி யழுக்கை யகற்றக் கரம்வேண்டும்
ஆடிநிழல் போக்கற் கறிவன்றித் - தேடுவதின்
றன்னியத்தைப் போலென்ப ராகு மிருவழக்கும்
உன்னுவதாற் கண்டுணர்வை யுற்று. உஎ

முதற்கருவி சித்துசட முற்றுலகுக் கென்பர்
முதற்கருவி சித்தை மொழிவன் - எதற்குந்தான்
காரியமென் றேமுடியுங் காரணமு மாயுங்காற்
பூருவசித் தாந்தநெறி புக்கு உஅ

எக்கா ரியமுந்தா னீங்காயின் முன்பினிலே
எக்கா ரணமுமன்றி யிப்போதும் - மிக்கோய்கேள்
எங்கே பணியென்ற வில்லாமற் போயிற்று
எங்கேமுன் னுள்ள தெமக்கு. உக

உண்டெனவு மில்லெனவு மொன்றையே காண்கிலேயோ
உண்டில்லை யென்றிரண்டு மொன்றிலொன்று-கண்டிலேயோ
இல்லாமை யெங்கு மிருப்பதறி யாமையென
நல்லோ யிதைநாடு நன்கு. ௩0

திரிபுடி தா னேரிரண்டாஞ் சித்துசட மென்னத்
தெரியு மகம்புறத்தில் சீவர்க் - கிருவகையுஞ்
சித்தென்பர் ஞானி செடமென்ப ரேனையர்கள்
ஒத்திங் கிருவகையு மோர்ந்து. ௩க

விகாரமே யுள்ளதுபோல் மேவ வுலகம்
விகாரமெல்லா நீக்கில் விளங்கும் - விகாரமா

நிற்கு மறிவதுதா னின்மலத்தோர் நோக்கதனால்
நற்குணத்தோய் கண்டுணர்தி நன்கு. ௩௨

உள்ளும் புறம்பு மொருவாத் திரிபுடிதான்
தெள்ளறிவை யன்றிச் செனிக்குமென்பம் - உள்ளபடி
ஐயுணர்வைத் தள்ளி யணுவிருக்கக் காட்டுதியேல்
மெய்யுணர்வை யன்றியிலை வேறு. ௩௩

உலக மயக்க மொழியா துணர்வுக்
கலகிலதாக் கற்று மரிதாம் - உலகமதை
யன்னியமாக் காணளவு மற்றூர்க்கு மெய்மையினும்
தன்னதுரு வாக்காது தான். ௩௪

வஸ்துவுண்மை காண வகைதெரித்தி யென்றிறைஞ்ச
நிஸ்தரங்கம் போல நிலைநிற்க - வஸ்துநிலை
சங்கைசமா தானமொடு சாற்றுவன்யா னுண்மையதா
இங்கொன்றும் பேசா திரு. ௩௫

சங்கையிலே நிற்கிற் சலனமறு தெந்நாளும்
இங்கெமக்கே பார மிதையகற்றல் - எங்கும்
இதுவதுவென் றுன்னு திருத்தியான் மெய்யை
இதுவென்று சொல்லளவு மிங்கு. ௩௬

அறிவு மறிவனவு மாமிரண்டு கூறே
அறிவுடையோர் கண்ட வனைத்தும் - பிறிதில்லை
எந்நிலைய தேனு மிதிலைய மில்லையே
உன்னுங்கா லொவ்வொன்றை யுற்று. ௩௭

சித்துசட ழென்றிரண்டுட் சேர்க்கப் படுமனைத்தும்
சித்துசட சோதனையாற் சிந்தித்துச் - சத்துக்கள்
அன்றி யெவர்க்கேனு மாகா திதைவகுக்க
என்றுமறி யாரறிவை யிங்கு. ௩அ

பசுபதி பாசப் பகுப்புளதாக் காண்டல்
நிசவறிவுக் கேயாகு நித்தம் - பிசகன்று
காட்சிபுல கேனையவை காணுமனு மானத்தாற்
சாட்சிநா மேயிவைக்குத் தான். ௩௯

ஒருபோது தூல மொருபோது சாயை
ஒருபோது பாழிங் குணர்தல் - தெரிவதுவே
ஐயுணர்வாய் மானதமா யாவியாய் நின்றென்றும்
ஐயமிலை யாதேனு மாய். ௪0

இவ்வாறு கண்டுமறை வெங்கே யிடந்தேரில்
ஒவ்வா வறிவிடத்த துண்மையே - செவ்விதாச்
சித்துநாட் டத்திற் றெரியு மிஃதன்றி
யெத்திறநாட் டத்து மிலை. ௪க

நனவு நினைவோடே நண்ணுங் கனவும்
மனவிழப்பு மேமயமா மாளா - தினையவன்றிக்
காலம் பொருளிடந்தான் காட்டவலா ரெங்குமிலை
சாலப் படித்துணர்ந்துந் தான். ௪உ

இந்நான்கு மன்றியிலை யெவ்வவத்தாக் காட்சிகளும்
இந்நான்கு மாறுவது மெங்ஙனே - அன்னவிடம்

காணி லணுவேனுங் காணு துலகெங்கும்
நாணமிலார் வாதிப்பார் நன்கு சங

தஸ்மரணை விஸ்மரணை தாமிரண்டாஞ் சொஸ்மரணை
தஸ்மரணை யில்லையுயிர் தாமெங்கும் - விஸ்மரணை
யில்லா யுயிரில்லை யெல்லாம் ஸ்மரணைமயம்
நல்லா யிதைநாடு நன்கு. சச

ஸ்மரணையன்றி யுண்டுயிரேற் சாற்றே லயலை
ஸ்மரணையதா யில்லையெனிற் சாற்றாய் - ஸ்மரணையே
யுண்டிருநாட் டத்து முலகுண் டொருநாட்டத்
துண்டுகொலோ வுண்மை யுலகு. சரு

பண்டிதரு நாடருமை பாமரரை யென்சொல்வம்
அண்டர் முனிவருக்கு மாகாதேல் - கண்டிலைகொல்
தூர மணிமையல சொல்லற் கெளிதல்ல
யாருமே லாதல்ல வாய்ந்து. சசா

பணியை யுருக்கிற் பணிவிகற்ப மாய்ந்து
பணிபொன்ன தாமென்னப் பாராய் - அஃனிமையதாக்
காண்ப வறிவாகக் கண்டுணர்ந்து சிந்திக்கில்
காண்பனவே வன்னியமாக் காண். சஎ

அறிவுநாட் டத்தி லலைகடல்போ லெங்கும்
பிறிதின்றித் தானே பிறங்கும் - அறிகிலைகொல்
இவ்வாறு சிந்தித் திருநிலையுங் கண்டுரைக்கில்
ஒவ்வாத தீர்ப்பென் றுணர். சஅ

அறிவை யணுவளவென் றுக்குமவர் தீர்ப்போ
அறிதி யொருதலையென் றந்தோ - வெறியெங்ஙன்
தீர்ந்துய்வை யெம்மதத்துஞ் சேராதிவ் வுண்மைநிலை
ஓர்ந்துணர்ந்து நின்றிடுவை யுற்று. ௪௯

அயனுட்டத் தாலே யறிவணுவா மென்னச்
சுயவறிவு நாட்டத்தாற் றோன்றும் - அயலெல்லாம்
அற்பதமா வெங்கணுநீ யாராயி லையமறும்
கற்பனையி னுண்மையன்று காண். ௫௦

அறிவு மறிவனவு மாமிரண்டி னுண்மை
யறிவே யபாவ மனைத்தும் - அறிவன்றிக்
காட்டவலா ரில்லையதாற் காணு மசத்தாதி
நாட்டிடும்யா முண்மைதனை நன்கு. ௫௧

சத்தாதி யைந்துந் தடையின்றி முன்பினிடை
யொத்தே விளங்க லுணர்வென்றே - வத்துநிலை
சாற்றுவன்யான் கண்ணுறவே சாந்தமதா ஞாயத்துக்
கேற்றமுறைக் கெல்லா மியைந்து. ௫௨

பரிச்சின்ன மில்லாப் பரவஸ்து வீதே
யுரக்குறியாற் காட்டிடும்யா மோரத் - திரப்படவே
எம்மதத்தோர்க் கேனு மிரியாதிங் கையமறச்
சம்மதம தாகத் தணிந்து. ௫௩

அபேதவா தத்தைத் தடங்குவே தாந்தத்
துபாதிகுண மின்றி யொளிர்தல் - சுபாவமதா

நின்ற பரவறிவை நேராகக் கண்டதுவா
நின்றவர்க்கு யாரே நிகர். ௫௪

அறிவாக நின்று லயமெங்குங் காணு
அறிவாக் கரைக்கிலெதி ராமோ - பிறிதெல்லாம்
காணாத குற்றமே கண்டா ரடிவணங்கிக்
காணார்க்குச் சொல்லாங் கடை. ௫௫

கண்டுணர்வாய் நின்ற கருத்தின் மதுரம்போல்
கண்டிலம்யா மாறுது காண்பவற்றுள் - அண்டர்பிரா
னேனு மறியானே யிவ்வறிவா யன்றிசுகம்
ஏனுனக்கிங் கைய மிதில். ௫௬

அறிவா தலினு லனைத்துயிரு மின்பஞ்
செறியுலகை யன்றித் தெரியா - பிறிதாகக்
காணளவுந் தானாகக் காணிற் சுகந்தானும்
காணுமோ துன்பமிதிற் காண். ௫௭

உலகுசுக மென்றளவு மோயாத் துயரே
உலகமுயிர்க் கன்னியமா யொன்றில் - பலகற்றும்
அன்னியமா நில்லாதே யாராயிற் சோதனையால்
தன்னுருவாக் காணுஞ் சகம். ௫௮

தெரிவன்றி யென்னைத் தினந்தேடி னாலும்
தெரிவன்றிக் கண்டிலன்யான் றிண்ணம் - தெரிவொன்றே
மெய்மெய்மெய் யெவ்விதத்து மெய்யலதை நானெனலோ
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய். ௫௯

கோசமைந்து நானென்றுக் கொள்ளப் படுவதெவன்
நாசஞ் சடர்துக்க நண்ணுமே - யேசுமிவற்
றுலறிவை யானெனற்கிங் கையமிலே யென்சொலினும்
சாலப் படித்தார்க்குந் தான். சுo

அசத்துசட துக்கமதே யாமைந்து கோசம்
அசத்தலவென் றார்க்கேனு மாமோ - நிசத்திலே
நாட்டமுற்றிங் கொவ்வொன்று ஞாயத்தா லாராயின்
சேட்டித்து நிற்றலுண்மை சித்து. சுக

நானறிவன் றென்கைக்கு ஞாயமிலே யுண்டாயின்
நானறியச் சொல்லவலார் நான்காணேன் - ஊனமின்றிப்
பொய்யல்ல வெவ்விதத்தும் போதமே யானென்னல்
மெய்மெய்மெய் மெய்மெய்மெய் மெய். சுஉ

நனவு நினேவோடே நண்ணுங் கனவுங்
கனவறிவின் லேசமதாக் காணும் - இனேயவல
அவ்வறிவை யன்றியிலே யாயுங்கா ணமெனலும்
இவ்வகைய தாலேக மே. சுங

என்னனவு வென்னினேவு வென்கனவு வென்மறதி
என்ன விவகரிப்பா லேகமே - யின்னமுங்கேள்
யாமறிவன் றேலிங்ங னெவ்வாறு கொள்ளுதும்யாம்
தாமதமே னேற்கவிதைத் தான். சுச

விருப்பு வெறுப்போடே மேவுசுக துக்கம்
உரித்துநமக் கன்றே வுணர்வே - தெரித்தநாம்

தோன்றி மறையிவைபோற் றோன்றி மறைகிலம்யாம்
சான்றுநமை யன்றியுண்டோ தான். சரு

வால குமார வயோதிகமென் றிம்மூன்றும்
சாலவுநா மாயிடினுஞ் சான்றுவோம் - மேலுணர்வே
யாமெனற்கிங் கையமிலே யாமாய்த லின்றேனும்
நீமனனஞ் செய்துய்வாய் நின்று. சசு

மூன்றவத்தை தம்மோடே மூன்றவத்தாக் காட்சிகளும்
ஊன்றிநின் றுங்காங்கே யோர்ந்துமல - சான்றுநாம்
என்னு மனுபவத்தா லேகமெனற் கையமிலே
இன்னு மறைகுதும்யா மிங்கு. சஎ

இப்பிறவி முன்பின் னிருப்பதற்கிங் கையமிலே
யிப்பிறவி நாமென் றிராததினல் - இப்பிறப்பிற்
கேவலத்தி லெல்லாங் கிடக்காம லெங்கொழிந்தோம்
ஓவலின்றி நிற்ப முணர்ந்து. சஅ

அவத்தைதொறு மங்கங் கதுவதுவா நிற்பம்
அவத்தைமுன்பின் னப்போ தறியோம் - அவத்தையோ
முன்பின் னறிவதெங்ஙன் மூடவா தத்தாலே
முன்பின் பிறப்பிலேயோ மொய்த்து. சகூ

நாமுடலன் றுயிருக்க நாமுடலா நிற்பதனல்
நாமுன்பின் சென்மத்தை நாடலெவன் - ஆமிதனற்
சென்மமிலே யென்றதெவன் சித்துநா மில்லமோ
உன்மனதி லாய்ந்துணர்தி யுற்று. எ0

எங்கே செகத்தோற்ற மெங்கே யொடுக்கநிதம்
அங்கேநின் றேதுதியே, லாகுமே - சங்கையிலாத்
தீர்ப்பதுநா மென்றே திடங்கொண்டு நிற்றியினிப்
பார்க்கா துலகைப் பரிந்து. எக

மூன்றவத்தைக் காதார மூதறிவே மூன்றுகா
சான்றெப் பிறவிக்குஞ் சாற்றறிவே - யூன்றி
உணருங்கா லெப்போது முள்ளதே காலம்
அணிவர் தறிவென் றறி. எஉ

அறிவுதனைச் சார்ந்தங் ககலு மனந்த
பிறவியறி வாகாது பேசில் - அறிவிதனுற்
காலங் கடந்ததெனல் கண்டோ மயலில்லை
சாலப் படித்தார்க்குந் தான். எஙு

தன்னை யயலாகத் தானறித ருனென்று
தன்னைத்தா னுயறித ருனென்று - முன்னையது
அப்போதப் போதறியு மாபாசம் பின்னையதோ,
எப்போது மேயறியு மே. எச

அகம்புறத்திற் காணிவ் வறிவிவ்வா றின்றும்
புகலேல் புறநாட்டம் புக்கு - மிகுமறிவை
முன்பின் னிலதாக மூதறிவே சத்தாகும்
என்கொலோ வையமினும். எரு

ஸ்மரணையுன்றி யெவ்விடமுஞ் சாற்றக் கிடையா
ஸ்மரணையே யெங்கிலக்குஞ் சார்வாம் - ஸ்மரணைக்குத்

தேசபரிச் சேதஞ் சிறிதுமிலை யுற்றுணரில்
எசுதற்கிங் கில்லை யிடம். எசு

அந்தர்முக நாட்டத் தறிவகண்ட மாவிளங்கும்
வந்த வுடலளவா மற்றையர்க்குச் - சந்ததமுந்
தேசபரிச் சேதமிலை சிந்திக்கி லிவ்வறிவுக்
காசடைவ ரேலாத வர். எஎ

ஆர்க்காகு மாகா தறிவெங்குங் காணேமே
ஆர்க்குஞ் சுயவ்டிவீ தாதலினாற் - பேர்த்தெவர்க்கும்
வத்துபரிச் சேத மருவா தறிவிதனாற்
சத்திதுபோ வில்லை தனி. எஅ

பரிச்சின்ன மில்லாப் பரஞ்சோதி யீதே
உரித்தெவர்க்கு மல்ல வுணரத் - தரித்துள்ளே
காண்பார்க்கே யன்றிக் கவிஞரே யாயினுமென்
காண்டவமில் லாததிலினாற் காண். எகூ

காரணமுங் காரியமுங் காணே மறிவன்றிக்
காரணமுங் காரியமுங் கற்பிதமே - ஆரணமுஞ்
சொல்லு நெறியிதுவே சோதித் ததுவாகச்
செல்லுமுறை கண்டுநீ செல். அ0

சத்தெனலே யேற்றதுபோற் சந்ததமு மாறின்றிச்
சித்தெனலே யேற்பதெங்ஙன் செப்பெனிலோ - இத்தெரிவே
கற்பிதமு மல்லதுமாய்க் கண்டுணரா நேரமிலை
சிற்சொருபந் தானேதெரி. அக

தன்னையறி யாதெல்லாஞ் சாற்றே மறிவென்னத்
தன்னை யயலாகத் தானறியத் - தன்னைத்தான்
காணு வுகையுண்டோ கண்டார் பணிபூண்டு
காணுதார் குற்றமே காண். அ௨

தன்னை யயலாக்கித் தான்காண்ட றன்னலே
தன்னைத்தா னுள்ளபடி தான்காண்ட - றன்னதன்று
சித்துருவந் தானே சிறிதுமிதி லையமில்லை
எத்திசையு மில்லாம லே. அ௩

சத்துசித் தேற்றதுபோ ருனின்ப மென்பதையும்
ஒத்துத் தெரித்திடுனி லோதுதும்யாம் - பித்தகலத்
தானயலா நிற்பளவுந் தன்னின்ப மன்னியமாம்
தானுண்மை யாகிலின்பந் தான். அ௪

அறிவன்றி யுண்டே லயலெதுவு மின்பம்
அறிவன்றி யுண்டென்ன லாகும் - அறிவன்றி
யில்லையெனி லின்றென்ப மிந்நெறியா லின்பமதே
வல்லையோ நீமறுக்க வந்து. அ௫

சுகவடிவ மெல்லாஞ் சுகசா தனங்காண்
சுகவடிவஞ் சித்தே சுயம்பிங் - ககமமதை
யற்றறிவா னுருக் கறிவே சுகபோகம்
மற்றையருக் கேதிவ் வகை. அ௬

சுயவறிவுக் கில்லை சுசாதியாதி மூன்றும்
வியந்தறிவ தெங்ஙனெனின் மேலே - நயந்ததுகேள்

சித்துருவ மல்லாத சிவேச ரின்றிதனூற்
சித்தைப்போ வில்லையொரு சித்து. அஎ

கடபேதத் தாலே கடவிண் பலவேல்
உடல்பேதத் தாலே யுயிருந் - திடம்பெறவே
பற்பலவா மென்பம் படாதேற் படாதிதுவும்
சற்பனைநாட் டந்தவிர்ந்தக் கால். அஅ

தேகபோக கன்மமொடு தேகாபி மானமதா
லேகமல வெவ்வுயிர்க்கு மென்றிடிலோ - ஏகமே
உண்மையுயிர் நாட்டத் துபாதிநாட் டத்தனந்தம்
உண்மையெது கண்டுநில் லோர்ந்து. அகூ

சுசாதிகந்தா னிக்கணமே சோதிக்கி லில்லை
விசாதிகமோ விவ்வுலகம் வேறும் - விசாதிகந்தான்
எவ்வா றிலையென்னி லெங்கு மறிவன்றி
எவ்வாறெங் குண்டா மிது. கூo

அன்னியந்தா னுதலினு லாகா விசாதிகமும்
தன்னுளே சர்வமெனிற் றுனன்றி - அன்னியந்தான்
இல்லா தொளிர்வதினு லின்றே சுகதமுந்தான்
நல்லாய் சுகமெதுவோ நாடு. கூக

அறிவின்ப மாயி னயலின்ப மாக
அறிவே னலைவதெனி னந்தோ - பிறிதர்கத்
தன்னை யறிவதினுற் றுனறிவ தாவிளங்கிற்
பின்னைசுகம் வேறே பிழை. கூஉ

நாமே யறிவாகி ஞஞ்சச்சி தானந்தம்
நாமே யசத்தாதி நாமயங்கில் - நாமாரென்
றுன்னும் விசார மொழியாது நிற்றியேல்
தன்னந் தனியாவை தான். கூரு

சிதாகாச மன்றியிலே சிந்தையெனில் யாதும்
சிதாகாச மன்றியுண்டாய்ச் செப்போம் - சிதாகாசத்
துண்மைநிலை நாட்டத் தொழியாது நிற்றியேல்
உண்மையதா யாது முறு. கூச

இதையன்றி யுஞ்சிந்தை யெங்கேகா ணென்னப்
பதையாது நின்றுற்றுப் பார்க்க - எதையுந்தான்
காணேன் வெளியன்றிக் கண்ட வெளியிருளாக்
காணுதே னென்னிலிதைக் காண். கூரு

வெளியுலகாக் காணின் வெளியிருளாத் தோன்றும்
வெளியை வெளியாக மெய்யாத் - தெளிந்துணர்ந்து
காணிற் சதாகாலங் காணு திருளெங்குங்
காணுஞ் சுயஞ்சோதி காண். கூசா

இதுவேநஞ் சொந்தவுரு வீதன்றிக் காணேம்
இதுவே சுருதியுத்திக் கேற்றல் - புதியதல
என்றும் பழமையதே யீதாக நீபழகில்
என்றுங் கவலை யிலே. கூஎ

பந்தமுத்திக் கேது பகரசுத்த சுத்தகுணம்
சந்ததமு நிற்குமிடஞ் சைதன்யம் - இந்தவறி

வல்லா வுயிரிலையா லாயாது நிற்பதெவன்
வல்லா யிதிலென் மயல். ௯அ

உடலிலக்காற் றுன்ப முணர்விலக்கா வின்பம்
உடல்கற் பனையதனு லுண்மை - திடம்பெறவே
மூன்றுடலைக் காணுது மூன்றுடலா நிற்பதறி
வூன்றியதைக் கண்டிங் கொளிர். ௯௯

உடலிலக்கு மூன்று மொருங்கே யொழிக்கத்
திடவுணர்வு தானே திகழும் - இடமில்லை
ஐயமுறற் காதலினு லாய்ந்துணர்ந்து நிற்றியேல்
பைய வகலும் பயம். க00

உடலெடுத்த துண்டிங் குறங்கற்கே யென்பர்
உடலன்றித் தன்னை யுணரார் - மடந்தீர்ந்தார்
சித்துருவா தற்கென்பர் சித்துண்மை யாதலினுல்
எத்துயரு மில்லாம லே. க0க

அறிவன்றி நானெனற்கிங் கையமிலா வஸ்து
பிறிதில்லை யெங்குமெனிற் பேசா - தறிவரில்
சொந்தநான் சொந்தவுடல் சொந்தசுகம் வேறில்லை
இந்தநெறி போலெங்கு மில். க0உ

ஆரோடார் சொல்வதெதை யன்னியமா நிற்பதெங்கே
தேரா ருரையன்றோ தேருங்கால் - தேரார்க்கிங்
கன்னியமாச் சொல்லி யறிவாக்க வேண்டுவதால்
நன்னயமாஞ் சொன்னதுவு நாடு. க0ரு

தேகநோய் மூனத்நோய் செப்புங்கால் மும்மூன்றுந்
தேகநோய் வாதமுதல், தீராநோய் - சோகமன
நோய்முயலோ டையம் நுவலுந் திரிபிவையேன்
மூய்வுறு மில்லை வலிந்து. ௧0௪

சிதம்பரமே சீவன் சிதம்பரமே யீசன்
சிதம்பரமே யெவ்வுலகந் தேரில் - சிதம்பரமோ
சிற்சோதி வெற்றவெளி தீர்வையிதி லையமில்லை
கற்பிதமே மாறுக்கில் காண் ௧0௫

சிந்திக்குஞ் சிந்தை சிதம்பரமே யெவ்வுயிர்க்குஞ்
சிந்தித்துப் பார்க்கிற் றெரியுமே - யிந்தநிலை
கண்டிருக்கி லெம்மயலுங் கட்டறுவ தையமிலை
உண்டுகொலோ விந்நெறிபோ லோது. ௧0௬

சிதம்பரமே நானெனற்குச் செம்பொருளாத் தேரில்
சிதம்பரந்தா னுமளவுஞ் சிந்தித் - திதமகிதம்
உள்ளபோ தெல்லா முணர்வுருவாத் தற்காணில்,
எள்ளளவுங் காணு,திவை. ௧0௭

உடலன்றிக் காணு யொருவரையு மெங்கும்
உடலலவே யெவ்வுயிரு மோராய் - உடலன்றி
யுன்னை நீ கண்டிலதா லோர்வதெதி லீதொழியில்
என்னபிறப் பாமோ வினி. ௧0௮

பொய்யிதென்று,காணப் புகன்றதசத் தாதியெனல்
மெய்யிதென்று காண விளம்பியதிங் - கையமறச்

சத்தாதி யாகுஞ் சதசத்தும் மித்தையதே
எத்தானு மெத்தடையு மில். கOசூ

அறிவேமெய் யாகு மறிவனபொய் யாகும்
அறிவோ தனையறிவ தாகும் - அறிவனவோ
அன்னியஞ்சீ வாதியென லாய்ந்துணரார்க் கெங்கனுந்தான்
என்னுண்டு துன்பமன்றி யில். ககO

பொய்யைமெய் யென்றறிவார் பொய்யாக மெய்யறிவார்
பொய்யைப்பொய் யென்றகற்றிப் போதமுடன் - மெய்யை
யென்றுணர்ந்து நிற்க விதைவகுத்த தென்றுணர்க. [மெய்
என்று மொருதசையா ரிங்கு. ககக

சத்தாதி யைந்திற்குந் தக்கதறி வாமுடியும்
பித்தாகு மற்றதற்குப் பேசுங்கால் - எத்தானும்
தன்னைத்தா னுள்ளபடி சந்ததங்கா ணப்பயில்வார்க்
கின்னதே தீர்வென் றிரு. ககஉ

அறிவின் மயக்கமதே யன்னியம்வே றின்றால்
அறிவே யறியாமை யாகும் - அறிவுணர்ந்துஞ்
சத்தாதி யைந்துகுணந் தானே யசத்தாதி
வித்தாதற் கில்லைநெறி வேறு. ககங

சத்தே யசத்தாகுந் தானே குணியதனால்
சத்துக்கு வேறன்று சந்ததமும் - யுத்திக்கு
மாறன்று சிந்திக்கில் வத்துநிலை யாய்வார்க்குத்
தேறின்று சந்தேகந் தீர்ந்து. ககச

சத்தே யசத்தன்றேற் சத்தியம்போற் றோற்றுது
சித்தே சடமன்றேற் சித்துப்போ - லெத்திறத்துந்
தோற்றுப் பிரியமே துன்பமன்றே லின்பம்போற்
றோற்றுமோ வென்னே துணிவு. ககரு

தானேமெய் பொய்யதாத் தானலவாக் காணறிவு
தானேதென் றுய்ந்ததுவாத் தானுகில் - வானுதி
கற்பனைசின் மாத்திரமாக் கண்டொன் றிரண்டற்று
நிற்பதுவே தீர்ந்த நிலே. ககசு

என்றளவி லுண்மையுதித் தெங்குஞ் சுகவடிவாய்
நின்றடியில் வீழ்ந்தேத்தி நின்மலமாய் - அன்றுங்கே
நிர்விகற்ப மாயினு னோர்ந்திதனைத் தானுணர்ந்தார்
நிர்விகற்ப மாவார் நிறைந்து. ககஎ

---

வஸ்துபரிசோதனு விளக்கம் முற்றிற்று,

படலம் ககூ-க்கு ஆ கவி க00௫.

திருச்சிற்றம்பலம்.

# தத்துவ விளக்கம்.



அங்கொருவன் வந்தவர்பா லையனே யென்றேத்தி
யங்கலிங்க மென்பவெலா மாய்ந்துணர்ந்தும் - இங்கெவருக்
கின்பதுன்ப மென்றறியே னீதுணர்த்தி யென்றடியில்
அன்புடன்வீழ்ந் தேயெழுந்தா னங்கு. க

தேகநா னென்றளவுந் தேகத்துக் கென்றுரைப்பந்
தேகஞ் சடமென்னிற் செப்பலே - தேகமன்றி
யுண்டோ வனுபவந்தா னாகத்துக் கொத்திலதேற்
கண்டதுண்டோ வொத்துணர்ந்துங் காண். உ

காணுமற் போயிடினுங் கைக்குமல மூட்டையன்றோ
வீணா வீண்வசனம் வேறுண்டோ - காணுய்நீ
இவ்வுடலை யன்றியென வீதோர் முதலன்றேல்
எவ்விதத்தும் பேச்சன்றி யில். ௩

குடும்பையுட லென்னிற் குறுகிற்றோ பாவம்
இடும்பையே யென்னி லிலையே - நெடும்போது
வந்தபோ தன்றி வராதிருக்கிற் சம்மதமாம்
இந்தமொழி விட்டிங் கிசை. ௪

எந்நாளு நாமெனினு மீதுநமக் கன்னியமேல்
அன்னியமா காதிருக்கி லாகுமோ - தன்னால்
அறியப் படுவதெனி லாமோ வறியில்
நெறியாகு மென்னி னினே. ௫

பொறிகரணஞ் சீவன் புகன்றமுத லாமே
அறிவதனு லன்னியத்தை யந்தோ - வறிதாகும்
சொல்லாலிங் காய்வதினுஞ் சோதிக்கி னிட்டைதனில்
எல்லாஞ்வர் தெய்து மிதில். ௬

என்றளவில் வீழ்ந்தருளென் றேத்தியபின் கண்மூடி
யின்றுளத்தி னின்வடிவை யீங்குற்று - நின்றிருந்திங்
கெவ்வண்ண மாவதனை யீங்குணர்த்து கென்னவவன்
அவ்வண்ணங் கண்டறைவா னங்கு. ௭

தூலவுரு நானுகத் தோற்றுதெனின் மாறுது
சாலவதைக் கண்டிருந்து சாற்றெனவே - தூலவுரு
மெல்லக் கரைவதெனின் மேலெவ்வா றுகுதென
மெல்லவெளி யென்றான் விழைந்து. ௮

அவ்வா றிருந்தப்பா லாகுநிலை சொல்லென்ன
ஒவ்வாச் சிதானந்த மோங்கிற்றே - யிவ்வாறென்
றென்னையறி யேனப்பா லேதோன்றுங் கண்டறியேன்
உன்னரிய மோன முறும். ௯

என்றவனை நோக்கி யிதுநானங் கில்லாதென்
னன்றறிவா யின்றுடலா யாயினேன் - நன்றேகாண்

ஆனவவ னாரென்ன வன்றே னசைவறநின்
றானபின் சொல்வா னதை. ௧0

ஒன்றுமல னன்றல்ல னுற்றுணரி னானென்றான்
என்றவனீ யாயதேவ னிவ்வுடலாய் - நன்றாக
இம்முறைநீ யோதென்ன வெற்கிங் கரிதென்றான்
எம்முறையால் கேட்டா யெனே. ௧௧

ஸ்மரணையன்றி யெங்குஞ் சகத்திருப்புக் காணேன்
ஸ்மரணைக்கே யின்பதுன்பஞ் சாரும் - ஸ்மரணைதான்
முந்நீர்த் துளிபோலு முற்றுமாய் நின்றறிவில்
என்னீர்மை சொல்வதேவ னிங்கு. ௧௨

சகத்துருவ மாயில் ஸ்மரணையன்றி யில்லை
மிகப்படித்து மண்டாதார் மேலோர் - தகைத்தென்னை
ஞானி கடைநாட்ட நண்ணினார்க் கேதில்லை
யானகன்றே னையமெலா மிங்கு. ௧௩

அறிவான போதில்லை யாமின்ப துன்பம்
பிறிதான போதுண்டு பேதம் - அறிவாரோ
நின்னருட்கு வேறானார் நின்மலனே யென்றிறைஞ்சி
உன்னலுன் னாமையில னுற்று. ௧௪

நெடுநேர மிவ்வாறு நின்று விழித்துப்
படியில் விழுந்து பணிந்திங் - கடியேனுக்
கின்னு மொருகுறையுண் டதகற்று வாயென்ன
அன்னதுயா தென்றாரவர். ௧௫

விழிப்புறக்கம் யாதென்ன மேலா நிலையைப்
பழிப்பின்றி நீயடைந்தும் பாராய் - விழிப்புறக்கம்
நின்பாலு முண்டதனு னீயே யுரையென்றூர்
அன்போடு நின்றறைவா னங்கு. கசு

ஏதைப்பொருளாக் காண்ட லெதையாஞ் சுகித்தல்
எதுவும் பொருளலவே யெங்கும் - அததுவும்
ஆராய்ச்சிக் கண்ணே யபாவமாப் போவதினுல்
ஆராய்ச்சி யேதக்க தாம். கஎ

சின்னத்தைப் பற்றியவிச் சின்னமுற்ற தாதலினுல்
உன்னலம்யா மிவ்விரண்டு மோர்பொருளா-இன்னவற்றைக்
காணறிவே யுண்மையதைக் கண்டதுவா னுறக்கங்
காணலில்லை யென்றுணர்ந்தேன் கண்டு. கஅ

ஸ்மரணையன்றியில்லை சகத்தெனத் தேர்ந்தும்
ஸ்மரணைதனை நாடாதார் சற்றும் - ஸ்மரணைக்கு
வேறுசக மென்னுமயல் விட்டொழிவ தெங்ஙனிலை
நீறுசடை தாழுயதா நின்று. கக

சந்தேக மற்றூர் ஸ்மரணைநாட் டத்தென்றும்
சந்தேகங் கொள்ளார் சகமசத்தில் - அந்தோ
அறியா ரிதனை யயலாகக் கொண்டு
வெறிவிடயந் தாண்டார் மிகுந்து. உ0

அறிவிலே தோன்றி யறிவில் விளங்கி
அறிவில் மறையு மனைத்தும் - அறிவன்றி

யில்லையெனக் காண்போர்க்கே யில்லை விழிப்புறக்கம்
இல்லையோ வேனையருக் கிங்கு. உக

அறிவனவே மெய்யென் றகம்பாவ முற்ருர்
அறிபவற்றை யன்றி யறியார் - அறிவனவே
தோற்ற னனவாஞ் சுழுத்தியவை தோற்ருமை
மாற்றியிவை வேறென்பர் மற்று. உஉ

அறிவே சடசித்தா யாங்காங்கு தோன்றும்
அறிவசதி யேயுறக்க மாகும் - அறிபவற்றைச்
சத்தென்பார்க் கேயவத்தை சத்துக்கட் கேதவத்தை
எத்திறத்து மென்றிறைஞ்சி யிங்கு. உஙு

அறிவாகி நின்ருனு மையோ வுலக
வெறிதா னடிக்கடிக்கு மேவா - துறுதியாய்
நிற்க வருள்புரிக நின்மலனே யென்றேத்த
அற்புதனின் றீதுரைப்பா னங்கு. உச

எப்பொருளு மெங்கெங்கே யெத்தன்மைத் தாயிடினும்
அப்பொருளைச் சோதனைசெய் தாங்காங்கே - மெய்ப்பொருளாக்
காண்ப தறிவெனலைக் கற்றுமுண ராதெவன்கொல்
மாண்புடையோ யென்ன மகன். உரு

தோல்முடி யாவுயிர்க டோற்றுதற்கென் செய்வனெனில்
தோல்முடி பூதமதாஞ் சோதனையில் - சார்புணர்ந்தோய்
அல்லவல்ல வென்றே யறிவாகு மட்டெவையு
மெல்லமெல்ல வாய்ந்துநிற்றல் வீடு. உசா

காரணமுங் காரியமுங் காணுமற் போமளவும்
ஆரணத்துக் கொத்த வனுபவத்தாற் - பூரணத்தை
விட்டகலா தேயிருக்கில் வேற்றுமையெல் லாமதுவாங்
கட்டந் தராதெதுவோ காண். உ௭

ஒய்யாது தோற்றிடினு மோயா திதுசெய்க
மாயா மயலெல்லா மாண்டிடுமே - நீயேகாண்
என்ன வவனு மிறைஞ்சிப் புகன்றிட்டான்
இன்னு மொருகுறையுண் டென்று. உ௮

உண்மைபோற் றோற்று முலக மறிவாக
உண்மையாக் காணுதென் னுத்திபோல் - உண்மையாக்
காண்பதறி வுக்கன்றோ கண்டிருக்கி லவ்வறிவைக்
காண்பதெங்ங னிவ்வுலகங் காண். உ௯

அதுவு மரிதே லகன்றவெளி யன்றி
எதுவுமிலை யென்றபடி யிங்கே - அதுவதுவா
யாகாது நிற்றி யறிவாய விளங்குவைபின்
போகா மயலெதுவும் போய். ௩0

அரிதே லிதுவு மவத்தை யிரண்டுந்
திரிவதனுற் சாயாது சிந்தித் - தொருவசத்தும்
நிற்றிவிளங் காதெனினு நின்றவுழப் பேன்பொய்க்கும்
பற்றறப் பற்றும் பரம். ௩௧

ஆகா தெனிலிதுவு மவ்வவ் வுருவுமயம்
ஆகாது சோதிக்க வாங்காங்கே - மோகாதி

நிற்குமட்டு மொவ்வொன்று நீங்கா ததைவிட்டுச்
சற்குணனே யெவ்விதத்துந் தான். ௩௨

பொற்பணியெல்லாமுருக்கிற்பொன்னன்றிமண்ணுமோ
கற்பிதமெல் லாமுருக்கிற் கல்லாமோ - சிற்சொரூபம்
அன்றித் தனித்திங் கறிந்திடுக வெப்பற்றும்
இன்றிப் புறங்காட்ட வின்று. ௩௩

சேறுநீ ரும்போலுஞ் சிந்தைசக சம்பந்தம்
தேறவிக்குந் தொட்டையெனத் தேறுதற்கு - மாறின்றிக்
கண்டிடுக நின்னுளத்தைக் காண்பவன்போல்வான்மீனை
விண்டைய நீங்க விரைந்து. ௩௪

காமக் குரோதக் கலகமுருத் தோற்றத்தில்
ஆமென் றுணர்தற்கிங் கையமிலை - தாமதமின்
றெவ்வுருவும் பொய்செய்க வீதே யவைகொல்லும்
இவ்வுபா யத்தையன்றி யில். ௩௫

திரிபுடியுண் ஞானத்தைச் சிந்தித் திடுக
ஒருகற் பனையுமின்றி யொன்றாய்த் - திரிபின்றி
நிற்குநிலை வாய்க்குமதா னிர்விகற்புக் காசிக்கில்
கற்குநிலை வேறில்லை காண். ௩௬

உடலாளாக் கற்றுணர்ந்த வூனக்கண் போக்கி
உடலவனீ நானென் றுணரும் - திடமதையும்
போக்கி யுணர்வுருவாப் புந்திதனிற் கண்டுணர்க
நீக்கமின்றித் தானவை நீ. ௩௭

என்று மொருபடித்தா யெவ்விகற்ப மற்றதுவாய்
நின்று விழிதுயிலி னீங்காது - ஒன்றாகில்

சிந்தையப் நூணந் திகிலேய மாறுதல்
எந்தவிதத் தும்மில்லே யே. ௩அ

கற்பனேகள் விட்டொழிதல் கற்பனேக டானுதல்
அற்புதத்தி லாசைகொள லாங்கொழிதல் - சிற்சொரூபந்
தானுக லன்றுதல் சந்ததமுங் கண்டுணர்க
தானேதா னுதற்குத் தான். ௩௯

ஏதேது கண்டாலு மேதேது வந்தாலும்
ஏதேது பந்தத் திருந்தாலும் - ஏதேதுந்
தானுகா வண்ணந் தனித்திருக்கக் கண்டுணர்க
ஞானுகா ரத்தா னன்கு. ௪0

புத்தி விகற்பமதே பொய்மாயை யென்பதினுற்
புத்தி விகற்பமதைப் போக்கிடுக - சித்தங்
கலங்காமை தந்து கரையின்றி யின்பந்
துலங்குவதற் கையமெவன் சொல். ௪௧

எதிலுங் களிக்கா திருந்தறிவா நின்று
பதியாதி சோதித்துப் பார்த்திங் - கதுவதுவாய்
ஆகாது நிற்றி யதுவேகாண் முத்திநிலே
மோகாதி போக்கு முடிவு. ௪௨

இவ்வண்ணஞ் சொல்லவவ னேத்தி யடிவணங்கி
அவ்வவ் வனுபவத்தை யாங்காங்கே - செவ்விதாக்
காட்டினுய் கைம்மாறு கண்டிலனென் றேகித்தன்
னாட்டமதி னின்றிட்டா னன்கு. ௪௩

---

தத்துவவிளக்கம் முற்றிற்று.

படலம் ௧௭ - க்கு ஆக கவி ௧0௪௮.

உ

திருச்சிற்றம்பலம்.

# அத்துவிதவிளக்கம்.

---

வத்துபரி சோதனையான் மாயை தவிர்த்தாற்போல்
அத்துவிதத் துண்மை யறிவித்திங் - கெத்தடையும்
இன்றி யிலக விறையே யருள்புரிக
வென்றா னொருவ னிறைஞ்சி. க

துவிதமிஃ தென்றுணர்த்தித் தூய நிலையத்
துவிதமிஃ தென்றுணரச் சொல்வம் - துவிதமதோ
ஞெப்திப் பிரியமென னீங்கு மவத்தையிலே
ஞெப்தியாய்க் கேட்டிடுக நின்று. உ

ஞெப்திமய மன்றி நிகழுஞ் சகலமிலை
ஞெப்திமய மன்றென்பார் கில்லாரே - சப்தமாய்
வாதித்து மின்ப மயங்கே வலமாகும்
நீதிக்கு மாறென் னினை. ௩

அறிவோடிங் கானந்த மாமிரண்டு கூறும்
அறிவுசுக மொன்றாகா தாகில் - நெறிமாறி
யீரவத்தை யொன்றா யிருக்கு மனுபவமே
தோருதியுன் னுள்ளே புணர்ந்து. ச

அறிவிழப்பே யானந்த மானந்தப் போக்கே
யறிவுநிதங் காண்பை யகலா - திறையேனு
மிவ்விரண்டை யன்றி யிருக்கவிடங் கண்டிலம்யாம்
எவ்வுயிர்க்கு மெப்போது மே. ரு

விழிப்புறக்கந் தம்முட்டா மேவில் கலப்பேல்
பழிப்பி லவையும் பகர்வம் - வழுக்கியே
சின்னமவிச் சின்னந் திரிவிலதாற் றம்முட்டாம்
இன்னதனு லொன்றன் றிவை. சா

அறிவுதனி லான்ந்த மானந்தந் தன்னில்
அறிவிலதா லேகமென லாகா - துறுதியாய்
இத்துவித மெங்ங ணிறந்தொளிருஞ் சொல்லேயாம்
அத்துவித மென்ப தறி. எ

அருந்தல் பொருந்த லலைச்ச லறிவில்
இருந்தாறல் கேவலத்த தின்பில் - தெரிந்திலைகொல்
சும்மா விருத்தலெனல் சொல்லளவே யன்றியிலை
எம்மாலென் சொல்வோ மினி. அ

அறிவன்றிச் சாக்கிரமு மானந்த மன்றி
வெறிகே வலமுமின்றால் வேறாய் - உறுதியாய்
உள்ள தறி வானந்த மொன்றாகா தெந்நாளும்
தள்ளா ரெவருமிந்தத் தான். கூ

இவ்விரண்டை யன்றி யெதைத்துவித மென்றிடினும்
அவ்வவற்றிற் கானி யணுகுமே - எவ்விதத்துங்

கற்பிதமே யாதலினுற் காணுது நீமயங்கேல்
அற்பரைப்போ லுண்மை யறி. க0

இன்னபொரு ளென்றறியா ரீசனுயி ரென்றுரைப்பர்
அன்னவர்க்கு மாதார மாகுமே - சொன்ன
அறிவானந் தத்துவித மாய்ந்திவற்றைக் காணில்
வெறியெல்லாம் போகும் விரைந்து. கக

அறிவின்பப் போலி யறிவின்ப மென்று
துறுதியா யுண்மைதனை யோரில் - அறிவின்பம்
இன்னதெனக் காண்பை யிதுவே யறியுநெறி
இன்னதற்கு மாறென் னிசை. கஉ

இதுவே துவித மிதைமறுப்ப தெங்ஙன்
விதியேது மில்லை விவர்த்தம் - மதியாலே
சொல்வதெலா மென்னத் துவிதத்தை நாட்டவே
கல்வியெலாங் கெட்டான் கரைந்து. கங

ஐயாவென் றேத்தி யடிபணிந்திங் கித்துவிதத்
துய்யும்வகை கண்டிலன்யா னேயாது - மெய்யாய்
நிலைபிறழ்வா லொன்று நிறுத்துகெனக் கேட்கத்
தலையிட்டார் சொல்லத் தனித்து. கச

யானெனினு மல்லவற்றை யானன்றுப் போவதினுல்
நானென்ப தின்னதென நாடளவும் - ஏனென்றும்
இத்துவிதங் கண்டிலைகொ லென்ன வவனுந்தான்
மெத்தவிசா ரங்கொண்டு மேல். கரு

நானென்று ரெங்குமிலை நானென்ப தேதுமல
நானறிவ தாத்திர நானுணர்ந்தேன் - நானறியுந்
தத்துவும்போ லன்றதனுற் சங்கற்ப மற்றவுரு
சத்துசித் தானந்தந் தான். கசா

சுருதியுத்தி யாலே துணிந்தே னறிவின்
பிரதிபிம்ப நானென்று பின்னுந் - தெரிகிலன்யான்
கண்டு களிக்கவதைக் காட்டவலார் நின்னையன்றித்
தொண்டனையா னென்றுன் றெழுது. கஎ

அறிவன்றி நானென்ன லன்னியமே யின்பம்
அறிவன்றி வேறென்ன லாகும் - அறிவன்று
அன்னியத்தை நானெனலா லவ்வாறிங் காவதெது
அன்னியமு மன்றே லறை. கஅ

வழக்குமயம் வேதாந்த மாண்டவிடத் தின்பம்
வழக்கின்றி நம்பல் மயக்கங் - குழகுழப்பாம்
மற்றையசித் தாந்தமெலா மாளாத் துயர்விளைவே
கற்றுணர்ந்து மோர்வதிலை காண். ககூ

எந்தநா னுந்தா னிலையே யறிவன்றி
எந்தவிதத் தாய்ந்திடினு மெவ்வெவருஞ் - சந்ததமும்
தானல்ல வல்லவெனத் தானாக நிற்பதிது
மோனமதாக் காட்டு முடிவு. உ0

அறிவுதனு வாவளவு மன்னியமே யின்பம்
அறிவோனா னுயிடிலங் கப்பால் - அறிவின்பம்

என்னுந் துவித மிறந்தொளிரு நானெனலை
யுன்னுமுறை கண்டிங் குணர். உக

அறிவின்ப மேகமே யன்னியமாக் காணும்
பிறிதுநா னென்றளவும் பின்னும் - அறிவேநான்
இப்பிறவி நானன்று யிங்ககறல் போலுமே
எப்பிறவி தானு மிசை. உஉ

அறிவே பிறப்புற் றவைநானென் றோர்ந்தும்
அறிவன்றுப் போவதினு லந்தோ - அறிவேநான்
அன்றென்பார் சோதனையா லாபாச மேயுறுவர்
இன்றிதற்கிங் கைய மிலை. உந

அண்டபிண்டம் யாவு மறிவாக் கரைதலினுல்
அண்டபிண்டம் யாவு மறிவுருவே - அண்டபிண்டம்
ஆவதுவே பந்த மழிவதுவே முத்திநெறி
ஆவதழி வல்ல வறிவு. உச

அதுவதுவாத் தோன்றி யதுவதுவன் றாகி
யிதமகித மின்றாகி யெங்கும் - புதியதல
என்றும் பழயதல விவ்வறிவே நானென்னல்
அன்றே யுபாதி யது. உரு

பூதப் பவுதிகமே பூரணமா முட்புறம்பில்
ஏதுக்கு மாகா விவைதோற்றம் - சாதுக்கள்
யானெனதென் றீதெண்ணார் யானெனதென் றுன்னறிவை
யானெனதென் பாரெங்கு மே. உசா

அல்லவற்றை யானெனதென் றுயாது கொள்வானேன்
அல்லவெனத் தள்ளுவதென் னையையோ - தொல்லையே
ஆன்மாக்கள் கஷ்ட மவலமாக் காணுதே
தான்றான் தாகுமட்டுந் தான். உஎ

ஆனதொன்று மில்லை யழிந்ததொன்றுமில்லையெனத்
தானுணர்காட் சித்தெளிவே தானாகும் - ஈனமுரு
தென்று மொருபடித்தா மிவ்வறிவே நானாகில்
அன்றிப் பேத மறும். உஅ

பிரதிபிம்ப நானென்னிற் பேதமையே துன்பம்
திரவறிவு நானாகி றிண்ணம் - பெருவெள்ள
மாநந்த மாத லணுவளவு மையமில்லை
தானறிவா னந்தமென ரூன். உகூ

சகமாதி யுண்டென்று சாற்றலு நாமே
யிகழ்தலு நாமே யில்லையென் - றகமலவே
மூடந் தெளிவளவே முன்பின் னில்லையிரண்டும்
நாடறிவை நானென்ன னன்கு. ௩0

அல்லவற்றை நானெனலு மன்றெனலு மவ்வறிவே
அல்லவே யுண்மையிவை யாரோபம் - மெல்ல
அறிவுருவைக் கண்டிங் கதுவாகி யின்பம்
பிறிதாகா யென்றும் பிறழ்ந்து. ௩க

அறிவன்றி வேறொன் றறியாது நானென்
றுறுதியிதி லையமில்லை யோரில் - அறிவேநான்

என்னுருவை யான்காண வீங்குணர்த்து வாரில்லை
உன்னையன்றி யையா வுவந்து. ௩௨

என்றுபல வாவிரந்திங் கேத்தி யடிவீழ
அன்றே வியாச ரதைவிளக்க - அன்றிழந்து
கற்பனையெல் லாந்தன்னைக் கண்டுவியந் தேயழுநீ
ழற்புதமீ தற்புதம தாம். ௩௩

எனழுவ மென்றாலு மேனோ வழுகைமிகும்
ஏனுவப்ப மென்றாலு மீதுமிகும் - யானறியேன்
அப்பனே ஞான வரசே யெனவணங்கிச்
செப்பினான் சிந்தனையைத் தேர்ந்து. ௩௪

அனுபவமீ தார வறிவுநா னென்றவ்
வனுபவமீ தார வனைத்துந் - தனதுருவ
மாகிமே வீட்டா லனைத்தின்பந் தன்னுருவ
மாகித்தா னானா னவன். ௩௫

சிலநாளவ் வாறிருந்து சென்றிறைதா ளேத்திப்
பலகலைக்கு மெட்டாப் பயனை - உலகிழக்கக்
காட்டினதா லத்துவிதங் கண்டே னினதருளால்
நாட்டுவன்யா னந்நிலையை நன்கு. ௩௬

அறிவுதனக் காதார மானந்த மீதுக்
கறிவதுவே யாதார மாகும் - பிறிதன்றிப்
கானந்த மன்றே லறிவே னலையுமதற்
கானந்த மாகி லறும். ௩௭

அறிவன்றே யின்ப மறிதுயில்வ தேதுக்
கறிவின்ப மேமுத்தி யாகும் - பிறிதென்னிற்
கேவலத்தை முத்தியென்பங் கேவலந்தான் மூடமெனில்
ஆவதது வேமுத்தி யாம். ருஅ

மயக்கந் தெளிவிரண்டா மன்னு மறிவே
மயக்குஞ் செகமுளதா மாறல் - வியக்குந்
தெளிவோ சுயம்பாகத் தேர்தல் தொழிலே
எளிதின் விளங்கா திது. ருகூ

உள்ளமெலாஞ் சிற்சோதி யுள்ளார்க் குலகுமயம்
கொள்ளுவரோ வத்துவிதங் கோதின்றிக் - கள்ளமயக்
கற்றார்போற் காணுகினு மாசாரக் கள்ளரே
சற்றேனு நில்லார் தனி. சo

தன்னைத் தடியுருவாத் தான்காண்பா ரத்துவிதந்
தன்னையெங்ங னேற்றிடுவர் தாம்படித்தும் - தன்னைச்
சுயஞ்சோதி யாக்காணார் தூடிப்ப ரெங்கும்
பயஞ்சற்று மில்லார் பகைத்து. சக

அறிவன்றிச் சீவேச ராயுங்கா லுண்டேல்
உறுமோநா னென்னவவை யுன்னில் - அறிவன்றி
உள்ளதல வென்னி லுபாதியாக் காண்பானேன்
உள்ளது வேறு யுறும். சஉ

உள்ளதை யுள்ளபடி யோயாது கண்டறைவார்
கள்ளத் துவிதமதைக் காணேனே - கள்ளரே

அத்துவிதந் தூடிப்பா ராயா ருபக்கம்
பித்தரென்று லென்னே பிழை. சரு

சமஷ்டி வியஷ்டியலாச் சத்தா மறிவை
சமஷ்டி வியஷ்டியதாய்ச் சாதித் - தமைக்குந்
துவிதந் துவிதமதோ சொல்லளவே யல்ல
ஏவிதத்து மாயினுண்மை யிங்கு. சச

உபாதித் திரிய முயிரே யிறையும்
உபாதித் திரியமதா யோர்தும் - அபாவமெனில்
சித்தெனற்குத் தோடமிலை சித்தாகக் காணிலிலை
எத்துவிதந் தானுமெங்கு மே. சரு

சித்திற் றுவிதமெனிற் சித்தாகக் காணிலிலை
அத்துவித மென்பதற்கிங் கானியிலை - இத்திறத்தைக்
காணாதா ரேனேற்பர் கண்டு மயறவிரார்
வீணா வீணரெனல் மெய். சசு

சொல்லளவா யன்றிச் சுயமா யறிவுதனை
யெல்லையின்றிக் காண்பார்க் கிரண்டுண்டோ - தொல்லை
சகசமெனி லேதுழப்பு தான்றோரார்க் கேன்வாய்
அகமமதை போமோ வதில். சஎ

அறிவாந் தனைத்தள்ளி யற்பமுங் காட்டார்
அறிவரோ வத்துவித மந்தோ - வெறிகொண்டு
வைவதெவ்வன் போதிப்பேன் வத்துநிலை கேட்டறியார்
சைவமத மாதியரே தாம். சஅ

அவத்தைமைய மல்லா வறிவுநா னென்ளுர்
அவத்தையுட ஞனென் றதுவாய் - உவப்பெய்தி
எல்லா முணர்ந்தவர்போ லிங்கிகழ்வ ரத்துவிதம்
நல்லார்போற் காட்டி நடித்து. சகூ

பேறறிவாய்ச் சிற்றறிவாய்ப் பேதமிரண் டாக்காணும்
ஓரறிவே யென்றுணரா ரோதுவரே - யீரறிவென்
றிம்மடையர் சொல்லேற்பா ரென்னமதி யோரென்பம்
எம்மொழியேற் பாரெங்கு மில். ருo

அறிவினிலே கண்டறியா ரானந்த மாகார்
அறிவாகி லானந்த மாவர் - நெறியன்றே
ஏகாத் துவஷிதே யீதறியார் கூறுபிற
ஏகாத் துவிதமதோ விங்கு. ருக

எச்சிலெலா மொன்றதனு லேகமதே முத்தியென்பர்
எச்சில் பொறுக்கிகளுக் கிதுண்டோ - நச்சியகா
மாதி யொழிந்திலதால் வன்பிறவி மாள்வதல
ஏதுக்கு மாகா திது. ருஉ

யோனியெலா மொன்றதனல் யோனிசுக பேதமறல்
ஆனியிலா முத்தியென்ப ராகாதே - ஏனகலும்
முக்குற்றங் கற்பிதத்தால் மோகமதே மீக்கொள்ளும்
இக்கருத்தா லேலோ மிதை. ருந

சாதிபேத மற்ற சமரசமே முத்தியென்பர்
சாதி மனிதனெனல் சாய்கிலேயே - ஓதும்

மிருகாதி கட்குடல்போல் மேவிற்றே பூதம்
சரியன்று முத்தியிது தான். ருச

தன்மதமே யாதல் சமயமெலாம் விட்டொருங்கு
நின்மலமா முத்தியென்பர் நீதியல - தன்மதந்தான்
தேகமன்றி யின்றதனுற் றேகந்தா னல்லவெனில்
ஆகுமுத்தி யென்ப தறும். ருரு

இன்னவெலா மேகமல வீதெல்லாங் கற்பிதமே
தன்னிகரி லத்துவிதந் தானுமோ - நின்னருளா
லெல்லாமா யல்லவுமா யீங்கொளிரும் வத்துநிலை
கல்லாமற் கற்றேன் கரைந்து. ருசா

நினைவெல்லாஞ் சிற்சோதி நீக்கமற நிற்கும்
அனையதாக் காண்ப ரறிஞர் - இனையதற்கு
மாறுகக் காண்பர் மதிமயக்கந் தீராதார்
பேறுகு மோமுத்தி பின். ருஎ

எவ்வுயிருஞ் சிற்சோதி யேகமெனக் காணுமல்
அவ்வவ் வுடலளவா யாங்காங்கே - எவ்வெவருங்
காணினவை வேடமன்றோ கற்று ரெனவெங்கே
ஆணல்லர் பேடி யவர். ருஅ

ஆரோபத் தோடே யபவாத யுத்தியிரண்
டோராதென் காண்டுமோ வுண்மையுரு - தீராத
முக்குற்றந் தீர்ப்பதிது மூடமதத் தில்லையினு
மிக்கதிலை யிவ்வுத்தி மேல். ருகூ

இவ்வுத்தி போரிரண்டா லீங்குணர்ந்தேன் பந்தமுத்தி
எவ்வெவரு முற்றுணர்தற் கீதருமை - செவ்விதாக்
கற்றுணர்ந்துந் தாட்டாந்தங் காணல் மிகவரிது
சற்றுமின்றி யையமது தான். சு0

பேத மபேதமெனப் பேசிரண்டு வாதந்தான்
வேதமெலாஞ் சிக்கறுக்க மேவிற்றே - யீதுமிலை
எம்மதத்து மென்றுணர்ந்தே னெவ்வாறு முத்தியென்பர்
சம்மதமு நாக்கார்க டாம். சுக

நம்பிக்கை யாலன்றி ஞாயமதா னுட்டறியார்
வம்பரெனற் கானி மருவுமோ - தொம்பதமீ
தென்றுணரார் ஞானியென்ப ரீதெல்லா மூடமதம்
இன்றிதற்கிங் கைய மிலை. சுஉ

அறிவொன்றே யுண்மை யனைத்துமல வென்னல்
அறிவுருவந் தானுதற் கன்றே - பிறிதலவே
மூட ரிகழ்வதெவன் முற்றுணர்ந்தார் போனினைந்து
நாடறியார் தன்னுண்மை நன்கு. சுங

அறிவாஞ் சுயஞ்சோதி யன்னியம்போற் றோன்றி
அறிவை மறைத்தகலு மன்றிப் - பிறிதன்றே
அன்னியமாக் காண்பவெலா மையோ வெறுந்துயரே
எந்நிலையாற் றுய்த்திடினு மிங்கு. சுச

அத்துவித மன்றி யயலெல்லாம் பேதமயம்
எத்துணிவாற் சாதித்து மெவ்வெவரும் - யுத்திக்

கவிரோத மாகா தனுபவத்துக் கேதாம்
துவிதமறி யார்சொல்லுஞ் சொல். சரு

உயிருருவா நிற்கி னுலகுருவாத் தோன்றும்
உயிரருவா நிற்கிலதா வொன்றும் - வியனுலகும்
சிற்சொருப மாநிற்கிற் சிற்சொருப மாவிளங்கும்
தற்சொருப பேதமதாற் றான். சாசா

வெற்ற வெளியன்றி வேறொன்றிங் காயிலிலை
வெற்றவெளி நாட்டமதில் வேறாகா - துற்றுணர்ந்து
தீர்ப்பதுவே தீர்ப்பாந் திரிபாகு மேனையவை
தீர்ப்பெனினு மேலோர் திகைத்து. சாஎ

உருவமெலா முற்றுணரி லோயா வெளியாம்
அருவாம் வெளியி லழுந்தித் - திரிபின்றி
ஆயுங்காற் சங்கற்ப மன்றி யிலையதனை
ஆயுங்கால் மெய்யுணர்வே யாம். சாஅ

மெய்யுணர்வை யுற்றுணரில் மேல்கிழொப் யின்றியே
ஐயந் திரிபின் றகன்றொளிரும் - பையப்
பழகப் பழகப் பறக்குந் துயர்கள்
பழயபற் றோடே பணிந்து. சாகூ

அதுநானென் றுகு மனுபவமீ தூர
அதுநழுவி நானதுவா மப்பால் - எதுவுமில
தாகிமன வாக்குக் கடங்காது நிற்பதுதா
னருநிலை முத்திமுடி வாம். எ0

உடலிலக்கா லன்றி யுணர்விலக்காற் செய்யும்
திடங்கொண்ட தீர்வதுவே தீர்வாம்-உடலுயிரன்
றாதலினு லுண்மையதிங் கத்துவிதம் வேறலவே
ஈதறியா தெம்மதமு மே. ௭௧

உணர்விலக்கிங் கென்பதுதா னேயாது சாயா
துணர்வுதனைக் கண்டோத லுண்மை-யுணர்விலார்
காணப் படாததினுற் கைக்கொள்ளோ மென்றுரைப்பார்
வீணுக்கே யாமிவர்சொல் வீடு. ௭௨

உணர்விலக்கா லன்றே யுணர்விலக்க ணங்கள்
உணர்வுதனி லொத்திருப்ப துண்டோ-உணர்வுடையோர்
கண்டே யுரைத்தார்கள் கட்டுரையின் றீதுண்மை
கண்டவரே யேற்பார்கள் காண். ௭௩

நானெனற்கு மெய்வடிவம் ஞானமே வேறில்லை
ஏனையவை பொய்வடிவ மீங்கழியும்-ஞானமதைக்
கண்டதுவா னின்றக்காற் காணுமோ சாவச்சம்
பண்டுருத்தா னுகியதாற் பண்பு. ௭௪

உருவமன்றிச் சாயை யுளதே லுளவாம்
தெரிவன்றி யெப்பொருளுந் தேரில்-தெரிவன்றி
ஆதார மாதேய மற்றபொரு ளில்லெனபம்
யாதேனு மைய மிலை. ௭௫

ஆதார மென்பதெவ னன்னியத்தைப் பற்றியே
ஆதார மன்றியிலை யன்னியமேல்-ஆதேயம்

அன்றதனுற் ருனெங்ங ளுதார மாம்பெரிய்யே
அன்றெனவு மாமெனவு மாம். ௭௬

அன்றல்ல வாமல்ல வப்பாலிப் பாலல்ல
நன்றல்ல தீதல்ல நானுமல-ஒன்றுபல
அல்லவென நின்ற ததுவாதல் முத்திநெறி
யில்லையே யெம்மதத்து மே. ௭௭

இவ்வண்ணங் கண்ட விவன்றன் னனுபவத்தை
யெவ்வணமுங் கோணு தியம்பியே-செவ்விதா
யேத்திக் குருபரனை யேகித் தனதிடத்தில்
நீத்திருந்தான் கற்பனைக ணின்று. ௭அ

---

அத்துவிதவிளக்கம் முற்றிற்று.

படலம் ௧அ-க்கு ஆ கவி ௲௨௬௬



திருச்சிற்றம்பலம்.

# நாட்டபேதவிளக்கம்.

போகசிந்தை நாட்டமொடு போகந் தவிர்நாட்டம்
ஏகநாட்ட மிம்மூன்று மீங்கிசைக்கும்-ஆகமங்கள்
அவ்வவ் வளவா யனைத்து மிலகுவதால்
இவ்விடத்திற் சொல்வ னிதை. க

அறிவுநாட் டந்தவிர்வே யச்சாதி மூன்றும்
அறிவுநாட் டத்தி லறியோம்-அறிவன்று
நாட்டந் தவிர்வே னனவென்ப ரந்நனவில
நாட்டுதும்யா மொவ்வொன்று நன்கு. உ

சிந்தைமய னாட்டஞ் செகத்துண்மை யாக்காட்டுஞ்
சிந்தைமய லொன்றையொன்றுத் தேர்ந்திடுதல்-சிந்தை
சுயஞ்சோதி லேசமெனச் சோதிக்க வெட்டார்
செயுங்கண் டனையென் செயும். ௩

விகாரமெனச் சோதித்தும் வேண்டிபோ கத்தை
விகாரவடி வுக்கே விழைவார் - விகாரவுரு
நானெனநாட் டந்தவிர நாடறியார் கண்டனைதான்
ஈனமுறு தென்சிறக்கு மே. ௪

மனிதாதி ரூபங்கள் மண்ணுருவாக் காணத்
தினைத்துணையு நாட்டமிலார் தேர்ந்திங்-கனைத்தையுமே
சித்துருவா நாட்டுவர்மேற் செய்கண் டனையுன்னில்
யித்தையொத்த மூடமெங்கு மில். ரு

இல்லையென தாய்தலின்க ணெப்பொருளுங் காட்டறியார்
இல்லையெனச் சொன்னலு மேலாதார்-வல்லார்
வேதாந்த கண்டனையில் வேடமன்றித் தற்காணர்
கீதாந்த போதகரிற் கீழ். சா

நானுரென் றெண்ணமிலார் நாடறியார் கண்டறியார்
ஊனு ருடலன்றி யுத்தமர்போல்-ஞானரசக்
கண்டனைசெய் தேகளிப்பர் கட்டடங்காப் பேதையரோ
டண்டப் புரட்டரென லாம். எ

தனக்கென் றுளவடிவந் தான்சுயம்பாக் காட்டார்
தனக்கனிய முங்காட்டார் சற்றும்-மனச்சுயம்பும்
ஏற்க வுரையா ரெதுவாந்தங் கண்டனைதான்
தோற்குமோ வேதாந்தச் சொல். அ

மனநிலைக்கக் கற்றறியார் வாதுக்கே நிற்பார்
மனிதக் குழாம்வளைக்க வல்லார்-தனைத்தானே
காண வகையறியார் கண்டனையென் கண்டுரைப்பார்
நாணமின்றிச் சற்று நகைத்து. கூ

ஆன்மா வெலாமுடலன் ருயுங்கா லென்னதினை
ஆன்மா பலவொன்றோ வாங்கறியார்-ஆன்மாவைக்

கண்டறியார் கண்டனையேன் கற்பனைமெய் யாக்காண்பார்
துண்டப் பயல்கள் தொடர்பு. ௧0

உலகெங்கே தோன்றி யுடனே மறையும்
உலகைச்சோ திக்க வுதவார்-அலைவகலக்
கல்லார்வே தாந்தத்தைக் கண்டிக்க வென்கண்டார்
நல்லரர்முன் னென்னுவார் நன்கு. ௧௧

ஈதெல்லாந் துட்டசெய லென்றுணரக் கல்லாதென்
தீநகலர் நல்லரெனச் சேர்வதினல்-யாதுக்காம்
பொய்யைப்பொய் யாக்கிப் பொருளைப் பொருளாக்கி
மெய்யாக்கும் வேதாந்த மெய். ௧௨

இரும்பைப்பொன் னென்று லெவரேற்பர் மூடர்
வருந்திப் பொறுமையால் மாள்வர் - இருந்திருந்து
ஞாயத்தா லூகத்தா னுடுங்கால் வேதாந்தம்
ஞாயமய மாய்விளங்கு நன்கு. ௧௩

அறியாமை தன்னை யறிவென்று கொள்வர்
வெறியகலா ரிவ்வுலகை மெய்யென் - றுறுதியொடு
செய்ஞான கண்டனையைச் சிந்திக்கி லென்சிறப்பு
உய்வாருக் கேதா யுறும். ௧௪

தன்னிலையைக் கண்டு தனியா விருந்துதுயர்
தன்னை விலக்கத் தவியாதார் - இன்னவிதக்
கண்டனைசெய் தேகளிப்பர் கட்டடங்காத் துட்டரொடு
தொண்டர்செய் வாரோ துணிந்து. ௧௫

உடலன்றித் தன்னை யுயிரு மறியார்
உடல்பொருளாக் கண்டிங் குவப்பர் - மடையரிவர்
செய்ஞர்ன கண்டனையைச் சிந்திப்ப ரோபொருளா
மெய்கண்டார் சற்றே விழைந்து. கசு

ஒருபொருளுந் தீர வுணர்ந்தறியார் கேளார்
மருளே மிகப்படித்த வல்லார் - திரிபகலார்
செய்ஞான கண்டனை தான் றேன்மாரி பெய்தலொக்கும்
பொய்ஞானி யுள்ளும் புறம். கஎ

தன்னை விளக்குஞ் சகமயல்கா ணுதகற்றும்
உன்னுவான் சித்தா வொளிர்விக்கும் - இன்ன
மகிமைசெயும் வேதாந்த வாழ்வறியார் போலும்
இகல்வாரைக் காணுமிடத் திங்கு. கஅ

இல்லா விகார மெழுவானே னென்பர்பரத்
தெல்லா முணர்ந்தவர்போ லேதுமிலார் - சொல்லாலே
பாம்புவந்து போனதுபோற் பார்வைக்குத் தோற்றமின்றிப்
பாம்பெங்கே நாருண்மை பார். கசு

பாம்பாகக் காண்பானேன் பாம்பன்றாப் போவானேன்
பாம்புமுன் கண்ட பழக்கமெனின் - பாம்புருவாய்
ஆயதெது நின்றதெதிங் கன்று யறிவன்றோ
ஆயதிங்கு ஞான் றறி. உ0

நார்முன்னி ரிக்கூத்து நண்ணலெனச் சிற்சோதி
நேர்நிகழு மிம்மாயை நீயறிதி - பேர்மாயை

விர்த்தி நிவிர்த்தியதா மேவுமிரண் டாக்காண்டி
அர்த்தமிதென் றுயாதென் னங்கு. உக

பிரம விகாரமெனப் பேசுவதென் னூல்கள்
பிரமத்துக் கன்னியமாப் பேசுந் - திறமதனை
நீக்கற் கதுவு நிசமன்று தந்திரமே
தாக்கற்று நிற்பதற்குத் தான். உஉ

மாயையும் வேறன்றோ மாளாச் சுயஞ்சோதி
சாயையன்றி வேறன்று தான்விளங்க - மாயையெனச்
சொன்ன கருத்தறியாய் சொல்கற்றுப் பேசுவதென்
அன்னியமு மன்றதுவு மன்று. உ௩

மாயையன்றி யில்லைசக மாயையும் வத்துவுக்குச்
சாயையெனும் வேதாந்த சாத்திரங்கள் - மாயையெனல்
பொய்ப்பொருளென்றோதிய தாற் பொய்யேயனைத்துமெனல்
மெய்ப்பிரம மன்றியிலை வேறு. உச

புகன்றவிவர் போல்வரெலாம் போகசிந்தை நாட்டத்
தகலாத கள்வரென லாகும் - அகன்றவரேல்
சத்தென்ப ரோவுலகஞ் சான்றுரை வைவரோ
பித்தரெனல் பத்தாது பேய் உரு

சத்தானாற் காரியமாச் சாற்றுவதென் னிவ்வுலகைப்
பத்தர்போற் காட்டிப் பகட்டிடுவர் - மெத்த
மயல்கரந்து பூசிக்கும் வஞ்சகத் தாசர்
சுயவரே யையமிலை காண். உசா

என்ன படித்தாலு மிந்நிலையை யுய்த்துணரார்
அன்னியர்சொன் னூலு மவமதிப்பர் - இன்னோர்
மனிதமிரு கப்பிறப்பே மாறிலெவீ ழுன்மின்
புனிதம்போற் காட்டுநடை புக்கு. ௨௭

போகமகல் நாட்டமதோ புல்லின்பம் வேண்டாதிங்
காகமுதல் யாவையுமே யாய்ந்தாய்ந்து - மோகந்
தலைகாட்டா தேகச் சலியா நிலையில்
அலைவின்றி நிற்கு மகம். ௨௮

ஏகநாட்ட மாவ திருநாட்டப் பண்டிதத்தால்
ஆகுநிலை வேறன்றிங் காயுங்கால் - யோகியரே
அன்றி யெவரறிவா ரந்நிலையைத் தேர்ந்தளவிங்
கின்றறைதுங் கேண்மி னிதை. ௨௯

பூதமன்றித் தேகமிலை பூதமிலை வானன்றி
யீதுமிலை சிந்தையன்றி யிம்மனமும் - போதமன்றி
இல்லையா நந்தமன்றி யிப்போ தமுமில்லை
இல்லையிதுந் தானன்றி யே. ௩௰

என்றுய்ந்து சோதனையா லேகியேகித் தற்பதத்தில்
நின்றுநின்று தேர்ந்ததற்பி னேராக - அன்றுதனில்
ஏறியது போலே யிறங்குநிலை யுங்கண்டு
மாறின்றி வாழ்வதே வாழ்வு. ௩௧

ஏற்றத்தி லென்று யிறக்கத்திற் றுணுகித்
தோற்று [illegible]த்துமெனத் தோய்வற்றின் - றூற்றுஞ்

சுவாரியா நிற்பர் தூர மணிமை
யிகந்தா ரெனப்படுவ ரே. நஉ

இந்நிலையே காணென்ப ரேகநாட்ட மென்பதுதான்
இந்நிலைக்கு மேனாட்ட மில்லையே - பன்னுகலை
முத்தி முடிவிதுவே மோனநிலை தானுமிதே
சத்தியஞ் சத்தியமே தான். நங

தன்னு ளனைத்துமாய்த் தானனைத்தி னுள்ளுமாய்
மன்னுகக னம்போலும் வஸ்துநிலை - இன்னமுந்தான்
தானாகி யன்றாகிச் சார்ந்துஞ்சா ராதனைத்தும்
தானேதா னாகுநிலை தான். நச

மணகாலத் தின்புருவா மன்னு முலகம்
பிணகாலத் தன்றாப் பிறழ்வேன் - உணருமினே
நாட்டபே தத்தளவா நண்ணு முலகமெனல்
காட்டெவன்கொல் வேறாகக் காண். நரு

உண்மையாய்ப் பொய்யா யுணர்வுருவா யிவ்வுலகங்
கண்முன் னிலைக்களவாக் காண்பானேன் - திண்மையாக்
கொள்வதிதி லையமெவன் குன்றா வனுபவமே
தள்வரெவர் மூடரிதைத் தான். நசு

தற்பாவ மெங்ஙன் சகத்துருவாக் காணுமங்ஙன்
தற்பாவ மன்றியெங்ஙன் றான்காணும் - அற்புதமே
காணிற் பொதுச்சிறப்பாக் காணுமே யங்ஙனங்ஙன்
வீணென்ன லெங்ஙனமா மேல். நஎ

அவத்தைதொறுங் காண்பானே னந்தவாறே
அவத்தைதொறு நாமெங்ஙு ளுங்கே - அவத்தைதொறும்
எவ்வுயிருங் காண்பதனு லீதே யனுபவமாம்
எவ்விதத்து மையமிலை யிங்கு. ௩அ

கன்மபத்தி காண்டியிதைக் கைத்திங் கவமதிப்பார்
தன்மறதி பந்தமெனத் தாமறியார் - என்செய்வார்
நிட்காமி யத்தரலர் நீங்காச் சகசத்தர்
கட்காம லோபமுதற் காண். ௩௯

சிற்சோதி தானே செகசீவ ரீசரெனல்
சற்குருவா லன்றியெங்ஙன் ருன்விளங்கும் - கற்பனையே
சாத்திரத்தாற் றன்னினைவாற் ருன்கோட லையமிலை
தோத்திரத்தா லென்னே துணை. ௪௦

மூடந் தெளிவுபற்றி முத்திபந்தம் வந்ததினல்
ஓடுமே யிவ்விரண்டு மோடுமவை - நாடுங்கால்
தன்முயல்வா லன்றியொன்றுஞ் சாராது போகாது
தன்முயல்வே நாட்டமென ருன். ௪௧

நானெனலைக் காணரிது நானல்ல வல்லவென
நானெனலே யானந்த நாகும் - நானெனலைக்
காணூர் சகபரத்தைக் கண்டின் புறுவதெங்ஙன்
காணூர் சுயசுகத்தைக் காண். ௪உ

உத்தியினுற் காட்சியினு லோயாமற் சோதிக்க
இத்திறமென் ருர்க்கு மிலகுமே - முத்தியெனல்

இன்பமதே யவ்வின்ப மேகா நிரதிசயம்
தன்சொருபங் கண்டவர்க்கேதான். சரு

நாட்டபே தத்திலிலை நன்குணர்ந்து சற்குருவால்
நாட்டபே தத்தையொன்று நாடுபவர் - தாட்டா
மரைப்பொடி சிந்தைதனில் வைத்துப்பூ சிப்பார்
கரையிலா நந்தக் கடல். சசு

---

நாட்டபேதவிளக்கம் முற்றிற்று.

படலம் கக - க்கு ஆ கவி ககஎ0.



உ

திருச்சிற்றம்பலம்.

# சுக நிஷ்ட.



நாமோ சுகவடிவம் நம்மறிவிற் காண்பனவோ
நாமாயி லன்னியத்தை நாடுவதென் - நாமன்று
அன்னியமே லென்வெறுப்பிங் கப்போதப் போதத்தில்
என்னவிடை மேலென்று ணிங்கு. க

அன்னியத்தைத் தள்ளி யறியோ நமையெங்கும்
என்னவித மாத்தீர்ப்ப மிவ்வழக்கை - அன்னியமோ
தூலமொடு சாயையுரு சூனியமென் றிம்மூன்றுஞ்
சாலவிவை நாமன்று தான். ௨

அன்னியமா நின்றுணர்த லல்ல வறிவன்றி
அன்னியமன் றுண்மை யறிவேநாம் - இன்ன
தனுபவ மாகி லறிவின்ப மாவம்
பனுவலா வில்லை பயன். ௩

பதியே யுயிர்க்குயிராய்ப் பந்தமுத்திக் கேற்க
மதியின்ப மாவனெனில் மாண்பே - பதிதன்னைக்
கண்டோ வனுமானக் கட்டுரையோ வென்னவரில்
உண்டுகொலோ தக்கவிடை யோது. ௪

கண்டெனிற்காட்டென்பைகட்டுரையேற்றோற்றமென்பை
விண்டிடவா யில்லையெனின் வேண்டாதென் - கண்டுரைத்த
அந்நிலையை யென்பை யறியவழி யில்லையெனின்
என்னறிவிக் காதென்பை யிங்கு. ரு

இயற்கையெனி னின்ப மியற்கையோ துன்பம்
இயற்கையே யிவ்விரண்டு மென்னில் - இயற்கை
அவாவறுன்ப மன்றே யதுவருவ தேனோ
அவாத்தவறி லென்னி லறை. சு

அவாவிரண்ட தாயிற்றே யாராலோ வென்ன
அவாவி னியற்கையெனி னந்தோ - அவாவுதருன்
செய்கை முதலாமோ செய்வானை யன்றியென
செய்வா னியற்கையதேற் செப்பு. எ

தெரியாத செய்கையினாற் றிண்ணமே துன்பம்
தெரிந்தார்க் கறியாது சேர்தல் - தெரிந்திலன்யான்
செப்பென்ன வன்னோன் றிகைத்துச் சுபாவ மென்றான்
ஒப்புவரார் ஞாயமின்றி யுற்று. அ

பந்தம் விடுதியெனப் பட்டவவா வோரிரண்டாம்
எந்தவிதத் தாலியற்கை யேற்பதெவன் - இந்தவகை
செய்வானைக் காட்டிச் செயற்கையதே தீர்ப்பென்னும்
செய்வான் செயலென்னத் தேர்ந்து. கூ

அறிவறியா மைத்தவிரி லப்போ தெரியும்
நிறையின்பந் தானென்று நேரே - குறைவின்றி

ஈதுண்மை யீதுண்மை யென்றுமிதி லையமிலை
சாதுசங்கச் சேர்க்கையதாற் றான். ௧௦

மூடமதத் துண்மையிதின் முன்னிற்கா தேனுமிதை
நாடியுன்னு வாரருமை ஞாயத்தால் - மூடர்மயத்
தென்னுண்மை காண்பவரா ரில்லையதாற் போய்விடுமோ
தன்னிற்றா னாகியது தான். ௧௧

அறிவி னினைவு மறிவிற் கனவும்
அறிவிலே பாழு மறிவம் - அறிவதனால்
ஆகாயம் போலறிவென் றாய்ந்துணர்ந்த மையமிலை
ஏகாதெஞ் சித்தாந்த மிங்கு. ௧௨

விசாரணைக்கு முன்னுண்டாய் மெய்யா முலகம்
விசாரணைக்குப் பின்னேன் வெறுமை - உசாவுங்கால்
முன்னுளது பின்னெங்கே முன்னெங்கே பின்னுளது
இன்னதற்குத் தீர்ப்பென் னிசை. ௧௩

அவற்றின் விகாரமதே லாய்வார்க்கே யன்றி
எவர்க்கு மிலாதென்னை யிங்கே - அவர்க்குள்ள
சித்தத் திரிபென்னிற் சித்தமெனக் கொள்வதெவன்
அத்திரிபிக் கேதில்லை யாம். ௧௪

சின்னமவிச் சின்னத் திரிபின் றர்ம்மமெனில்
என்ன விபரீத மேற்பதெவன் - அன்னன்ன
ஆகாரந் தானாகி லங்ஙனங்ஙன் றோற்றுமெனல்
ஆகார மாய்க்கண்டே னாங்கு. ௧௫

பசுபதி பாசப் பகுப்பு நனவே
நிசவப வாதத்தா னினைவாம் - நிசமாக
ஆய்ந்துதெளி வாரேற்ப ராயாதா ரேனேற்பர்
மாய்ந்திடுமுன் கண்டிடுமின் வந்து. கசு

நினைவே சமஷ்டி நினைவே வியஷ்டி
நினைவிலாக் கேவலத்தி னீகாண் - இனையவிவை
இல்லாமை யெவ்வெவர்க்கு மெந்நாளு மாயிடுதல்
வல்லையோ நீமறுக்க வந்து. கஎ

நினைவே சடசித்தா நிற்றலைக் காண்டல்
அனைவர்க்குங் கூடாத தாங்கே - தனைக்கண்ட
ஞானியரு ளாலன்றி நன்குதெளிந் தாரேனும்
ஞானியெங்கே யென்றோடி நாடு. கஅ

அனைத்துநினைப் பேயாயி னுக்குமோ வற்பம்
அனைத்துணின் றோராதென் னந்தோ - தினைத்துணையும்
என்னிற் படைப்பாயி னேன்றிரியு மவ்வினமா,
இன்னதுபோ லன்றியெங்கு மில். க௯

இயற்கை யெனினு மிதுகா ரணமோ
இயற்கையென லாயுங்கா லெங்கும் - அயலின்றி
நிற்றற்கே தென்னை நினைப்பொன்றே கண்டிலையோ
முற்று நினைவே முதல் உ௦

நினைவி னிசவடிவை நீகாணி னன்றே
இனையவெலா நீயறிவை யிங்கே - தினையளவும்

ஐயமின்றி யென்ன வடிவீழ்ந் தருளிங்ஙன்
மெய்யனே யென்றேத்த மேல். உக

அன்னோனுக் கேற்க வருளி விளக்கியபின்
தன்னையன்றி யொன்றுமிலை தானன்று - தன்னையே
ஆநந்த மென்றங் கயலாகா தேநின்றான்
ஆனந்த மாக்கடலி லாழ்ந்து. உஉ

அறிவே சுகசொரூப மன்னியமொன் றுண்டேல்
அறிவன்றி யுண்டென்ன லாகும் - நெறிமுறையில்
ஆயுங்கா லில்லையதா லாநந்த மேயறிவாந்
தாயநிலை யீதே துணிவு. உரு

சிற்சொரூபம் வாழி சிறந்தமறை நால்வாழி
சற்குருவின் றாள்வாழி சற்சனர்க - ளற்புதமாம்
ஆன்மசங்கம் வாழி யனுகூலர் வாழியவே
தான்றான தாகவுயிர் தான். உச

---

சுகநிலை முற்றிற்று.

படலம் - உ0-க்கு ஆக கவி கககஅச.



உ

திருச்சிற்றம்பலம்.

# இந்துவேதமகத்துவம்.

உலகி லனந்தமத முண்டவற்றின் வேதம்
பலவுமுண்டு மிக்கதெது பார்த்திங் - கலைவின்றிச்
சும்மா ரிருக்கவதைச் சொல்லென் றடிவீழ்ந்தான்
எம்மால் கணிக்கரியா னிங்கு. க

இந்துவேத மொன்றே யெவைக்குஞ் சிறந்ததெனச்
சிந்தைமய றீரத் தெளிவுற்றோம் - எந்த
வினாவுக் கெனினும் விடைபஞ்ச மில்லை
வினாவிலெங்ங னென்றறைது மேல். உ

கன்மபத்தி ஞானமெனக் கட்டுரைக்கு மூன்றெனவே
கன்மமது யாகாதி கன்மங்கள் - தன்போகம்
மேன்மே னுகர்தற்கு வேண்டுபவர்க் கேயாகும்
ஏன்கொள்வர் மற்றையவ ரிங்கு. ௩

போகசலிப் புற்றோர்க்குப் புந்திபரத் தேயென்றும்
ஏகுமதாற் பத்தியவர்க் கேயுரித்தாம் - ஆகையினாற்
பத்தி விதித்ததிதாம் பற்றிரண்டும் விட்டிடுவோர்க்
கித்துவிதத் திச்சையெழா திங்கு. ச

ஞானரசத் தன்றி நணுகாது சிந்தையயல்
ஞானரசம் போன்றிடினு நண்ணிடினும் - ஆனதுகொண்
டாங்கவர்க்கே ஞான மறைந்ததுவே தக்கருத்தை
யீங்கிதுவா மென்றே யிரு. ௫

அததற்குத் தக்கா ரதிகாரி யல்லார்
அததற்கிங் காயிடினு மாகார் - எதெதற்கும்
பாத்திரரே யல்லர் பகடிகளே யையமிலை
சாத்திரம்பொய் சொல்லாது தான். ௬

விதிவிலக்கா நிற்கும் விதித்தமூன்று காண்டம்
மதிவழியே செல்லாது மாற்ற - விதிப்பானேன்
போகமியல் பாயிருக்கப் போகத்தைப் போக்காது
ஆகமங்க ளெங்ஙனுண்மை யாம். ௭

தடுக்கினு மாகார் தமதிட்டம் போக்கார்
நடக்கும் வழியே நடத்தி - யிடக்குறுங்காற்
காட்டித் திருப்பிற் கடிதிற் றிரும்புமெனும்
நாட்டமதாற் சொல்லிற்று நன்கு. ௮

அருந்தல் பொருந்த லவாவியற்கை யேனும்
அருந்தல் பொருந்தல்மிகை யாக்கிப் - பெருந்தந்
திரத்தாற் சுருக்குஞ் சிறிதுசிறி தாக
உரங்கொண்டு கேளிதனை யுற்று. ௯

வாமபூசையானு மணத்தானு மாக்களிட்ட
வேமத்துக் குட்படல்போ லீங்கிசைந்து - நேமம்போற்

காட்டி முழுதுங் களைவிக்கு மூட்டாது
நாட்டுமோ விம்மறைபோ னன்கு. ௪0

பூர்வபட்ச சித்தாந்தப் போக்கு நிலையுணர்த்திப்
பூர்வபட்ச சித்தாந்தப் போக்கதனுல் - யார்க்கும்
விதிவிலக்கைக் காட்டிவிமலமாக்கு மந்தத்
திதின்மகிமை போலெங்கு மில். ௧௧

பிணிக்குவெல்லங் காட்டியெதிர் பிள்ளை யழைத்துப்
பிணிக்கும்மருந் தூட்டுவர்போற் பேணி - யின்னக்கமுறப்
போகத்தைக் காட்டிப் புனிதஞான மூட்டுமறை
மோகப் பிணிக்கு முனிந்து. ௧௨

இதுகாறுங் கன்ம மியம்பினே மேலே
பதியிருப்பைக் காட்டிப் பகர்தும் - எதிரில்
உலகிருப்பாற் கர்த்தா வொருவனுண் டென்று
பலவிதத்தாற் கூறும் பகிர்ந்து. ௧௩

விதிபத்தி மார்க்கமென மேலே விதித்து
அதற்குத் தக்கமுறை யாங்கே - யிதுவிதுவென்
றேற்ற பலன்விதித்திங் கெவ்வுயிருஞ் சன்மார்க்கத்
தேற்ற நெறிசெலுத்து மே. ௧௪

தெய்வமொன் றென்று தெளிவுற்ற வேதம்பின்
தெய்வம் பலவாகச் செப்புவதென் - உய்வதெவன்
வேடிக்கை காட்சி வினோதர்க்கு மெய்பொய்க்கும்
நாடி யுரைத்ததனை நாடு. ௧௫

இவர்க்கே பலமூர்த்த மெண்ணிலாக் கோயில்
இவர்க்கே திருவிழா வெங்கும்-இவர்க்கே
விரதாதி யாகுமெனு மெய்யன்பர்க் கெற்றுக்
குரியர் மனச்சாட்சி யொன்று. ௧௬

மனச்சாட்சி யென்று மனதினு முன்னூர்
மனமறியப் போகசிந்தை மாறூர்-இனையரலர்
மாப்பூசைக் கென்றகற்று மற்றையர்க்கே காற்றுமறை
காப்பர் விதிவிலக்கைக் காண். ௧௭

கிரியையொடு மானதமுங் கேடிலாப் பூசை
இருவகைய தென்னு மிவற்றுட்-கிரியைக்கே
தக்கா ரருமை தகாதா ரிலாரில்லை
மிக்க புரளி விழைந்து. ௧௮

உருவல் லதனை யுருவாகச் செய்து
திருவிழா வாதி செயலேன்-அருவாகக்
கொள்ளிற் குறிபாவங் கொள்வதின்றிப் பாழாகுங்
கள்ளமயல் போவதெங்ஙன் காண் ௧௯

குறிபாவம் போக்கலெங்ஙன் குன்று மயலேல்
குறியைக் குறியாக் குறித்து-நெறிமுறையே
சற்குருவை யண்டிற் றனியே விளங்குமெனும்
சிற்சோதி யெங்குஞ் செறிந்து ௨0

அகண்டமும் பாவனையே யல்லவோ யுண்மை
அகண்டமெனல் கற்பிதமே யன்றேல்-அகண்டமாப்

பாவிப்பைத் தள்ளியெங்கே பாவனைநின் சூக்கவுடல்
பாவித்த னுன்னையே பார். உக

கண்ட மகண்டமிது காணுங்காற் றற்பாவம்
அண்டர்பிரா னென்றுணர்த லற்பரே-உண்டோ
உணர்வென்சொன் ஞலு முளவறியா மூடர்க்
குணரவதைச் சொல்லுவன்கே ளுற்று. உஉ

பலநினைவி லொன்று பகவானென் றுன்னல்
பல்வாகி னில்லை பகவான்-நிலையின்றி
அந்நினைவு மேகு மரைக்கணத்தி லென்னுமிடத்
தென்னசிறப் புண்டிங் கிசை. உ௩

அதினாலே பூசை யரைநாள் முழுநாள்
விதிமுறையே செய்யென்று வேதம்-விதித்தவகை
கண்டிலிரோ நின்னினைவே கண்ட மகண்ட மெனல்
உண்டுகொலோ வைய முணர். உ௪

தானுன்னல் முன்னகண்டஞ் சற்றுந் தனக்கிலைபோல்
தானுன்னல் பின்னுமிலை தன்னினைவில்-ஏனறியார்
யார்க்கு மனுபவமே யெல்லாந்தற் பாவமெனல்
தீர்க்குநுஞ் சிந்தாந்தந் தேர். உ௫

கண்ட மகண்டமெனல் கண்டிலம்யாங் கேவலத்திற்
பண்டுநினை வின்றதனாற் பார்த்திலையோ-உண்டோ
சிறிதேனு மைமபுந் திரிபிவற்றுட் காண்டி
குறிகொண்டு செய்பூசை கோன். உ௬

தனக்கென் றிலாதுரிமை தானவனு மட்டும்
மனப்பூசை போதிக்கு மாண்பை-நினைத்திலைகொல்
இப்பத்தி தன்னை யெவர்மறையு ஞானமெனுந்
தப்பென்னு நான்மறையுந் தான். ௨௭

இதுகாறும் பத்தி யிசைத்தே மினியாம்
அதிசயஞா னத்தை யறைதும்-மதிவழியே
செல்லாது கேட்டி சிறிதுசிறி தாவின்று
சொல்லாது சொல்வன் றுணிந்து. ௨௮

ஞானமென்பர் தன்னையன்றி நன்காய்ந் துணர்ந்ததனை
ஞானமல்ல வென்றுணர்த்து ஞானநூல்-ஞானமதோ
எல்லாம் படித்துணர்ந்த தெவ்வறிவோ வவ்வறிவை
நல்லாய் படித்துணர்த னன்கு. ௨௯

வித்தையிலெல் லாமிதுவே மேலான வித்தையெனும்
வித்தையெனல் ஞானமென்பர் மேலோர்கள்-வித்தை
அயலறிவ தென்ப ரறியதா ரென்றே
மயலகன்று நிற்பர் மகிழ்ந்து. ௩0

ஞானமென லெம்மதத்தும் நாடறியார் கேட்டறியார்
ஞானமென்பர் பத்திதனை ஞானமிலார்-ஞானம்
பரமபர மென்னப் பகுப்பாக நிற்கும்
பரமபர மல்லவொன்றே பார். ௩௧

பரமபர மெனனல் பராபர மென்றாகும்
பரமபரத் துண்மைநிலை பார்க்கப்-பிரித்ததுகாண்

ஒன்றே பராபரமென் றோதினு லென்னபயன்
என்று மொழியா மிவர்க்கு. ௩௨

சற்குருவாற் பேதித்துத் தான்றெளிந்தார்க் கொன்றாகச்
சிற்பரம தாவிளங்குஞ் சித்தியார்க்-கற்பநிலை
யர்விளங்குஞ் சொல்லாலே யன்பர்போர் காட்டிடினுந்
தேவியல்பைத் தேர்வதென்றே சென்று. ௩௩

என்றுவியாச ரியம்பியபின் னுண்மகிழ்ந்து
அன்றடியில் வீழ்ந்துண்மை யாங்கடைந்து-சென்று
நனவிற் சுழுத்திநிலை நண்ணித்தா னுன்
இணையதே தீர்ந்தநிலை யென்று. ௩௪

அடியார்கள் வாழி யருமறைகள் வாழி
தடுத்தாண்டான் றுள்வாழி சங்கை-விடுவித்த
ஆத்தரடி வாழி யருள்பெறுவோர் தாள்வாழி
காத்தளிக்க வின்பக் கடல். ௩௫

---

திருச்சிற்றம்பலம்.

இந்துவேதமகத்துவம் முற்றிற்று.

படலம் உக-க்கு ஆ கவி கஉஉக.



உ

சிவமயம்.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி.

## ஆ.

ஈ.



உ.

